# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Tuesday, 26th April 1960.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half-past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Statement by Mr. Michael Hoffman about Small-scale Industries*

*S.N.* 12 *Q.*—SRI A. A. RASHEED. Will the Hon. the Minister for Industries be pleased to state whether the attention of the Government has been drawn to the statement of Mr. Michael Hoffman, Leader of the World Bank Mission now on tour of Madras State, that "Small-scale Industries" can neither help the country to become self-sufficient nor solve the problem of unemployment and small-scale industry is a luxury ?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir. Government have seen the Press report.

SRI A. A. RASHEED : May I know whether the Government agree with the views expressed by Mr. Hoffman ?

THE HON. SRI R. VENKATARAMAN: Government do not express opinions in answer to an interpellation and they only say generally what action is taken.

SRI A. A. RASHEED : May I know whether the Government hope to increase production and solve the unemployment problem by laying greater emphasis on small-scale industries in our State ?

THE HON. SRI R. VENKATARAMAN : On this matter, there is considerable difference of opinion among the greatest economists and industrialists all over the World. I have received only yesterday a documented thesis from the United Nations Economic Division laying great emphasis on small-scale industries as the panacea for industrial backwardness as well as for solving the unemployment problem in the less-developed countries of the World. So, there is no point in entering into any controversy over the matter.

SRI K. VINAYAKAM : Sir, is not the statement made by Mr. Michael Hoffman quite contrary and derogatory to the policies pursued by our Government and may I know whether the Government persist in continuing the policy as adumbrated in our Small-scale Industries scheme ?

THE HON. SRI R. VENKATARAMAN : Experts like Doctors differ. We take everybody's opinion, but do not accept all of them.

[26th April 1960

Sri N. K. PALANISAMI : ஸ்மால் ஸ்கேல் இன்டஸ்ட்ரீஸ் விஷயத்தில் கட்டிடம் கட்டுவதற்கான மூலதனம் அதிகமாகச் செலவிட வேண்டியிருப்பதால் மெஷினரி வாங்க முடிவதில்லை. ஆகவே, கட்டிடம் என்னும்போது, எந்தக் கட்டிடமாக இருந்தாலும், அதற்கு லைசன்ஸ் கொடுக்கும் முறையிலே இருந்தால் அது அபிவிருத்தியாகும் என்று சர்க்கார் நினைக்கிறதா ? அப்படியானால், அதுபற்றி என்ன நடவடிக்கை எடுக்கப்படும் ?

The Hon. Sri R. VENKATARAMAN : சிறு கைத் தொழில் களுக்கு இப்பொழுதே லைசன்ஸ் தேவை இல்லை. ஐந்து லட்ச ரூபாய்க்குக் குறைவாகவோ ஐம்பது நபர்களுக்குக் குறைவாகவோ உபயோகப்படுத்தும் தொழில்களுக்கு லைசன்ஸ் தேவையில்லை என்று இருந்ததை இப்பொழுது விவரித்து, விஸ்தரித்து, பத்து லட்சம் ரூபாய் அளவுக்கு மூலதனம் போடுகிற வரையிலும் லைசன்ஸ் தேவை இல்லை என்று செய்திருக்கிறார்கள். இது சம்பந்தமாக கனம் அங்கத்தினர்கள் இன்னும் மேற்கொண்டு விஷயங்கள் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால், ஏஷியன் ரீஜினல் கான்பெரன்ஸ் டில்லியில் 1957-ம் வருஷம் நடந்தது ; அதில் 'ஸ்மால் ஸ்கேல் இன்டஸ்ட்ரீசும் ஆசிய நாடுகளும்' என்பது பற்றி நல்ல விவரமான ஒரு ரிபோர்ட் இருக்கிறது. அதையும் பார்க்கும்படியாகக் கேட்டுக்கொள்ளு கிறேன்.

Sri S. NAGARAJA MONIGAR : அந்த வெளிநாட்டு மனிதர், நமது இந்தியாவினுடைய தற்போதைய நிலைமை பூராவையும் நன்கு உணர்ந்திருக்கிறாரா ? இன்றைய நிலையில் பெரும் தொழில்களுக்கு இங்கே போவதற்கு மிகுந்த கஷ்டங்கள் இருக்கின்றன ; இன்னும் வெகு நாட்களுக்கு கஷ்டங்கள் இருக்கும். ஆகையால் கிடைத்ததைக்கொண்டு, சிறு தொழில்களைக் கொண்டுதான் இந்தியாவில் முன்னேற வேண்டும் என்பதையும் அந்த வெளி நாட்டவர் அறிந்திருக்கிறாரா ?

The Hon. Sri R. VENKATARAMAN : இது கனம் அங்கத்தின ருடைய அபிப்பிராயம்.

Sri A. A. RASHEED : Is it a fact that small-scale industries are more suitable to small countries with high standard of living rather than to big countries like ours ?

The Hon. Sri R. VENKATARAMAN : It is again a matter of opinion. I can only invite the attention of the hon. Member to the report on Small-scale Industries by the Asian Regional Conference held in Delhi in 1957. It is a matter of interest and so I may be permitted to read one sentence out of it. "In principle, small-scale industries seem to fit into the economic conditions of most Asian countries better than large-scale production. It generally implies relatively much labour which is abundant in a greater part of Asia and it economises capital and supervisory and managerial skill which are generally scarce.

Sri A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, நம்முடைய இராச்சியத்தைப் பொறுத்த வரைக்கும் சிறு ரகத் தொழில்கள் தான் பெரும்பான்மையாக இருந்து வருகின்றன. ஆனால், இந்த உலக தூதுக் குழுத் தலைவர் அவர்கள் சொன்ன அந்த வாக்கியத்திலிருந்து, நம்முடைய நாட்டைப் பொறுத்த வரையில் கன ரகத் தொழில்கள் அதிகமாக இருந்தால்தான் வாழ்க்கைத் தரம் உயரும் என்பதை உணர்ந்து அரசாங்கம் அதற்கேற்ற வகையில் நடவடிக்கை எடுக்குமா ?

The Hon. Sri R. VENKATARAMAN : உலக பாங்குக்காரர் சொன்னது ஒரு அபிப்பிராயம். அதற்கு மாறான அபிப்பிராயம் பலமாக இருக்கிறது. அதற்கு மாறான அபிப்பிராயம் ஆசிய நாடுகளைப் பற்றியும் பின்தங்கிய நாடுகளைப்பற்றியும் பலமாக இருக்கிறது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

26th April 1960]

*District Board High Schools*

*813. *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) மாவட்ட ஆட்சி மன்றங்களை கலைத்துவிட்டதின் காரணமாக, உயர் நிலைப் பள்ளிகளின் நிர்வாகத்தை எப்படி நடத்துவதென்ற முடிவு எடுத்தாகிவிட்டதா ?

(ஆ) அப்படியாயின் அதன் விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI S. M. ANNAMALAI : மாவட்டக் கழகங்களைக் கலைத்ததற்குப் பிறகு அந்த செகண்டரி கிரேட் பள்ளிகளைச் சர்க்காரே நேரடியாக நடத்துவது என்ற கொள்கை இருக்கிறதா ? அப்படியானால், "செகண்டரி எடுகேஷன் ஆக்ட்" என்ற சட்டம் வரும் என்று சொல்லப்பட்டதே அந்தச் சட்டம் எப்பொழுது கொண்டுவரப்படும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதெல்லாம் பரிசீலனையில் இருக்கிறது.

*Fee levying schools*

* 814. *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சம்பளம் வசூலிக்கும் பள்ளியாக இருந்து, சர்க்காரின் சம்பளம் வசூலிக்கக்கூடாதென்றும் உத்தரவினால் பாதிக்கப்பட்ட பள்ளிகளை நகர சபையாரை எடுத்துக்கொள்ளும்படி உத்தரவிடப்பட்டிருக்கிறதா ?

(ஆ) அதன் விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Non-fee levying schools*

* 815 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government are aware of any cases of non-fee levying schools collecting special fees and donations from the students; and

(*b*) if so, the action taken to prevent such unauthorized collections ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) Yes, Sir ; one such case has come to Government's notice.

(*b*) The question of making provision in the rules to check unauthorized levies in schools is under examination.

SRI K. VINAYAKAM : Do the Government prohibit the collection of donations towards the maintenance and upkeep of the schools ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, donations as such are not prohibited. But, when students are admitted on the basis of payment of donations, it ceases to be a donation.

[26th April 1960

SRI M. K. SOMASUNDARAM : சில கான்வென்ட் பள்ளிகளில் 1-வது வகுப்பிலிருந்து நான்காவது வகுப்பு வரையில் கட்டணம் வாங்கு கிறார்கள். அவர்களுக்கு கவர்ன்மென்டிலிருந்து ஏதாவது பணம் கொடுக்கப்படுகிறதா ? அல்லது அவர்களே வசூலித்துக்கொள்ளலாம் என்று உத்தரவிடப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அவை தனிப் பள்ளிக் கூடங்கள். அவைகளுக்கு இருக்கும் விதிகள் வேறு.

SRI V. K. KOTHANDARAMAN : சில பாடசாலைகளில் ட்யூஷன் பீஸ் என்ற வகையில் ப்ரைவேட்டாக கட்டணம் வாங்கிக்கொண்டு சொல்லிக் கொடுப்பதாக இருப்பதும், அதனால் பெற்றோர்கள் கஷ்டப்பட்டுக்கொண் டிருப்பதும் அரசாங்கத்திற்கு தெரியுமா ? அப்படி வசூலிக்கக் கூடிய நிலைமை இருக்குமானால், அதைத் தடுக்க சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் முதலில் சொன்ன பதிலில், ஒரு பள்ளிக்கூடத்தில் இம்மாதிரி வசூல் பண்ணினதாக புகார் வந்திருக்கிறது என்று சொன்னேன். அதுபற்றி டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன் வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார். பொதுவாக, எப்படி இம்மாதிரி கட்டணங்கள் வசூல் செய்வதைத் தடுப்பது என்பது இப்பொழுது ஆலோசனையில் இருக்கிறது.

SRI S. NAGARAJA MONIGAR : முழு மூச்சில் சட்ட திட்டங்களை தனியார் துறையிலுள்ளவர்கள் அமுலாக்குவது என்றால், அந்தப் பள்ளிக்கூடங்களுக்கு மிகவும் கஷ்டமானதல்லவா ? தனியார் துறை யிலும் பள்ளிக்கூடங்கள் நடக்க வேண்டுமென்றால், அது விஷயத்தில் சற்று தாராளமாக அரசாங்கம் இருக்க வேண்டுவது நியாயம் இல்லையா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனியார்த் துறை பள்ளிக் கூடம் என்று சொல்லும்போது, அதற்கு உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் பூராவும் சர்க்காரே கொடுத்துவிடுகிறது. அதற்குமேல் அட்மினிஸ்ட்ரேடிவ் கிராண்ட் என்ற வகையில் 15 சத விகிதம் என்று கொடுத்துக்கொண்டி டிருந்ததை இப்பொழுது 20 சத விகிதம் அளவுக்குக் கொடுக்கின்றோம். ஆகையால், தனியார் நடத்துவது என்றால், நடத்தும் பொறுப்புத்தான் அவர்களுக்கு இருக்கிறதே தவிர, உபாத்தியாயர்கள் சம்பளம், மற்ற நிர்வாகச் செலவு எல்லாவற்றையுமே சர்க்கார்தான் ஏற்றுக்கொள்ளு கிறது.

SRI N. K. PALANISAMI : கட்டணம் வசூலிக்கக் கூடாது, " இல்லீகல் கலெக்ஷன் " கூடாது என்ற வகையில் சர்க்காருடைய உத்தரவு இருந்தும், பல மானேஜ்மென்டார் நடத்தும் பள்ளிக்கூடங்களிலே அதிகப்படியாக கட்டணம் வசூலிக்கிறார்கள், என்று கம்ப்ளெயிண்ட், ஏதாவது அனுப்பினாலுங்கூட, அந்த மானேஜ்மென்டாரைத்தான் அதிக மாக விசாரிக்கிறார்களே தவிர, கம்ப்ளெயிண்ட் எழுதி அனுப்புகிறவரை விசாரிப்பதில்லை. இதனால் டெபுடி இன்ஸ்பெக்டர்கள் உண்மையான காரணத்தைக் கண்டுபிடிக்க முடிவதில்லை. ஆகையால், நேரடியாக யார் கம்ப்ளெயிண்ட் செய்தார்களோ அவர்களையே விசாரித்து தகவல் அனுப்பவேண்டுமென்ற முறையில் சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒரு புகார்தான் வந்தது. அந்தப் புகார் பேரில் விசாரித்ததில், அது வாஸ்தவம் என்று கண்டுபிடிக்க பட்டிருக்கிறது. அந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டுமென் பதற்கும் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. புகாரே இல்லாமல், யாரையோ விசாரித்தால் அவர்கள் எடுத்துச் சொல்வார்கள் என்று சொல்வது எனக்குப் புரியவில்லை.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, சம்பளம் வசூலிக்காத பள்ளிகளுக்குத்தான் அரசாங்கம் உதவி கொடுக்கப்படும், சம்பளம் வசூலிக்கின்ற பள்ளிகளுக்கு அரசாங்க உதவி கொடுப்பதில்லை

26th April 1960]

என்ற முறையை இப்பொழுது அரசாங்கம் புகுத்தியிருக்கிறது. ஆனால், வெள்ளைக்காரர் காலத்திலே, சம்பளம் இல்லாதபடி பள்ளிக்கூடம் வைப்பவர்கள் அவர்களுக்கு மிகுந்த ஆர்வம் இருப்பதால் அவர்கள் எப்படியும் பள்ளிக்கூடத்தை நடத்துவார்கள் என்றும், சம்பளம் வைத்து நடத்துகிறவர்களுக்கு உதவி பண்ணினால், அவர்கள் ஊக்கப்படுவதற்கு வசதியாக இருக்கும் என்ற காரணத்தினால், அந்த முறை கடைப் பிடிக்கப்பட்டது என்று தெரியுமா? அதனால் பள்ளிக்கூடங்கள் அதிகமாக நாட்டில் பரவிவந்தன. அரசாங்கம் கடைப்பிடிக்கும் முறை காரணமாக நாட்டிலே அதிகப்படியாக பள்ளிக்கூடங்கள் ஏற்படுவது தடைப்படுகிறது என்பதை அரசாங்கம் உணர்ந்து இருக்கிறார்களா? உணர்ந்திருந்தால், அதை அரசாங்கம் புனராலோசனை செய்வார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது திராவிட முன்னேற்றக் கழகத்தின் அபிப்பிராயம் என்று நினைக்கிறேன். ஆங்கிலேயர் காலத்தில் அதிகப் பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டன, ஆங்கிலேயர் காலத்தில் அதிக சுபிட்சமாக இருந்தது என்று திராவிட முன்னேற்றக் கழகம் நினைத்துக் கொண்டிருப்பது பரிதாபப்படவேண்டிய நிலைதான். இன்றைக்கு பள்ளிக்கூடங்கள் திறக்கப்படுவது தடைபட்டு இருக்கிறதா என்பதற்கான புள்ளிவிவரங்களை அச்சடித்து வைக்கப்பட்டிருக்கிறது. இந்த ஐந்து வருஷத்திற்குள் 10,000-க்கு மேற்பட்ட பள்ளிகள் திறக்கப்பட்டிருக்கின்றன. ஆங்கிலேயன் காலத்தில் இந்த அளவை எட்டிப் பார்த்திருக்க முடியாது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*Non-fee levying schools*

* 816 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether it is a fact that the Government have issued a Government Order that no fees of any nature should be collected from students in all elementary aided schools;

(*b*) if so, whether the Government are aware that in spite of such a Government Order, number of aided schools are collecting money in the name of games-fees and donations; and

(*c*) if so, the steps taken to enforce this Government Order?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Orders have issued to the effect that no fees should be levied in Standards I to V of elementary schools if they want Government aid.

(*b*) Only one such case has come to Government's notice.

(*c*) The question of making provision in the rules to check unauthorized levies in schools is under examination.

SRI N. MARUDACHALAM : ஆரம்பப் பாடசாலையிலிருந்து ஹைஸ்கூலில் சேரவேண்டும் என்றால், முதலிலே சம்பளம் கட்டவேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஹரிஜன பிள்ளைகளுக்கு அப்படி கட்ட முடியவில்லை என்று சொன்னால் தங்களுக்கு தலைமை அதிகாரியிடமிருந்து உத்தரவு வரவில்லை என்றும், சம்பளம் கட்ட வேண்டும் என்றும் சொல்கிறார்கள். ஆகவே, முன் கூட்டியே உத்தரவுகளைப் பிறப்பிக்க கவனம் செலுத்தப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது ஹரிஜன மானியத்தைப் பொருத்தது. அந்த மந்திரிக்குக் கேள்வி போட்டால் நல்லது.

SRI K. VINAYAKAM : Whereas it is expedient for the private managements to maintain the schools by making provision for sweeping, repairs, renewals, etc., apart from payment of salaries to teachers which is met by the Government, what is the *modus operandi* which

[26th April 1960

the Government suggest for meeting the cost of maintenance of non-fee levying schools which have already been established and are being run in the City of Madras?

THE HON. SRI C. SUBRAMANIAM : We are giving 15 per cent administration grant and in hard cases the Director of Public Instruction is given discretion to raise it to 20 per cent. I do not see what further aid can be given. In fact, thousands of schools are being run only on this basis. I do not see how the City alone stands on a different footing.

SRI J. MATHA GOWDER : அமைச்சரவர்கள் பதிலிலே ஐந்தாவது வகுப்பு வரையில் சம்பளம் வசூலிக்கக் கூடாது என்று சொன்னார்கள். 5-க்கு மேல், 8-வது வரை உள்ள ஆரம்பப் பள்ளிக் கூடங்களில் சம்பளம் வசூலிக்கலாமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஐந்தாவது வரை வசூலிக்கக் கூடாது என்று கண்டிப்பாக உத்தரவு இருக்கிறது. சாதாரணமாக 7-வது வகுப்பு வரை வசூல் செய்வதில்லை.

SRI A. VEDARATNAM : ஸார், சம்பளம் வசூலிக்கக் கூடாது என்று உத்தரவு போட்ட பிறகு, மாகாணம் பூராவுமே அது நின்று விட்டதா ? அல்லது இப்பவும் சர்க்கார் உதவி வேண்டாம் என்று நடத்தும் பள்ளிகள் இருக்கின்றனவா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில பள்ளிக்கூடங்கள் அப்படியிருக்கின்றன ; 40 அல்லது 50 அப்படி இருக்கின்றன.

SRI P. G. MANICKAM : வெயிற்கால விடுமுறை மாதங்களில் விசேஷ கட்டணத் தொகை வசூலிப்பது, தலைமை ஹரிஜன இலாகாவிலிருந்து வசூலிக்கலாம் என்று மாகாண கமிட்டியில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது ; அதன் பேரில் சர்க்காருடைய அபிப்பிராயம் என்ன ? மாகாண கமிட்டி தீர்மானம் அமுலாக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்கும் இதற்கும் சம்பந்தமேயில்லை.

SRI N. MARUDACHALAM : வருஷத்தில் ரூ. 1,200 வரை வருமான மானால் சம்பளம் கட்ட வேண்டியதில்லை என்கிறார்கள். விலை வாசி உயர்வின் காரணமாக இந்த லிமிட்டை ரூ. 2,000 என்று உயர்த்துவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : முதல் ஐந்து வகுப்பு வரை எத்தனை வருமானம் ஆனாலும், சம்பளம் கட்டவேண்டியதில்லை.

SRI A. A. RASHEED : May I know whether levy of games fees is prohibited? If so, may I know whether any grant is given to elementary schools for the purchase of sports articles?

THE HON. SRI C. SUBRAMANIAM : With regard to games fees I would like to have notice.

SRI P. S. ELLAPPAN : எங்க தாலூகாவிலே, மற்ற இடங்களிலும் சரி, மிஷின் ஸ்கூல்கள், கதோலிக்க ஸ்கூல்கள் இருக்கின்றன ; அங்கே ஹரிஜன மாணவர்களும், கிறிஸ்தவ மாணவர்களும் படிக்கிறார்கள். ஆனால் அவர்கள் பகல் போஜனம் இல்லாமல் இருக்கிறார்கள். டிஸ்டிரிக்ட் போர்ட், லேபர் ஸ்கூலுக்குதான் என்கிறார்கள். ஆகவே, மிஷின் கதோலிக்க ஸ்கூல், ஹரிஜன, கிறிஸ்தவ மாணவர்களுக்கும் பகல் போஜனம் கிடைக்க உத்தரவு போட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : It is only a suggestion.

26th April 1960]

*Community Development Programme*

* 817 *Q.*—Sri N. MARUDACHALAM : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சென்னை மாநிலத்தில் 1959 வருடத்தில் சமூக அபிவிருத்தி திட்டத்தின்கீழ் கொடுக்கப்பட்ட கடன்கள் எவ்வளவு ?

(ஆ) மேற்படி கடன்கள், இந்த வருடத்தில் வசூலானவை எவ்வளவு ?

(இ) கடன்களை சரிவர வசூலிக்காததற்குக் காரணம் என்ன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) It is presumed the hon. Member refers to loans granted during the financial year 1958–59. The loans granted during 1958–59 under Community Development Programme amounted to Rs. 1,39,49,052.

(*b*) Recoveries of loans granted will begin only after the expiry of one full year from the date of disbursement.

(*c*) Does not arise in view of the answer to clause (*b*) above.

Sri N. MARUDACHALAM : ஸார், இந்தப் பணம் வசூலிக்க முடியாததற்குக் காரணம் என்ன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : ஒரு வருஷம் கழித்த பிறகுதான் வசூலிக்கப்படும். வசூலிக்கும் கட்டம் ஆரம்பிக்கவில்லை.

Sri S. M. ANNAMALAI : ஸார், கடன் கொடுத்து இரண்டு மூன்று வருஷங்கள் ஆகியும், பணம் வசூல் ஆகாமல் இருக்கிறது ; சமுதாய நலத் திட்ட அதிகாரிகள் கடன் கொடுக்கிறார்கள். ரெவின்யூ அதிகாரிகள் வசூல் செய்கிறார்கள். ஆகையால், இந்த இரண்டு இலாகாப் பொறுப்பை மாற்றி, ஒரு இலாகாவே கொடுப்பது, வாங்குவது இரண்டையும் செய்ய ஏற்பாடு செய்வார்களா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இந்தக் கேள்வி 1958–59-க்கு உரியது. இதில் வசூலிக்கும் கட்டம் ஏற்படவில்லையென்றேன். சாதாரணமாக வசூலாகாமல் இருக்கிறதற்குக் காரணம்கூட, எம். எல். ஏ. கள், எங்கள் தொகுதியில் நிலைமை கெட்டுப் போச்சு, வசூல் பண்ணக் கூடாது என்றெல்லாம் செய்யும் கிளர்ச்சியால்கூட வசூல் ஆகாமல் நிற்கிறது.

*All-India Tourist Development Conference*

* 818 *Q.*—Sri T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Madras Government was represented in the All-India Tourist Development Conference held in Trivandrum during November 1959;

(*b*) the decisions taken in the Conference;

(*c*) the reasons for changing the venue of the Conference from Cape Comorin to Trivandrum;

(*d*) the nature of the schemes, if any, proposed by the Madras Government representative for the development of Cape Comorin as a Tourist Centre; and

(*e*) the reasons for the delay in implementing the water-supply scheme in this centre ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

[26th April 1960

(*b*) The Tourist Development Council being an official advisory body its decisions are mostly of a recommendatory nature which are communicated to Governments for consideration and action. No useful purpose will be served in making known these recommendations.

(*c*) This Government are not aware of the reasons.

(*d*) It has been proposed to construct a rest-house at Cape Comorin costing Rs. 1.70 lakhs the cost being met entirely by the Government of India; and to make a provision of Rs. 20,000 in the Plan for providing conveyance at Cape Comorin for Tourists; this expenditure being met from State funds.

(*e*) The estimate for water-supply distribution system at Cape Comorin is awaiting administrative sanction of the Board of Revenue.

SRI T. S. RAMASWAMI : May I know whether the scheme for water-supply to the entire Kanyakumari town will be implemented at least this year ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The information is laying of water mains has been completed. As soon as administrative sanction is granted, arrangements will be made for the distribution of water.

SRI T. S. RAMASWAMI : Now, the difficulty is the cost of the scheme has to be borne by the panchayat which is a very poor panchayat. In view of the importance of Kanyakumari town as a tourist centre, will the Government take the responsibility of meeting the cost of the scheme ?

THE HON. SRI C. SUBRAMANIAM : That is a different question. First, water will be supplied and then it can be examined who is to bear the cost.

SRI B. K. LINGA GOWDER : May I know whether the Government have any proposals to construct houses in Ootacamund to attract persons in the low income group ?

THE HON. SRI C. SUBRAMANIAM : That does not arise out of this.

SRI A. A. RASHEED : May I know whether there is any Tourist Advisory Committee in our State and if so may I know who the members are and whether they are appointed for life or for what period ?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is a Tourist Advisory Committee and if a separate question is put on that subject, I can give the details.

### *Tourist Information Bureaus*

* 819 *Q.*—SRI M. P. SARATHI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதில் அளிப்பாரா—

(அ) இந்த நாட்டைக் கண்டு களிக்க வரும் வெளி நாட்டவருக்கு உதவி செய்ய (**Tourist Information Bureaus**) எங்கெங்கு உள்ளன ?

(ஆ) அவர்கள் செய்யும் பணி எத்தகையது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) சுற்றுப்பயணக்காரர்களுக்குத் தகவல் தரும் நிலையங்கள் மதுரையில் ஒன்றும், உதகையில் மற்றொன்றுமாக இரண்டு நிலையங்கள் உள்ளன.

26th April 1960]

(ஆ) அந்தந்த மாவட்டங்களில் சுற்றுப்பயணம் செய்வதற்கு உரிய இடங்கள் எவை, அந்த இடங்களில் போக்குவரத்து, இடவசதி, சுற்றிப் பார்த்தல் முதலியவற்றிற்காக என்னென்ன வசதிகளும் சௌகரியங்களும் கிடைக்கும் என்பதைப்பற்றி அந்த இடங்களைக் காண வருபவர்களுக்கு அந்நிலையங்கள் தகவல் தருகின்றன. நம் நாட்டில் சுற்றுப் பயண முக்கியத்துவம் வாய்ந்த இடங்களைக் குறித்து இந்த நிலையங்களில் பல புத்தகங்கள் வைத்திருக்கிறார்கள். இவை சுற்றுப் பயணக்காரர்களுக்கு சந்தர்ப்பத்துக்கேற்ப இலவசமாக வழங்கப்படும் அல்லது விற்கப்படும்.

*Small savings*

*820 *Q.*—Sri A. A. RASHEED: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether during the collection of small savings, any amount was embezzled; and

(*b*) if so, the amount involved and the action taken thereon?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) There were a few instances of temporary misappropriation of Small Savings Collections made by the Village Officer Agents in the districts of North Arcot, Madurai and Coimbatore during the Special Drives conducted by the Government in the year 1958–59. In those cases, where temporary misappropriation of Small Savings Collections made by the Village Officer Agents were proved suitable disciplinary action was taken against the delinquent agents. The total amount of money temporarily misappropriated in the above three districts is Rs. 2,040.

No other case of embezzlement of Small Savings Collections has been brought to the notice of the Government so far.

(*b*) Does not arise.

Sri A. A. RASHEED : May I know whether the amount temporarily misappropriated has been recovered?

The Hon. Sri C. SUBRAMANIAM : It was recovered and that is why I said there was temporary misappropriation. Otherwise it would be misappropriation.

Sri V. K. KOTHANDARAMAN : சிறு சேமிப்பு வசூலில், பணத்தைக் கையாடல் செய்வதன் காரணமாக ஒரு சில மணியகாரர்கள் தண்டனைக்கு ஆளாகி இருக்கிறார்கள். அப்படி இருந்தும் மீண்டும் அவர்களையோ அல்லது அவர்களின் உறவினர்களையோ அந்தப் பதவியில் வைப்பதன் காரணமாக மீண்டும் இந்த ஊழல் ஏற்படுவதற்கு காரணம் இருக்கிறதல்லவா? அதனால் ஸ்டாண்டிங் ஆர்டரிலிருந்து அதை மாற்றி திருத்தி அமைக்க சர்க்கார் முயற்சி செய்யுமா?

The Hon. Sri C. SUBRAMANIAM : இதில் சாதாரணமாக கையாடல் பல இடங்களில் நடந்துகொண்டிருக்கிறது. ஒருவரும் பணத்தை எடுத்துக்கொண்டு போய்விடவில்லை. அதை அனுசரித்து இந்தச் சந்தர்ப்பத்தில் இப்பொழுது இருப்பதைவிட உத்தரவுகள் பிறப்பிக்க வேண்டியதில்லை. குற்றம் கடுமையாக இருந்தால் அதன் பேரில் நடவடிக்கை எடுத்து அவர்களை நீக்குவதற்கு அதில் இடம் இருக்கிறது.

[26th April 1960

*Tamil Nad Polytechnic, Madurai*

* 821 *Q.*—SRI V. SANKARAN : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the measures taken and the schemes implemented to develop the Tamil Nad Polytechnic at Madurai town; and

(*b*) whether the Government are aware that a number of students studying there including Scheduled Castes and Backward Classes are suffering for want of accommodation in the existing hostel ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

SRI A. V. P. ASAITHAMBI : மேஜையின்மீது வைக்கப்பட்ட அறிக்கையில் தமிழ் நாடு பாலிடெக்னிக் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதற்கு முன் திராவிட நாடு பாலிடெக்னிக் என்று இருந்தது. அந்தப் பெயர் என் மாற்றப்பட்டது ? அதற்குக் காரணம் என்ன என்பதைச் சொல்ல முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த விவரம் இப்பொழுது என்னிடம் இல்லை. தனிக்கேள்வி போட்டால் அதைப்பற்றி ஆராய்ச்சி செய்து பதில் சொல்லுகிறேன்.

SRI V. SANKARAN : 1959–60-ம் வருஷ ஆரம்பத்தில் பல பின் தங்கியவர்கள், பல ஷெடியூல் காஸ்ட்ஸ் மாணவர்களுக்கு அங்கே இடம் கிடைக்காமல் அதாவது ரெசிடென்ஷியல் ஸ்காலர்ஷிப்கள் கிடைக்காமல் இருந்தது. அப்படிப்பட்ட வசதியை பூர்ணமாக பூர்த்தி செய்வதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இன்னொரு ஹாஸ்டல் கட்டுவதாக திட்டம் போடப்பட்டிருக்கிறது. அதற்கு பணமும் ஒதுக்கப் பட்டிருக்கிறது.

SRI T. T. DANIEL : May I know the strength of accommodation in the existing hostel ?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is provision for 120 students in the existing hostel. It is proposed to construct another hostel for the accommodation of another 192 students.

SRI M. K. SOMASUNDARAM : ஹாஸ்டலில் இடம் கிடைக்காத காரணத்தால் ஹரிஜன மாணவர்கள் ஹோட்டல்களில் தங்கி சாப்பிட்டு வந்தார்கள். அதனால் அவர்கள் அங்கு பணம் கட்ட வேண்டியதாக இருந்தது. அப்படிக் கட்டியதால் கடன் பட்டிருக்கிறார்கள். வருஷக் கடைசியில் அந்தக் கடன் பணத்தைக் கட்டுவதற்கு அந்தப் பணத்தை சாங்க்ஷன் செய்வதற்கு அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கேள்வி ஹரிஜன இலாகா மந்திரிக்குப் போட வேண்டும்.

SRI S. NAGARAJA MONIGAR : திராவிட நாடு எது என்ன என்று தெரியாமல் இருக்கும்போது இன்பக் கனவு கண்டு நினைத்துக்கொண்டிருந்தால் ஒரு காரியமும் ஆகாது, அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிப்பது போல் இருக்கும். அது போல் அந்தப் பெயரை வைக்க முடியவில்லையாகும் அல்லவா ? அப்படிப்பட்ட பெயர் இந்தப் பக்கத்தில் இருக்க முடியாது அல்லவா ? பக்கத்திலிருந்து வருகிறவர்களுக்கு இந்த மாகாணப்பெயர் இருக்க வேண்டியது அவசியம் அல்லவா ?

MR. SPEAKER : இந்தக் கேள்வி அவுட் அப் ஆர்டர்.

---

[a] Printed as Appendix I on page 516 infra.

26th April 1960]

SRI K. VINAYAKAM : திராவிட நாடு பாலிடெக்னிக் என்ற பெயரை வைத்தால் மற்ற ராஜ்யங்களிலிருந்து வரக்கூடிய மாணவர்கள் இங்கு சேர்ந்து படிக்க வசதி இல்லாமல் போய்விடும் என்றும், தமிழ் நாடு பாலிடெக்னிக் என்ற பெயரை வைத்தால் பக்கத்திலுள்ள ராஜ்ய மாணவர்கள் வந்து சேர்ந்து படிக்க வசதி ஏற்படும் என்ற சூழ் நிலையில் அரசாங்கம் அதன் பெயரை மாற்றி வைத்திருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஒரு ஆராய்ச்சிக் குழு நியமித்து அதை எப்படி மாற்றுவது என்பதைப்பற்றி யோசிக்கப்படும்.

*Polytechnic for Girls*

*822 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் பெண்களுக்கென பாலிடெக்னிக் ஏற்படுத்தும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

(ஆ) அப்படியானால், அதன் விபரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI A. VEDARATHNAM : பெண்களுக்கு தொழில் கல்வி பயிற்சி அவசியம் இல்லை என்று அரசாங்கம் கருதுகிறதா ? இப்பொழுதுள்ள தொழில் பயிற்சி பள்ளிகளில் பெண்கள் சேர்ந்து படிக்க வசதி செய்து கொடுக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: பெண்களுக்கு தொழில் கல்வி பயிற்சி அவசியம்தான். அதனால் பாலிடெக்னிக்கில்தான் சேர்ந்து படிக்கவேண்டும் என்பது இல்லை. எந்த பாலிடெக்னிகில் வேண்டுமானாலும் அவர்கள் சேரலாம். இப்பொழுது அவர்களுக்குத் தான் சகல உரிமைகளும் கொடுக்கப்பட்டிருக்கிறதே. அதனால் அவர்கள் எதில் வேண்டுமானாலும் சேரலாம். பாலிடெக்னிக்கில் ஒருவரும் இது வரையிலும் வந்து சேரவில்லை.

*Government publications*

*823 Q.—SRI M. P. SARATHI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இந்த அரசாங்கமே நடத்தும் மாத இதழ்கள், மாதமிருமுறை இதழ்கள், வார இதழ்கள் எவை எவை ?

(ஆ) சுமார் எவ்வளவு பிரதிகள் ?

(இ) அவைகளை வெளியிட ஆகும் செலவு என்ன ?

(ஈ) சந்தாவாக கிடைக்கும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) *to* (*d*) The particulars are not readily available. A statement will be placed on the table of the House as soon as the particulars are gathered.

SRI A. V. P. ASAITHAMBI : அரசாங்கம் ஒவ்வொரு இலாகா செய்திகளை வெளியிடுவதில் பலவிதமான பத்திரிகைகள் செய்தி தாள்கள் மூலமாக வெளியிடப்படுகிறது. அப்படி வெளியிடுவதைவிட மாதம் ஒன்று அல்லது மாதம் இரு முறை என்கிற மாதிரி ஒரு இதழை அது அதிகப்படியான விலை வைத்தாலும் சரி, வெளியிட்டு அதில் எல்லா இலாகாவின் செய்திகளையும் வெளியிடுவதற்கு அரசாங்கம் முயற்சி எடுக்குமா ? அப்படிச் செய்வதால் செலவு குறைவாக இருக்கும் அல்லவா? அதைப்பற்றி அரசாங்கம் கவனிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் அவர்களே பிரிதிகளை அதிக விலைக்கு விற்க வேண்டும் என்று சொல்லு கிறார். சிலருக்கு சில விஷயங்களில்தான் அக்கறை இருக்கும். அப்படி

[26th April 1960

எல்லாவற்றையும் ஒன்ருக பிரசுரித்தால் புத்தகம் பெரியதாக இருக்கும். அதனுல் அநேகம் பேர்கள் அதை வாங்கமாட்டார்கள். அதனுல் புத்தகங்கள் செலவு ஆகாது.

*Tax-evasion*

*824 Q.—Sri A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) வரி கொடுக்காமல் ஏமாற்றுபவர்கள் விஷயமாய் நம் மாநில அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறதா?

(ஆ) மத்திய சர்க்கார் இவ் விஷயமாய் நியமித்த தியாகி கமிட்டி இதுபற்றி என்ன சிபாரிசு செய்திருக்கிறது?

(இ) அரசாங்கம் அதை ஏற்று அமுல் நடத்துமா?

The Hon. Sri C. SUBRAMANIAM: (*a*) Yes, Sir, whenever a case of tax-evasion is brought to the notice of the authorities concerned, the appropriate remedy provided under the relevant taxing statute is taken. A statement showing the various measures taken by Government to prevent evasion of taxes is also placed on the table of the House.

(*b*) The Tyagi Committee referred to by the hon. Member is the Direct Taxes Administration Enquiry Committee and its recommendations relate to Direct Taxes—mainly income-tax. A copy of the report of the committee published by the Central Board of Revenue, New Delhi, is placed in the Library of the Legislature.

(*c*) The recommendations of the Committee are under the examination of the Government of India and the question whether they can be usefully adopted in respect of the taxes levied by this State will be examined.

Sri A. VEDARATHNAM: இப்பொழுது மேஜையின் மீது வைக்கப்பட்டிருகிற ஏடு பத்து பக்கங்களுக்கு அதிகமாக இருக்கிறது. அதைப் படிக்க அவகாசம் இல்லை. அதனுல் அதை படித்துவிட்டு வந்து உப கேள்விகள் கேட்பதற்கு நாளைக்கு ஒத்தி வைத்தால் உதவியாக இருக்கும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

Mr. SPEAKER: சாதாரணமாக அப்படிப் பண்ணுவது இல்லை. அரை மணிக்கு முன்னதாகவே பதில்கள் மேஜையின் மீது வைக்கப்படுகிறது. அதனுல் படித்துவிட்டு சப்ளிமெண்டரி கேள்விகள் கேட்கலாம். அதற்கு வேண்டிய அவகாசம் கொடுக்கப்படுகிறது. ஆகவே சப்ளிமெண்டரி கேள்விகள் கேட்கலாம்.

Sri K. VINAYAKAM: Mr. Speaker, Sir, even though we come here at 8-15 a.m., often the fans are not released and it is sufficiently hot inside the Chamber. Therefore it is almost impossible for the hon. Members to sit down here and assimilate the matter. It takes at least half-an-hour to understand the implications of the statement and frame relevant supplementaries. So may I suggest . . .

Mr. SPEAKER: Let the hon. Member confine to one thing at a time. First the hon. Member must have made representations to the Hon. the Leader of the House to have the session at Ootacamund. If it is hot here, I am not responsible for that. Second, the Assembly doors are opened at 8 O'clock in the morning and it is open to hon. Members to come and study the relevant facts and papers.

---

a Printed as Appendix II on pages 517–525 infra.

26th April 1960]

SRI K. VINAYAKAM: Even at 8-15 the doors are not open . . .

MR. SPEAKER: If there are no members the doors will not be open and the fans will not work. We will open the doors even earlier if there are hon. Members coming and also make the fans work.

SRI K. VINAYAKAM: Sir, I am almost the earliest member to come to the Assembly and often I am at loggerheads with the staff here in requesting them to release the fans. Apart from that, may I suggest to the Government that the statements placed on the table of the House might be sent to our houses along with the question list? They are connected with the questions and if they are sent to us we will assimilate them during nights and come prepared.

MR. SPEAKER: Generally no answer is given till the question is actually put by the hon. Member concerned in the House. If we circulate the statements in advance and the hon. Member does not ask the question in the House; what is the position? It will be erroneous to send answers to the residence of Members.

SRI K. VINAYAKAM: Only the statements may be sent.

MR. SPEAKER: It cannot be done. The statements have connection with the main answer to the question. Only when the hon. Member puts the question on the floor of this House, the statements become of any value. I am afraid I cannot allow the statements accompanying answers to be circulated to members in advance.

SRI A. VEDARATHNAM: ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர். கேள்வி கேட்ட பிறகுதான் இந்தக் கேள்வி மேஜையின் மீது வைக்கப்பட்டதாகக் கருதப்படும் என்று சொல்லப்படுகிறது. கேள்வி கேட்பதற்கு அரை மணி முன்னதாகவே மேஜையின் மீது வைக்கப்படுவதால் அது கேள்வி கேட்பதற்கு முன்னதாகவே வைக்கப்பட்டதாக ஆகாதா? அதைப்போலவே அவைகளை வீட்டுக்கு அனுப்பி வைக்கலாம் அல்லவா?

MR. SPEAKER: இங்கே வைப்பதற்கும் வீட்டுக்கு அனுப்புவதற்கும் வித்யாசம் இருக்கிறது. அதனால் உப கேள்விகளை இப்பொழுது கேட்கலாம்.

SRI A. VEDARATHNAM: வரி கட்டாமல் ஏமாற்றுகிறவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அப்படி ஏமாற்றுவதன் மூலம் லட்சக் கணக்கான ரூபாயை பலர் சம்பாதித்து இருக்கிறார்கள். அவர்கள் மீது அரசாங்க உத்தியோகஸ்தர்கள் கேஸ் போடுகிறார்கள். அத்தகையவர்கள் மீது மத்திய அரசாங்கம் எதாவது நடவடிக்கை எடுத்து இருக்கிறதா, அப்படி வரி கொடுக்காமல் தபாய்க்கிறவர்கள் மீது எந்த விதமான நடவடிக்கை எடுக்கப்படுகிறது? அதைப்பற்றி தயவு செய்து விளக்கம் தெரிவிப்பார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இது மத்திய அரசாங்கத்தின் சமாசாரம். வருமானம் சம்பாதிக்கிறவர்கள் மீது வருமான வரி போடவேண்டும். இதை மத்திய அரசாங்கம் கவனித்துக்கொண்டிருக்கிறது என்று நம்புகிறேன்.

SRI A. VEDARATHNAM: தஞ்சை ஜில்லாவில் லாரி முதலியவற்றின் மூலமாக நெல்லை வெளி மாகாணங்களுக்குக் கொண்டுபோகிறபோது விற்பனைவரியைக் கூட டபாய்க்க முன்வருகிறார்களே, இதைத் தடுக்க என்ன நடவடிக்கை எடுக்கப்படும்? 9-00 a.m.

THE HON. SRI C. SUBRAMANIAM: சேல்ஸ் டாக்ஸ் ஏமாற்றாது இருக்க செக் போஸ்ட் போடப்பட்டு இருக்கிறது. நாம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டாலும் அதையும் மீறுகிறவர்கள் இருக்கத்தான்

[26th April 1960

இருக்கிறார்கள். உலகத்திலேயே இப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது. எல்லோரும் கொஞ்சம்கூட பாக்கி இல்லாமல், ஏமாற்றாமல் வரி கட்ட வேண்டும் என்றால் எல்லா மக்களும் மகாத்மாக்களாகத்தான் இருக்க வேண்டும்.

SRI T. S. RAMASWAMY: டபாய்க்கிறது என்கிற வார்த்தை தமிழா ? அது என்ன வார்த்தை ? பார்லிமெண்டரி வார்த்தைதானா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER: It is not English anyway. It is not a desirable word but anyway I cannot call it unparlimentary.

SRI S. NAGARAJA MONIGAR: இப்படி எல்லாத் துறைகளிலுமே ஈடுபட்டிருக்கிறவர்களில் திடீரென்று பணக்காரர்களாக ஆகிறவர்களைப் பற்றி மத்திய சர்க்கார் கவனம் செலுத்துவார்கள் என்றாலும்கூட நம் மாநிலத்தில் உள்ளவர்கள் பணக்காரர்கள் ஆனார்கள் என்றால் அது எப்படி என்கிற விஷயத்தை ஆராய நம் சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதற்கென்று தனி இலாகா போடுவது, இந்தச் செலவுக்காக வரி போடுவது என்பது எல்லாம் முடியாத காரியம். அவ்வப்போது யாராவது தவறு செய்திருக்கிறார்கள் என்று தெரியவருகிறபோது நடவடிக்கை எடுக்கப்படுகிறது.

SRI K. B. S. MANI: நில உச்ச வரம்புச் சட்டம் வரப்போகிறது என்ற காரணத்தினாலேயே தஞ்சை ஜில்லாவில் உள்ளவர்கள் பலவழிகளில் வரி கொடுப்பதை ஏமாற்றியிருக்கிறார்கள் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? அப்படித் தெரியவந்தால் அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: ஏமாற்றுகிறவர்கள் என்பது ஒரு இடத்தில் ஒரு நபர் என்று இல்லை. அப்படி நினைப்பது நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வது. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் மனதைத் துலக்கிப் பார்த்தால் நாமும் கூட குற்றம் செய்பவர்களாகவே இருக்கிறோம்.

SRI N. K. PALANISAMI: டாக்ஸ் எவேஷனுக்கு முக்கியமான காரணம் வரி அதிகமாக இருப்பதுதான். ஆகவே விற்பனை வரியின் டர்னோவர் லிமிட்டை அதிகப்படுத்துவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: ஏமாற்றுகிறவர்கள் வரி அதிகமாக இருந்தாலும் ஏமாற்றுவார்கள், குறைவாக இருந்தாலும் ஏமாற்றுவார்கள். இது ஒரு சாக்கேயொழிய வேறு ஒன்றும் இல்லை.

SRI A. A. RASHEED: May I know whether the Government have any information regarding the amount of tax evasion in our State and also the share of tax due to our State from such evasions ?

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, such a general question cannot be answered now.

SRI A. GOVINDASAMY: சிறந்த நிபுணர்களைக்கொண்டு விற்பனை வரியை ஏமாற்றுவதற்காகக் கணக்கு எழுதி வருகிறார்களே, இதைக் கண்டுபிடிக்க தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: இந்தக் கேள்வியை எனது சகா கனம் வெங்கட்டராமன் அவர்களிடத்தில் கேட்டால் அவர் எல்லா நுணுக்கங்களையும் பற்றி எடுத்துச் சொல்வார்.

26th April 1960]

SRI V. K. KOTHANDARAMAN : வரி கொடுக்காமல் ஏமாற்று கிருர்கள் என்று சொன்னுல் அதிகாரிகளால் போட்ட வரியைக் கொடுக்கா மல் ஏமாற்றுகிருர்களா ? அல்லது அதிகாரிகளால் வரி போட முடியாத படியே ஏமாற்றுகிருர்களா ? உதாரணமாக பஸ் முதலாளிகள் யார் யார் பேரிலோ வைத்து வரிபோட விடாமல் தப்பித்துக்கொள்கிருர்களே அப்ப டியா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பஸ்களுக்கு நாம் 'சீட்டுகளின்' பேரில் வரி போட்டு வாங்கி விடுகிறேம். பஸ் யார் பேரில் இருந்தாலும் பரவாயில்லே. பஸ் இல்லே என்று சொல்ல முடியாது. மற்ற விஷயங் களில் எப்படி ஏமாற்றுகிருர்கள் என்பது என்னேவிட கனம் அங்கத்தினர் களுக்கு நன்ருகத் தெரிந்திருக்கும்.

SRI A. VEDARATHNAM : மத்திய அரசாங்கத்திற்கு வரி கொடுக் காமல் ஏமாற்றுகிறவர்களாக இருந்தாலும் சுங்கம் முதலியவற்றின் மூலம் அவர்களேப் பிடிப்பது நமது அரசாங்கத்தின் கடமையாக இல்லேயா ? பொறுப்பு இல்லேயா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது அநேகமாக தியாகி கமிட்டியில் இருந்து வந்தது. இதுபற்றியெல்லாம் கேள்வி நேரத்தின் போது புள்ளி விவரங்கள் கொடுக்க என்னிடம் விவரம் இல்லே.

SRI A. V. P. ASAITHAMBI : வருமான வரியைக் கொடுக்காமல் ஏமாற்றுகிறவர்கள் விஷயத்தில் அரசாங்கமும், அரசாங்கத்தில் இருக்கிற இலாகாவும், அமைச்சர்களும் உடன்பாடாக இருந்திருக்கிருர்கள் என்பதை பிர்லா மாளிகை மர்மங்கள் என்று தனியாக புத்தகமாக திரு. ஜி. டி. நாயுடு அவர்கள் வெளியிட்டு இருக்கிருர்களே, அந்த இலாகாவையும், அதிகாரிகளேயும், அமைச்சர்களேயும் திருத்துவதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர்தான் மர்மங்களே எல்லாம் அதிகமாகத் தெரிந்து வைத்திருக்கிருர்கள். நான் அந்தப் புத்தகத்தைப் பார்த்ததும் இல்லே, படித்ததும் இல்லே.

*Appointment of High Court Judges*

* 825 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Chief Minister be pleased to state whether any decisions have been taken at the Conference of the State Chief Ministers held on the 20th March 1960 at Delhi, regarding the appointment of High Court Judges in the States?

THE HON. SRI C. SUBRAMANIAM: Certain matters relating to the appointment of Judges were discussed and it will not be in the public interest to disclose the details.

SRI N. K. PALANISAMI : ஜட்ஜுகள் நியமிக்கும் விஷயத்தில் மாகாண சர்க்காரின் சிபார்சு பேரில் நியமிக்கப்படுகிறதா ? எந்த அடிப் படையில் சிபார்சு செய்யப்படுகிறது ? இதை மாற்றுவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மாகாண சர்க்காரின் சிபார்சு பேரில்தான் நடைபெறுகிறது. புதிதாக மாற்ற முடிவு வேண்டி யது இல்லே.

SRI K. ANBAZHAGAN : உயர்நீதி மன்ற நீதிபதிகளுடைய நிய மனத்திற்கு நம்முடைய சர்க்காரின் சிபார்சுகளே ஒட்டி மத்திய சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுகிருர்களா ? நாம் சிபார்சுகளே அனுப்பி யிருந்தாலும் அவர்கள் அதை ஏற்றுக்கொள்ளாவிட்டால் அதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே முதல் சிபார்சு செய்யவேண்டியது ஹைக்கோர்ட். அதை மாகாண சர்க்கார் பரிசீலித்து இவர்களுடைய சிபார்சுகளேயும் அனுப்பி வைக்கிருர்கள். அங்கே அவர்கள்

சுப்ரீம் கோர்ட்டைக் கலந்து ஆலோசிக்கிறார்கள். எல்லோரும் ஒத்துக் கொண்டால் சரி. சில சமயம் ஹைக்கோர்ட் சொல்வதையோ, நாம் சொல்வதையோ ஒத்துக்கொள்கிறார்கள். சில சமயம் சுப்ரீம் கோர்ட் சொல்வதை ஒத்துக்கொள்கிறார்கள்.

SRI K. VINAYAKAM: As our Government have accepted the recommendations of the Law Commission regarding the appointment of Judges, have the Government come to the conclusion that if they accept the principles laid down by the Law Commission, brilliant type of men from our State will be excluded from the panel of names to be submitted to the Government as suggested by the Law Commission ?

MR. SPEAKER: It is quite a different question. If the Hon. Minister is prepared to answer I have no objection.

THE HON. SRI C. SUBRAMANIAM: With regard to the recommendations of the Law Commission, a separate question may be put.

SRI A. A. RASHEED: May I know whether any decision has been taken that High Court Judges should be appointed from different States instead of from the same State ?

MR. SPEAKER: The Hon. Minister has already stated that it is not in the public interest to disclose the details.

THE HON. SRI C. SUBRAMANIAM: I have already stated that the details cannot be disclosed now and I do not think that any amount of cross-examination will be of avail.

SRI N. K. PALANISAMI : முதல் மந்திரிகள் மகாநாட்டில் இப்போது இருக்கிற முறையை மாற்றி அமைக்கவேண்டும் என்று ஏதாவது முடிவு செய்யப்பட்டதா ?

MR. SPEAKER : முன்னாலேயேதான் " பதில் சொல்ல முடியாது " என்று சொன்னார்களே, அடுத்த கேள்வி 826.

*Integration of services of transferred personnel in the Education Department*

* 826 Q.—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether the integration of services of the transferred personnel in the Education Department is over and if so, the particulars thereof (including a copy of the Government Order) ;

(b) whether any Government Order was passed to keep up the ratio of 2:7 between the I-Grade teachers and II-Grade teachers in the Kanyakumari district as was followed before the date of Reorganization ;

(c) whether this Government Order was implemented; and

(d) if not why ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) The orders of integration have been passed only in the case of allottees to be absorbed in the State-wide categories in the Education Department. Integration in respect of posts which are borne on district-wide basis is under consideration. Two copies of the Government Order issued are placed in the Legislature Library.

26th April 1960]

(*b*) Yes Sir.

(*c*) No Sir.

(*d*) In the light of further facts brought to the notice of Government the matter is being re-examined and the orders will be issued as early as possible.

SRI T. S. RAMASWAMI: May I know whether it was a fact that at the time of the reorganization of States, the ratio of 2:7 was kept between the First Grade and Second Grade teachers of the erstwhile Travancore-Cochin State and if so, what further facts have been brought before the Government to change it ?

THE HON. SRI C. SUBRAMANIAM: The point for consideration is this. Persons who have come over to the Madras State from the Travancore-Cochin State should not suffer because of the transfer and certainly they are entitled to advantages which they would otherwise get if there had been no partition of the State. Therefore, we have to find out whether any particular person who wants to get Grade I, would have ordinarily got that grade if he had remained in the Travancore-Cochin State. Though that examination has been made on the basis of 2:7 ratio still it may not be applied mechanically in that ratio. The matter has been referred by the Director of Public Instruction to the Government and it is under the consideration of the Government.

SRI T. T. DANIEL: May I know, Sir, whether the Kerala Government have sent a communication to our State Government regarding this matter, and whether it is a fact that they represented to this Government that even if these transferred personnel continued in service there, many of them would not have got the I-Grade teachers' posts ?

THE HON. SRI C. SUBRAMANIAM: A reference was made to the Kerala Government, and it has been found that among the graduate teachers allotted to this State, as many as 35 persons would not have been promoted to Grade I even if the ratio was applied in the former Travancore-Cochin State Government.

SRI T. S. RAMASWAMI: According to section 106, if I remember aright, of the States Reorganization Act, are not the conditions of service to be maintained ?

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, the point for consideration is this. There are certain advantages in the rules which were prevalent in the former Travancore-Cochin State. There are certain advantages in this State also. The difficulty is that the persons belonging to Kanyakumari district want to have the advantages of both the States. They do not like the disadvantages of either the Travancore-Cochin State or the Madras State. That is the real difficulty. If they are prepared to have all the advantages and the disadvantages of either State, there would not be any difficulty. Or, if they are prepared to remain where they are with reference to the rules prevailing at the time of the partition, we will have no difficulty at all. The difficulty here is, and that is what hon. Members also perhaps want, they want that the advantages of both the States should be given to them.

[26th April 1960

SRI T. T. DANIEL: Sir, some of the teachers have opted for the Kerala Government service, and due to such option several vacancies of I-Grade teachers have arisen in that district. Will these posts at least be filled up by the teachers of the former Travancore-Cochin State on the basis of the ratio of 2 : 7 ?

THE HON. SRI C. SUBRAMANIAM: I have already stated that the matter is under the consideration of the Government. Early orders will be issued.

*Death Anniversary of Thiruvalluvar*

* 827 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI): கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) பிப்ரவரி மாதம் 16-ம் தேதியை திருவள்ளுவர் இறந்த ஆண்டு விழா (Death Anniversary) என்று கொண்டாடும்படியாக இந்த அரசாங்கம் சிபாரிசு செய்ததா ?

(ஆ) அப்படியாயின் அவ்வாறு செய்யக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) No, Sir.

(ஆ) Does not arise.

SRI S. M. ANNAMALAI: தமிழ் நாட்டிலே பெரியவர்களுக் கெல்லாம் பிறந்த தின விழா கொண்டாடுவது வழக்கம். மத்திய சர்க்கார் திருவள்ளுவர் இறந்த ஆண்டு விழா என்று வைத்திருக்கிறார்களே, இதை மாற்றி அமைப்பதற்கு நமது சர்க்கார் மத்திய சர்க்காருக்கு ஆலோசனை கூறுவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: திருவள்ளுவர் எப்போது பிறந்தார், எப்போது இறந்தார் என்று யாருக்கும் தெரியாது. இப்பொழுது டெத் அன்னிவர்சரி என்று திருவள்ளுவர் இறந்த ஆண்டுவிழா என்று ஒரு நாளைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். சாதாரணமாக இந்த நாளை எப்பொழுது வேண்டுமென்றாலும் கொண்டாடலாம், வழக்கமாக இருக்கிறது. அக்டோபர் இரண்டாம் தேதி வரக்கூடிய காந்தி ஜயந்தியை இரண்டு மாதத்திற்குப் பிறகும் கொண்டாடுகிறோம்.

SRI K. ANBAZHAGAN: பொதுவாக ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிற வள்ளுவர் பிறந்த மாதம் மாசி மகம் என்றும், இறந்தது வைகாசி அனுடம் என்றும் கூறப்படுகிறது. அவருடைய பிறந்த நாளும் இறந்த நாளும் தெரிகிற காரணத்தால், இறந்த நாளைக் கொண்டாடுவதற்குப் பதிலாக திருவள்ளுவர் பிறந்த நாளை கொண்டாடுவதற்கு ஏன் வற்புறுத்தக்கூடாது ?

THE HON. SRI C. SUBRAMANIAM: தமிழர் நெறியில் பற்றுக் கொண்டவர்கள் பிறந்த தினத்தைக் கொண்டாடுகிறோம். அவர்கள் இறந்த தினத்தைக் கொண்டாடுவதை சிறப்பாக நினைக்கிறார்கள்.

SRI K. VINAYAKAM: நமக்கு பிறந்த ஆண்டு இருக்கும்போது, ஏன் இதை திருவள்ளுவர் பிறந்த தினமாக வைத்துக்கொண்டாடக் கூடாது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: யார் யார் எதை வேண்டுமென்றாலும் வைத்துக்கொள்ளலாம். இதில் ஒன்றும் தவறு இல்லை.

SRI V. K. KRISHNAMURTHY: அனுபூதி நிலை எய்திய நாளைக் கொண்டாடுவது தமிழர் மரபு—தவறு இல்லை. இறந்த நாள் சிறந்தநாள்.

THE HON. SRI C. SUBRAMANIAM: தமிழ் புலவர்கள் மத்தியிலே போய் தீர்த்துக்கொள்ளவேண்டிய விஷயம். இருவருக்கும் தனியாக ஒரு கூட்டம் வேண்டுமானால் ஏற்படுத்தி அங்கே விவாதம் செய்து எது சிறந்தது என்று முடிவிற்கு வந்து அதை வேண்டுமானால் அரசாங்கத்திற்குத் தெரிவிக்கட்டும்.

26th April 1960]

*Reservation of seats for women in the State Transport buses.*

*827-A *Q.*—SRIMATHI HEMALATHA DEVI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதில் அளிப்பாரா—

. சென்னை நகரத்திலுள்ள அரசாங்க போக்குவரத்து பஸ்களில் பெண்களுக்கு என்று எத்தனை சீட்டுகள் ஒதுக்கப்பட்டுள்ளது ?

THE HON. SRI R. VENKATARAMAN: Twenty per cent (20 per cent) of the seats are reserved for women passengers in the rear of the State Transport buses in the Madras City.

SRIMATHI HEMALATHA DEVI : ஜனத்தொகையில் பாதிக்கு மேல் உள்ள பெண்களுக்கு அதற்கான சீட்டுகள் போதாது ? பல பெண்கள் குழந்தைகளுடனும் வாங்கிய சாமான்களுடனும் பஸ்ஸில் ஏறி பிரயாணம் செய்யும்போது உட்கார இடமின்றி பிரயாணத்தை நின்றுகொண்டு சமாளித்து வருகிறார்கள். இந்த நிலைமையை மாற்றுவதற்கு சரி பாதியான சீட்டுகளை அவர்களுக்கு என்று ஒதுக்கமுடியுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : ஜனத்தொகை அடிப்படையிலே இந்தச் " சீட்டு "களை ஒதுக்குவதில்லை. சாதாரணமாக பிரயாணம் செய்கிறவர்களைப் பொறுத்து இந்தச் " சீட்டு "-கள் ஒதுக்கப்படுகின்றன. இப்பொழுது 20 சத விகிதம் பெண்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. நம் நகரில் இருக்கும் பிரமுகர்கள் எல்லோரும் பஸ்களில் பெண்களுக்கு இடம் கொடுக்கும் பண்பு உள்ளவர்கள். அவ்வாறு இடம் கொடுக்கவில்லை என்று புகார் இதுவரையில் ஒன்று இரண்டுதான் வந்திருக்கிறதே தவிர, இப்பொழுது இருக்கிற நிலைமை சரியாகத்தான் இருக்கிறது.

SRIMATHI HEMALATHA DEVI : இப்பொழுது இருக்கும் நிலைமையை கனம் அமைச்சர் அவர்கள் சரியாக அறியாததற்குக் காரணம், அவர்கள் சொந்தக் காரிலேயே சென்று வருகிறார்கள். அவர்கள் பஸ்ஸில் பிரயாணம் செய்யவில்லை என்பதால்தான் பெண்கள் 20 சத விகிதம் தான் பஸ்ஸில் ஏறிச்செல்லுகிறார்கள் என்று நினைக்கிறார், அது சரியல்ல. பெண்கள் பஸ்ஸில் ஏறினால் ஆண்களில் ஒரு சிலர்தான் எழுந்து இடம் கொடுக்கிறார்கள். அமைச்சர் அவர்கள் கூறுவது போல பெண்கள் பிரயாணம் செய்யும்போது ஆண்கள் எழுந்து இடம் கொடுக்கும் காலம் வரும் வரையிலேனும் இம்மாதிரி சரிபாதி இடம் ஒதுக்கி கொடுக்க வேண்டும் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் உணர்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : 1957 எப்ரல் மாதம் வரை பஸ்ஸில்தான் போய்க்கொண்டிருந்தேன். அதற்குப் பிறகு பெண்கள் அதிகரித்து விட்டதாகச் சொல்வதை என்னால் நம்ப முடியவில்லை. தொடர்ந்து நெருக்கடி ஏற்படுகிறது என்று சொல்வது பொறுத்தம் அல்ல என்று சொல்ல விரும்புகிறேன்.

SRIMATHI HEMALATHA DEVI : குறிப்பாக மாணவர்கள் மாணவிகள் அதிகமாக போகிறார்கள் அதனால் நெருக்கடி ஏற்படுகிற காரணத்தால் பள்ளிக்கூட நேரத்தில் ஸ்பெஷல் பஸ்கள் விடுகிறார்கள் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பெண்களுக்கு 20 சத விகிதம் சீட்டுகள் கொடுத்திருப்பதனால் நெருக்கடி ஏற்படவில்லை. பள்ளி நேரங்களில் மாணவ-மாணவிகளுக்கு ஸ்பெஷல் பஸ் விடப்படுகின்றன.

[26th April 1960

*Women's education*

*827-B Q.—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) பெண்கள் கல்வி அபிவிருத்திக்காக 1958–59, 1959–60, வருடங்களில் சென்னை சர்க்காருக்கு மத்திய சர்க்காரால் அளிக்கப்பட்ட மான்யத் தொகை எவ்வளவு ?

(ஆ) இத்தொகை மூலமாக பெண்கள் கல்வி அபிவிருத்திக்காக என்னென்ன காரியங்கள் நடைபெற்று வருகின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) Under the Central Scheme for the Expansion of Girls' Education and Training of Women Teachers, the Government of India have conveyed their administrative approval for Rs. 8.13 lakhs as their share on the construction of quarters for women teachers employed in Elementary schools in rural areas for the years 1958–59 and 1959–60. They have also sanctioned Rs. 5.40 lakhs for provision of quarters for women teachers in rural areas under the 'Unemployment Relief Scheme' for 1958–59 and 1959–60.

(ஆ) Orders have been issued for the construction of 252 units of quarters, each unit consisting of two houses, and for 216 quarters under the 'Unemployment Relief Scheme' for women teachers employed in Elementary schools in rural areas.

MR. SPEAKER: I think the next question also refers to the same subject. That may also be answered now.

*Houses for women teachers*

*827-C Q.—A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) அசெம்பளியில் 22–9–58-ல் 392-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி பெண் ஆசிரியர்களுக்கு வீடுகட்ட அரசாங்கம் என்ன உதவி அளிக்க உத்தேசம் ?

(ஆ) எப்போது அது அமுலுக்கு வரும் ?

(இ) இதற்காக ஒதுக்கியிருக்கும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) & (ஆ) The Government have approved schemes for construction of quarters for women teachers employed in District Board Elementary schools in rural areas in districts other than the Kanyakumari district and in Elementary schools in the rural areas of the Kanyakuamri district. Government have permitted the construction during 1959–60 of 252 units of quarters, each unit to consist of two houses, under the Centrally Sponsored Scheme for expansion of Girls' Education and training of women teachers, and 216 quarters under the 'Unemployment Relief Scheme'.

(இ)—

| | RUPEES IN LAKHS. |
|---|---|
| (i) Centrally Sponsored Scheme .. .. .. | 13.26 |
| (ii) Unemployment Relief Scheme .. .. | 5.40 |

26th April 1960]

SRI P. G. MANICKAM : ஆரம்பப் பள்ளிகளில் ஒன்று முதல் மூன்றுவது வகுப்பு வரையில் பெண்களேயே ஆசிரியைகளாக நியமிக்க வேண்டுமென்று சட்டசபை கல்வி ஆராய்ச்சி குழுவினருடைய சிபார்ஸை அரசாங்கம் ஆமோதித்திருக்கிறது. ஆகவே பெண்கள் ஆசிரியர் பள்ளிகளை அதிகமாக ஆக்குவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ? அதோடு அமைச்சர் அவர்களுக்கு மத்திய அரசாங்கம் தெரிவித்திருப்பதை நான் இப்பொழுது ஞாபகப்படுத்த விரும்புகிறேன். எவ்வளவு தொகை தேவையானாலும் பெண்கள் அபிவிருத்திக்காக கொடுக்கத் தயாராகயிருக்கிறோம் என்று சொல்லியிருப்பதை ஞாபகப்படுத்துகிறேன். ஆகவே பெண்கள் நலனுக்காக ஆரம்பப் பயிற்சி பள்ளிகளை அதிகமாக்குவதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது, வீடு கட்டும் திட்டம். கல்வி மான்யம் வருகிறது, அப்பொழுது சான்ஸ் கிடைத்தால் பேசலாம்.

SRI A. VEDARATHNAM : பெண் ஆசிரியைகளுக்கு வீட்டு வசதி செய்து கொடுக்கும் இது, ஜில்லா போர்ட் பள்ளிகளில் இருக்கிற ஆசிரியர்களுக்கு மட்டுமா அல்லது அரசாங்க உதவி பெறும் பள்ளிகளில் உள்ள ஆசிரியைகளுக்கும் இது விஸ்தரிக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது எடுத்துக் கொண்டிருப்பது, 250 யூனிட்கள், 500 பேர்களுக்கு. இன்னொன்று, 216. ஜில்லா போர்ட் பள்ளிகள், அரசாங்க உதவி பெறும் பள்ளிகள் நிறைய இருக்கின்றன. இது தீர்ந்தால் பின் தனிப்பட்டவர்களுக்குக் கொடுக்க முயற்சி செய்யலாம்.

SRI R. SRINIVASA IYER : 1959–60-ல் சில வீடுகள் கட்ட பணம் ஒதுக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. எந்தக் கிராமப்புறங்களில் இந்த வீடுகள் கட்டப்பட்டிருக்கிறது, அல்லது கட்டப்பட இருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனி கேள்வி வேண்டும்.

SRI A. GOVINDASAMY : பெண் ஆசிரியர்களுக்கு வீடு கட்டுவதற்காக 2,000 ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். ஆனால் நிலத்தை கிராமத்தார் தானமாக தர வேண்டுமென்று வற்புறுத்தப் படுவதால் பல இடங்களிலும் பள்ளிக்கூடங்கள் கட்ட ஜில்லா போர்ட் சாங்க்ஷன் செய்தும் கூட கிராமத்தார் வீடு கட்டுவதற்கு நிலம் இனமாக கொடுக்காததால் அது தடைபடுவது தெரியுமா ? ஆகவே நிலத்தை அரசாங்கமே வாங்கிக் கொடுக்க முயற்சிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படி எனக்கு தகவல் இல்லை நிலம் கொடுப்பது மட்டும் அல்ல ஊர்க்காரர்களே கட்டிடமும் கூட கட்டி கொடுக்க முன் வந்திருக்கிறார்கள். அவர் ஊரில் நிலங்கூட கொடுக்க மாட்டேன் என்கிறார்களோ என்னவோ தெரியாது.

(Sri A. Govindasami rose . . . )

MR. SPEAKER: The hon. Member is not entitled to put the question unless I call him.

SRIMATHI KAMALAMBUJA AMMAL : ஜில்லா போர்ட் பள்ளிகளுக்கு மட்டும் இந்தத் திட்டமா ? எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் இது நிறைவேறுவதற்கு எத்தனை ஆண்டுகளாகும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : உடனடியாக கணக்குப் போட்டுச் சொல்ல முடியாது.

SRI J. MATHA GOWDER : : பெண் உபாத்தியாயர்களுக்கு வீடு கட்டும் திட்டத்தில், வாகனவசதி அதிகமாக இல்லாத இடங்களில், நீலகிரிப் பிரதேசத்தில் வீடு கட்டும்போது, அங்கு வருடத்தில் ஆறு மாத காலம்

மழை பெய்வதால் அவர்கள் பள்ளிக்கூடங்களுக்கு நடந்து சென்று பாடங் கள் போதிப்பது என்பது கடினமாக இருக்கிறது. ஆகவே அங்கு அதிகப் படியான வீடுகள் கட்டிக் கொடுக்க அரசாங்கம் ஆலோசனை செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆறு மாதம் மழை பெய்கிறது என்றால், அங்கத்தினர் அவர்கள் சொல்வதைப் பார்த்தால் அவர்கள் வீட்டிலேயே உட்கார்ந்து இருக்கவேண்டுமா என்று தெரிய வில்லை.

*Age of retirement of teachers*

* 827-D *Q.*—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) ஆசிரியர்கள் ஓய்வு பெறும் வயதை 60 ஆக உயர்த்தப்பட வேண்டும் என்று 1959-ம் வருடம் மே மாதம் சேலத்தில் நடைபெற்ற 49-வது மாகாணக் கல்வி மகாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு அரசாங்கத்திற்கு அனுப்பப்பட்டதா ?

(ஆ) அவ்வாறு அனுப்பப்பட்டிருப்பின், இத்தீர்மானத்தின் மீது அரசாங்கத்தாரால் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் யாவை ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) Yes, Sir.

(ஆ) No action was considered necessary pending the receipt of the report of the Pay Commission.

SRI A. GOVINDASAMY : 55 வயதுக்கு மேல் வேலை செய்யக் கூடிய உடல்நலம் இருந்தால் அவர்களை வேலை செய்ய அனுமதிக்க அர சாங்கத்திற்குள்ள ஆட்சேபணை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : 20 வயது வந்த வாலிபர் கள் தயாராக காத்துக்கொண்டு இருப்பதால் 55 வயது வந்த கிழவர்கள் வாலிபர்களுக்கு இடம் கொடுத்தால் நல்லது என்ற கருத்து இருக்கிறது. பே கமிஷன் சிபார்சு பார்த்து இதுபற்றி ஆலோசனை செய்யப்படும்.

SRI K. VINAYAKAM: Sir, do the Government trust that the Pay Commission would have considered this aspect of the question? Do not the Government come to the conclusion that experienced teachers are any day much better to teach young plastic brains in the early stages, and if so, will the Government reconsider their decision and take steps to continue them even after the retirement age?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில சமயத்தில் அனுபவம் நல்லதும் கூடத்தான். சில சமயம் அனுபவம் வேறு வழியில் அமைந் திருந்தால் புதிதாக போடுவது நல்லது. ஆகவே, ஒரேமாதிரியாக அனு பவம் வேண்டும், வேண்டாம் என்று சொல்ல முடியாது. இதெல்லாம் அந்தந்த ஆளைப் பொறுத்திருக்கிறது. எந்தெந்தத் துறையில் இது அமுலுக்கு வரவேண்டும் என்பதையும் பொறுத்திருக்கிறது.

*Grievances of Kundah Project workers*

* 827-E *Q.*—SRI M. P. SUBRAMANIAM: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any representation has been received by the Government from the work charged and service Union and the National Project Workers' Union at Kundah regarding their grievances;

(*b*) the nature of their grievances; and

(*c*) the action taken thereon?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) Yes, Sir.

26th April 1960]

(*b*) The demands raised by these Unions are identical. The following are the demands raised by those Unions on the Madras State Electricity Board:—

(1) Project seniority should be common for all the three circles of Kundah, Emerald and Syndynallah Schemes for the purpose of retrenchment.

(2) Special pay of 12½ per cent to be paid to Nominal Muster Roll workers also.

(3) The Electricity Board to take up the responsibility for the contract workers as the principal employer.

(4) Full implementation of the agreement entered into between the Electricity Board and the Tamilnad Electricity Workers' Federation.

(5) Compensation for involuntary unemployment.

(6) Retrenchment of 41 workers in Avalanche Division should be effected only on the basis of Project Seniority and not on the Division Seniority.

(*c*) The matter is under consideration of the Government and final orders on the demands raised by the union will issue shortly.

**Sri M. P. SUBRAMANIAM**: இவர்களது கோரிக்கைகளை கடந்த ஓராண்டு காலமாக மின்சார போர்டினிடமும், அரசாங்கத்தினிடமும் தெரியப்படுத்தியும் இதுவரையிலும் ஒருவித நடவடிக்கையும் எடுக்காத காரணத்தினுல் இம்மாதம் 15-ம் தேதியிலிருந்து 5,000-க்கு மேற்பட்ட வொர்க்கேர்ஸ் வேலை நிறுத்தம் செய்திருப்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா? அவர்கள் பேரில் போலீஸார் தடியடிப் பிரயோகம் நடத்தியிருக்கிருர்கள் என்பது அமைச்சர் அவர்களுக்குத்தெரியுமா? 150 பேர்கள் கைது செய்யப்பட்டு கோவை, நீலகிரி சென்ட்ரல் ஜெயிலில் வைக்கப்பட்டிருப்பதும் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா?

**The Hon. Sri R. VENKATARAMAN**: அந்த விவரங்கள் சர்க்காருக்கு வந்திருக்கிறது.

**Sri M. KALYANASUNDARAM**: இந்தக் கோரிக்கைகள் மீது லேபர் கமிஷனர் முன்பு விவாதம் நடந்து அவர்கள் ரிப்போர்ட் லேபர் டிபார்ட்மெண்ட்க்கு வந்து லேபர் டிப்பார்ட்மெண்ட் எப்பொழுது அனுப்பினுர்கள்? முடிவு எடுக்கவேண்டியது எந்த இலாகா?

**The Hon. Sri R. VENKATARAMAN**: இதன் முறை என்னவென்று சொன்னுல், தொழில் தகராறு ஏற்பட்டவுடன் அதை கன்ஸிலியேஷன் நடத்துவதற்கு லேபர் இலாகா முன் வருகிறது. லேபர் டிபார்ட்மெண்ட் கன்சிலியேஷன் நடத்தி கன்ஸிலியேஷன் ரிப்போர்ட் அனுப்புவதற்கு முன்னுல் எலெக்ட்ரிஸிட்டி இலாகாவிற்கு அனுப்பி இந்த விதமான அபிப்பிராயம் இருக்கிறது. நீங்கள் அதை ஒத்துக்கொள்ளுகிறீர்களா என்று கேட்கிறேம். அவர்கள் ஒத்துக்கொண்டால் அதையே முடிவாக இருவருக்கும் ஏற்பட்ட ஒப்பந்தமாக வெளியிடப்படும். ஏற்றுக் கொள்ளவில்லை என்று சொன்னுல் அதற்கு மேற்கொண்டு சட்டப்படி என்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று பரிசீலனை செய்யப்படும்.

**Sri A. GOVINDASAMY**: மின்சார தொழிலாளர்கள் அடிபட்டதும், சிறை தண்டனை அடைந்து வருவதும் அமைச்சர் அவர்களின் கவனத்திற்கு வந்திருப்பதாகச் சொன்னுர்கள். குந்தாத் திட்டத்தை

நிறைவேற்றித்தந்த தொழிலாளர்களை பழி வாங்காமல் உடனடியாக சமரசத்திற்கு வரவேண்டிய ஏற்பாட்டைச் செய்ய அரசாங்கம் உடனடியாக முயற்சிக்குமா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** சர்க்கார் தொழிலாளர் இலாகா முன்பு கன்ஸிலியேஷன் நடந்து கொண்டிருந்தது. கன்ஸிலியேஷன் நடந்த பிறகு இதுபற்றி சர்க்கார் சில ஆலோசனைகளை மின்சார போர்டிற்கு அனுப்பியது. அதற்குள்ளாக தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்துவிட்டார்கள். அதனால் சில விளைவுகள் ஏற்பட்டன. அதன் பொறுப்பு தொழிலாளர்களுடையதுதான் என்பதை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

**SRI N. K. PALANISAMI :** கன்ஸிலியேஷன் நடத்தி சர்க்காருக்கு ரிபோர்ட் 1959-ல் அனுப்பினார்கள். அந்த ரிபோர்ட்டில் தொழிலாளர்கள் கோரிக்கை நியாயம் என்று இருக்கிறதா அல்லது அவர்கள் கோரிக்கைகளை அட்ஜுடிகேஷனுக்கு விடப்பட வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறதா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** அங்கத்தினர் அவர்கள் சொல்லும் விவரம் சரியல்ல. பெப்ரவரி மாதம்தான் இந்த இலாகாவிலிருந்து மின்சார இலாகாவிற்கு என்ன செய்யலாம் என்ற ஆலோசனை அனுப்பப்பட்டிருக்கிறது.

9-30 a.m. **SRI M. P. SUBRAMANIAM :** இந்தக் கோரிக்கையைப்பற்றி அரசாங்கம் பரிசீலித்துக்கொண்டிருப்பதாக சொல்லப்படுகிறது. அப்படியானால் அரசாங்கம் இதன் பேரில் எடுக்கக்கூடிய (டிஸிஷன்ஸ்) முடிவுகளை மின்சார போர்டுக்கு அரசாங்கம் சிபாரிசுதான் செய்யுமா அல்லது, அதை அமல் நடத்தவேண்டும் என்று வற்புறுத்துவார்களா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** மின்சார போர்ட் என்பது ஒரு ஆட்டானமஸ் கார்ப்பரேஷன், அதற்கு நாம் சிபாரிசு தான் செய்ய முடியும்.

**SRI V. K. KOTHANDARAMAN :** தங்களுடைய உரிமைகளுக்காக அமைதியுடன் போராடக்கூடிய தொழிலாளர்களின் போராட்டத்தை உடைப்பதற்காக சர்க்கார் அங்கே முயற்சி செய்கிறது என்பது உண்மையா ? இங்கே என்னவெல்லாமோ போலீஸ் சட்டங்களை போட்டு விட்டு குறிப்பிட்ட ஒரு பகுதியினருக்கு மட்டும் ஊர்வலங்களை நடத்துவதற்கும், கோஷங்களைப் போடுவதற்கும் அனுமதி கொடுத்துவிட்டு, தொழிலாளர்கள் பக்கத்திலிருந்து நடத்தப்படும் போராட்டத்திற்கு மட்டும் பலவித தொல்லைகளைக் கொடுத்துக்கொண்டிருப்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? அப்படியானால் உடனடியாக நேரில் சென்று இதைத் தீர்த்து வைப்பதற்கு அமைச்சர் அவர்கள் முயற்சி செய்வார்களா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** இது கனம் அங்கத்தினர் அவர்களுடையவும், கனம் அங்கத்தினர் அவர்கள் சார்ந்திருக்கின்ற கட்சியினுடையவும் புகார். இதில் எது உண்மை என்பதை விசாரித்துதான் சொல்ல முடியும்.

**SRI S. NAGARAJA MONIGAR :** இந்த தேசம் எப்படிவேண்டுமானாலும் கெட்டுப்போகட்டும், இந்த தேசத்தின் முன்னேற்றம் எப்படி கெட்டுவிட்டாலும் நமக்கு சம்பந்தமில்லை என்று சொல்லக்கூடிய அளவில், தேசத் துரோகமான செயல்கள் என்று சொல்லக்கூடிய அளவில், ஏக காலத்தில் 5,000 மக்களுக்கும் ராஜ்யத்தின் முன்னேற்றத்தை தடை செய்கின்ற அளவுக்கு ஈடுபட்டிருக்கிறார்கள் என்றால், அந்த முறையில் அவர்களுக்கு இப்போது என்ன கஷ்டம் ஏற்பட்டு விட்டது என்பதை அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN :** இது மற்றொரு கட்சி செய்கின்ற புகார்.

26th April 1960]

SRI M. P. SUBRAMANIAM : மின்சார போர்ட் ஆட்டானமஸ் போர்டு என்ற முறையில் இருந்தாலும், நம்முடைய அரசாங்கத்தின் ஆட்சியின் கீழ் தான் இருந்து வருகிறது. ஆகவே மின்சார தொழிலாளர்கள் பெடரேஷன் மின்சார போர்டோடு செய்து கொண்ட ஒப்பந்தம் ஏன் நிறைவேற்றப்படவில்லை. அவைகளின் பேரில் ஏன் ஓராண்டு காலமாக நடவடிக்கை எடுக்கப்படவில்லை, அதோடு இதைப்பற்றி அரசாங்கம் ஏன் மின்சார போர்டுக்கு தாக்கீது அனுப்ப முடியவில்லை ?

THE HON. SRI R. VENKATARAMAN : நம்முடைய ராஜ்யம் இயங்குவது ஒரு " ரூல் ஆப் லா " முறையில் தான். சர்க்கார் முதலீடு கொடுத்திருந்தாலும் தனியார் நடத்துவதாக இருந்தால் அது தனியான ஒரு கார்ப்பரேஷனுகத்தான் இருக்கும். சர்க்கார் முதலீடு போட்ருக்கிறேம் என்பதற்காக இம்மாதிரியான கார்ப்பரேஷன் மீது எந்த விதமான உத்தரவையும் போட்டுவிட முடியாது. இரண்டாவது, ஒப்பந்தத்தை நிர்வாகம் மீறியிருக்கிறது என்றும் சொல்லப்படுகிறது. அதுவே சந்தேகம் தான். யார் உண்மையில் மீறியிருக்கிறார்கள் என்பதை பரிசீலனை செய்து தான் முடிவு செய்யவேண்டும்.

SRI M. KALYANASUNDARAM : எலக்ட்ரிஸிட்டி போர்ட் சட்டப்படி தனியாக இயங்கக்கூடிய ஒரு நிறுவனம் போன்றதுதான் என்றும், நம்முடைய ஆட்சியும் சட்டப்படிதான் அமைந்திருக்கிறது என்று சொன்னார்கள். அதை நான் வரவேற்கிறேன். அப்படியானால் தனியார்கள் இது போன்ற விஷயத்தில் எவ்வளவு காலம் கடத்தினல் என்னென்ன நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்குமோ, அதே முறையில் காலம் கடத்திக் கொண்டிருக்கின்ற இதன் மீதும் லேபர் டிபார்ட்மெண்ட் குறுக்கிட்டு இதை அட்ஜூடிகேஷனுக்கு விடுவதற்கு அரசாங்கம் ஏன் முயற்சி எடுக்கக்கூடாது ?

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்கார் எந்த சமயத்தில் எந்தெந்த தொழில் தகராறுகளை எல்லாம் அட்ஜூடிகேஷனுக்கு விட வேண்டும் என்று நினைக்கிறதோ அப்போது அட்ஜூடிகேஷனுக்கு விடும். அதல்லாமல் திடீரென்று இவைகளை எல்லாம் அட்ஜூடிகேஷனுக்கு விடப்படும் என்று சொல்லுவதற்கில்லை. அடுத்தபடியாக இந்தத் தொழில் தகராறு சம்பந்தமாக பெப்ரவரி மாதத்தில் சர்க்கார் சிபாரிசுகள் செய்திருக்கிறார்கள். அதை தொழிலாளர்கள் தெரிந்திருந்தும் கூட ஏன் இந்த வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டார்கள் என்பது தான் தெரியவில்லை.

SRI N. K. PALANISAMI : இப்போது இந்த வேலை நிறுத்தம் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டு வருவதால், சர்க்கார் இதில் தலையிட்டு சமரசத்தை உண்டாக்குவதற்கு ஏன் முயற்சி செய்யக்கூடாது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதற்கு அங்கிருக்கின்ற தொழிற்சங்கம் சம்பந்தப்பட்ட இலாகாவினரை அணுகினல் அதற்கான முயற்சிகள் செய்யப்படும்.

MR. SPEAKER: Questions are over.

**[Note.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—CALLING ATTENTION TO THE FAILURE OF GOVERNMENT TO DEEPEN THE WELLS DRIED UP IN PARTS OF ERODE TALUK.

MR. SPEAKER: The hon. Member, Sri N. K. Palanisami, will now call the attention of the Hon. Minister for Revenue to a matter of urgent public importance.

SRI N. K. PALANISAMI: Sir, I rise to call the attention of the Hon. Minister for Revenue to a matter of urgent public importance, viz., the failure of the Government to take steps to deepen the wells which have dried up due to continuous drought in Uthukuli and a part of Perundurai and Chennimalai firkas of Erode taluk.

[Sri N. K. Palanisami] [26th April 1960

கனம் சபாநாயகர் அவர்களே 1959-ம் வருஷம் ஜூன் மாதத்தில் இதே மாதிரி ஒரு பெரிய கஷ்டமான நிலைமை, அதாவது குடித் தண்ணீர் இல்லாத நிலைமை ஏற்பட்டது. அப்போது ஈரோடு, பல்லடம், தாராபுரம் போன்ற பகுதிகளில் இந்தக் கஷ்டத்தைப் போக்குவதற்காக சில நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. அப்போது அங்கு இருந்த கிணறுகளில் எட்டு அடிக்கு மேல் ஆழப்படுத்தக்கூடாது என்று லிமிட் போட்டிருந்தார்கள். இதனால் அதிகப்படியாக தண்ணீர் கிடைக்கவில்லை. இப்போதும் இந்த இடங்களில் எல்லாம் முன் ஏற்பட்ட நிலைமைதான் ஏற்பட்டிருக்கிறது. மழை பெய்யாததின் காரணமாக அங்கு குடித் தண்ணீர் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இந்த இடங்களில் எல்லாம் கொஞ்சம் பணம் செலவு செய்து அங்குள்ள கிணறுகளை எல்லாம் ஆழப்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு பல இடங்களிலிருந்தும் குடித் தண்ணீர் கிடைக்காததின் காரணமாக அங்குள்ள மக்கள் ஊரை விட்டு வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே இந்த அபாயத்தைத் தடுக்க வேண்டிய எல்லா நடவடிக்கைகளையும் உடனடியாக எடுக்க வேண்டும் என்று இந்தத் தீர்மானத்தின் மூலமாக சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

* THE HON. SRI M. A. MANICKAVELU: In June 1959, acute water scarcity was prevailing in Erode, Dharapuram, Palladam and Udumalpet taluks of Coimbatore district and it became necessary to deepen a large number of public wells in these taluks. The Collector of Coimbatore started the work in anticipation of the sanction of the Government and appointed three Minor Irrigation Overseers to facilitate the quick preparation of the estimates, etc. In all, 469 works were taken up and 215 of these works were in Erode taluk. The number of wells which dried up in Uthukuli, Perundurai and Chennimalai firkas of Erode taluk is 162 and all these wells were deepened incurring an expenditure of Rs. 1,16,000. Because of the rains in October 1959, there was some improvement in the supply of water in the wells and it was considered that there was no necessity to deepen all the wells in the taluks according to the programme. There was also widespread rain throughout the district in November 1959. The Government sanctioned an expenditure of rupees two lakhs and ratified the action of the Collector in having started the work in anticipation of the sanction of the Government. The allotment of rupees two lakhs was subsequently increased by Rs. 27,000.

It will thus be seen that the Government have taken necessary measures to deepen the wells dried up due to drought in the firkas referred to in Erode taluk of Coimbatore district.

## III.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1960-61.—*cont.*

### DEMAND XVI—EDUCATION.

MR. SPEAKER: Tomorrow the Assembly will meet in the afternoon also. The time fixed is 3 p.m. at present. I would suggest an alteration. It may meet at 3-30 p.m. Otherwise, Ministers will find it difficult to answer quesions in theCouncil and paricipate in the proceedings here. If I keep it at 3-30 p.m. Ministers will be able to answer questions in the Council and come here a little leisurely. I suggest, therefore, that the Assembly might meet from 3-30 to 5-30 p.m. tomorrow. Is it agreed to ?

THE HON. SRI C. SUBRAMANIAM: Yes, Sir.

26th April 1960]

MR. SPEAKER: Thank you. We shall now proceed with the voting on Demands.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 15,79,50,700 under Demand XVI—Education."

SRI M. P. SUBRAMANIAM: Sir, I move the cut motion standing in my name, viz.,—

"That the allotment of Rs. 15,79,50,700 under Demand XVI—Education be reduced by Rs. 100."

MR. SPEAKER: The Demand and the cut motion are before the House for discussion.

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் சபாநாயகர் அவர்களே, முன்னுரையாக நான் எதுவும் பேசுவதாக இல்லே. வெள்ளே அறிக்கை ஒன்றும், கல்வி இலாகாவின் நடவடிக்கைகளேப் பற்றிய குறிப்பு ஒன்றும் கனம் அங்கத்தினர்களுக்கு வைக்கப்பட்டிருக்கின்றன. அந்தக் குறிப்பிலே, ஆரம்பப் படிப்பு, உயர்நிலேப் பள்ளிப் படிப்பு, கல்லூரிப் படிப்பு இவைகளேப் பற்றியெல்லாம் விவரங்கள் தனித் தனியாகக் கொடுக்கப் பட்டிருக்கின்றன. ஆதாரப் படிப்பைப்பற்றி இருக்கும் நிலேமையையும், அதிலே நாம் எடுத்துவரக்கூடிய நடவடிக்கைகளேப் பற்றியும் விவரமாகக் கொடுக்கப் பட்டிருக்கிறது. அடுத்தபடியாக, நூல் நிலேயங்களேப் பற்றியும் இங்கு விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. டெக்னிகல் எடுகேஷனேப் பற்றியும், அதுபற்றியுள்ள சில புள்ளிவிவரங்களும் இதிலே கொடுக்கப்பட்டிருக்கின்றன. தமிழை முக்கியமாக வளம் பெறச் செய்வதற்கு எடுத்துக் கொண்டிருக்கும் நடவடிக்கைகள் பற்றி **"Tamil Development and Research Council"** என்ற தலேப்பின் கீழ் விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்தத் திட்ட காலத்திலே எவ்வளவு செலவாகியிருக்கிறது என்பதைப் பற்றிய புள்ளிவிவரங்களும் இதிலே கடைசியாக சுருக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதைவிட முக்கியமானது, நான் இப்பொழுது இந்தச் சபை முன் வைத்திருக்கும் வெள்ளே அறிக்கை ; போதனுமொழியைப்பொறுத்தது.

SRI K. ANBAZHAGAN : வெள்ளேயறிக்கையைப் பற்றி கனம் அமைச்சர் அவர்கள் பேசவேண்டும். ஏனென்ருல், இது தான் முதல் தடவை இதுபற்றி பேசுவது.

THE HON. SRI C. SUBRAMANIAM: போதனு மொழியைப் பற்றி சபை முன்ஞல் வைத்திருக்கும் வெள்ளே அறிக்கையிலே குறிப்பிடப் பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர்களுக்கு ஞாபகம் இருக்கலாம்—1951ம் வருஷம் எப்ரல் மாதம் 14-ந் தேதி வருஷப் பிறப்பு அன்று, ஒரு அறிக்கை சர்க்காரின் சார்ப்பாக, G. O. ஆக வெளியிடப்பட்டது. அந்த அறிக்கையின் அடிப்படையில்தான் இப்பொழுது போதனுமொழியைக் கல்லூரியில் கொண்டுவருவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டுவருகிறது. அந்த உத்தரவுப் பிரகாரம் இருக்கும் முக்கியமான சில அம்சங்களேச் சபைக்குச் சொல்வது அவசியம் என்று நான் கருதுகிறேன். அது பற்றி இணைப்பு 1-ல் விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதிலே பார்த்தால், நம்முடைய மொழிக் கொள்கையைப் பற்றி முதல் பாராவிலேயே விளக்கப்பட்டிருப்பது தெரியும். அது இப்பொழுதுதான் முதன் முதலாக ஏற்பட்ட விளக்கம் அல்ல. மொழிக் கமிஷன் நியமிக்கப்பட்டு, இந்த ராஜ்ய சர்க்காரின் கொள்கை என்ன என்பதைப்பற்றி அவர்கள் கேட்டபோது, அதைப்பற்றி விரிவாக விவாதித்து, முதல் தடவை அவர்களுக்குப் பதில் கொடுக்கும்போது, சட்டசபையிலே இருக்கும் எல்லாக் கட்சித் தலேவர்களேயும் கலந்தாலோசித்து, எல்லோரும் ஒத்துக்கொண்ட

முறையிலே அந்த மெமொராண்டம் தயாரிக்கப்பட்டு, மொழிக் கமிஷனுக்குக் கொடுக்கப்பட்டது. அப்படிக் கொடுக்கப்பட்ட மெமொராண்டத்திலே இதைத் தான் சொல்லியிருக்கிறேன்.

'There is a conflict requiring reconciliation, between two different objectives, namely, the need for raising higher educational standards and the need, also, to develop the potentialities of the mother-tongue as the vehicle of culture. The Government of Madras have not yet taken a decision on how this reconciliation is to be effected. Present indications are that the answer will have to be found.

I. First, in making a distinction within the field of higher education between scientific and professional education and education in the 'Humanities', and, on the basis of this distinction (*a*) taking active steps to bring about an early change in the medium of instruction in colleges so far as the latter is concerned ; and (*b*) continuing to use English as the medium of scientific and professional instruction in colleges, at any rate, without change until 1965 ; and

II. Secondly, while continuing to maintain English as the Second Language and subject of compulsory study in Secondary schools, to undertake all practicable measures for improving the efficiency of instruction in the study of that language.'

இந்த இரண்டும் அந்த மெமொராண்டத்திலே முக்கியமாகக் குறிப்பிடப் பட்டது. மொழிக் கமிஷன் அறிக்கை சமர்ப்பித்த பிற்பாடு அந்த அறிக்கையிலே நாம் சொன்ன சில விஷயங்கள் ஒப்புக்கொள்ளப்படாமல் இருந்தன. ஆகையால், பார்லிமென்டரி கமிட்டி நியமித்த போது, மொழிக் கமிஷனுக்குச் சமர்ப்பித்த அறிக்கையை அடிப்படையாகக் கொண்டு, இன்னொரு யாதாஸ்து தயாரிக்கப்பட்டது. இங்கிருக்கும் எல்லாக் கட்சித் தலைவர்களையும் கூட்டி, கலந்தாலோசித்து, எல்லோரும் ஒப்புக்கொள்ளும் முறையில் அந்த யாதாஸ்து அமைக்கப்பட்டு அங்கே அனுப்பி வைக்கப்பட்டது. அதிலேயும் இது வற்புறுத்தப்பட்டிருக்கிறது. ஆகையால், இது ஏதோ புதிதாக வந்த கொள்கை அல்ல என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும். அது இந்தச் சட்ட சபையும், மேல் சபையும்—இரண்டு சபைகளும்—ஒப்புக் கொள்ளப்பட்ட விஷயம் என்பதை நான் வலியுறுத்த விரும்புகிறேன்.

அதற்குப் பிற்பாடு இந்த விஷயத்தைவிட ஒரு முக்கியமான விஷயம் இரண்டாவது பாராவில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதாவது—

This question was disclosed by the newly-constituted Tamil Development and Research Council where the view that a beginning should be made with Tamil as the medium of instruction in the reorganized B.A. degree courses found almost unanimous acceptance. The question has been further discussed with the Vice-Chancellors of the two Universities in the State and their advice taken. As a result of these discussions Government wish to reaffirm explicity their policy in the matter as set out in the memorandum presented to the Official Language Commission and declare that English will continue to be the medium of instruction in respect of all University degree courses except the reorganized B.A. degree courses and that no change in this respect will be considered, until the two following conditions are satisfied, namely, (i) the change-over should be demonstrated to have been successful in respect of the B.A. degree courses ; and (ii) an agreed decision on the nature of the changes (if any) to be made in respect of any other University degree course should be taken on a co-ordinated basis for all Universities in India.

ஆகையால், இதிலே சொல்லியிருக்கக் கூடியது, யூனிவர்சிடி கட்டத்தில் பி.எ.யைத் தவிர பாக்கியிருக்கும் எல்லாக் கட்டங்களிலும், எல்லாப் பகுதிகளிலும் ஆங்கிலம் தான் போதனு மொழியாக இருக்கும்.

26th April 1960] [Sri C. Subramaniam]

பி.ஏ.யைப் பொறுத்த வரைக்கும் இந்த மாறுதல் செய்ய வேண்டும் என்பது. பி. எஸ். ஸி, என்ஜீனியரிங் காலேஜ், மெடிகல் காலேஜ் இன்னும் பாக்கி யிருக்கும் ப்ரொபஷனல் காலேஜ்கள், இவைகளிலேயும் இந்த மாறுதல் ஏற்படவேண்டுமென்றால், பி.ஏ. டிகிரி படிப்பு வெற்றிகரமாக தமிழ் மொழியிலே நடத்தப்பட்டிருக்கிறது என்று நிரூபிக்கப்படவேண்டும். நாம் மட்டும் தனியாக எடுக்கும் முடிவாக இருக்கக்கூடாது, அகில இந்திய ரீதியிலே இந்த மாறுதல் ஏற்படும்போது நாமும் முடிவு எடுக்கவேண்டும் என்ற இரண்டு அடிப்படையிலே வருகின்றது. பல பேர்கள் இதை விட்டு விட்டு, பி.ஏ. டிக்ரியிலே மட்டும் தமிழ் மொழி போதனமொழியாக வரு வதை, பூராவுமே எல்லாவற்றிலும் இந்த விதமாக மாற்றிக்கொண்டிருக் கிறார்கள் என்று பேசிக்கொண்டிருக்கிறார்கள். நாம் இப்பொழுது எடுத்துக் கொண்டிருக்கும் முடிவு பி.ஏ. வகுப்பைப் பொறுத்து மட்டும்தான். பி.எஸ்.ஸி., இன்னும் பாக்கியிருக்கும் டெக்னிகல் எடுகேஷன், ப்ரொபெ ஷனல் எடுகேஷன் எல்லாவற்றிலுமே ஆங்கிலம்தான் தொடர்ந்து போதன மொழியாக இருக்கும் என்பதையும் இதிலே வலியுறுத்தியிருப்பது மட்டு மல்ல, மாற்றுவதாக இருந்தால், எந்த அடிப்படையிலே மாற்றவேண்டும் என்பதற்கு விளக்கமாக விவரமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

அதற்குப் பிற்பாடு, பி.ஏ. டிக்ரியிலே எப்படி மாற்றுவது என்றால் எதிலேயிருந்து மாற்றுவது என்பதைப் பற்றியும் இதிலே விளக்கமாக மூன்றாவது பாராவிலே கொடுக்கப்பட்டிருக்கிறது.

"The medium of instruction of the reorganized B.A. degree courses in the State will accordingly be changed to Tamil. It is obvious that the best time schedule for this change will be one which will link it with the reorganization of Secondary Education. This is due to commence in the academic year 1959–60 and the first batch of pupils admitted to the new VIII Standard during that year will complete the new XI Standard in the Higher Secondary School (as the equivalent of the Pre-University course in colleges) in 1963–64. Those students of this batch who are declared eligible for admission to the B.A. degree course will therefore constitute the first batch of pupils for whom instruction will be available in the Tamil medium in the colleges of the State. That is to say, the change will be made from English to Tamil as the medium of instruction in the B.A. degree course during 1963–64 for the first year of the course, during 1964–65 for the second year of the course, and during 1965–66 for the third year of the course. At the end of the Third Five-Year Plan, the first batch of pupils will get their B.A. degrees after completing their entire education in schools and colleges with Tamil as the medium of instruction.'

இது மூன்றாவது பாராவிலே கொடுக்கப்பட்டிருக்கிறது. நாம் எடுத்திருக் கும் முடிவு, 1963–64-ம் ஆண்டிலிருந்து இது எல்லாக் கல்லூரிகளிலும் ஆரம்பமாகவேண்டுமென்பது. ஆனால், "ப்ரைவேட்" கல்லூரிகளில் ஆங் கிலத்தை போதனமொழியாக வைத்துக்கொள்வதிலே ஆட்சேபணை கிடை யாது. ஆனால், பி.ஏ.யைப் பொறுத்தவரைக்கும் மான்ய உதவி இருக்காது என்பதுதான் இங்கே முடிவு செய்யப்பட்டிருப்பது. மூன்றாவது பாராவில் இருக்கும் முடிவை அமுலுக்குக் கொண்டுவருவதற்கான ஆயத்த நட வடிக்கைகள், பிரயத்தனங்கள் எடுத்துக்கொள்ளப்படவேண்டும். அதற்கா கத்தான் கோயமுத்தூர் காலேஜில், "பைலட் ப்ராஜெக்ட்" டாக இந்த ஆண்டிலே ஆரம்பிக்கவேண்டும் என்று சொல்கிறோம். ஆகையால், சர்க் காருடைய முடிவு 1963–64-ம் ஆண்டில் எல்லாக் கல்லூரிகளிலும் பி.ஏ. வகுப்பில் தமிழ் போதன மொழியாக வேண்டும் என்பது. அதற்கு வேண்டிய படி எல்லாவிதமான நடவடிக்கைகளும் எடுத்து, தயார் செய்வ தற்காக கோயமுத்தூர் காலேஜைப் பைலட் காலேஜாக எடுத்திருக்கிறோம். அந்த ஆண்டிலேயிருந்து பி.ஏ. வகுப்பிலே தமிழ் போதனமொழியாக வைத்து சொல்லிக்கொடுக்கவேண்டியதற்கு எல்லாவிதமான நடவடிக்கை

களையும் எடுத்து நாம் தயார் செய்துகொள்ளவேண்டும் என்ற முறையிலே ஐந்தாவது பாராவிலே இது சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினால், சில பேர் சொல்லுவதுபோல் அல்ல, நாம் முதலிலே பைலட் காலேஜ் ஆக வைத்து, **1963–64** வரை பார்த்து, அதற்குப் பிறகு முடிவு எடுப்பதாக நினைத்திருப்பது, அப்படிப் பேசுவது சரியாகாது. வேறு யோசனைகள் சொன்னால் அது வேறு விஷயம். எடுத்திருக்கும் முடிவு, **1963–64** லிருந்து வரவேண்டும் என்பது. அதற்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்ய, கோயம்புத்தூர் காலேஜிலே, முதலிலே ஏற்பாடுகள் நடக்கின்றன. அப்படி செய்வதற்கு, ஸ்ரீ ஜி.ஆர். தாமோதரன் அவர்கள் தலைமையில் ஒரு குழு நியமிக்கப்பட்டது. அந்தக் குழு எடுத்திருக்கக் கூடிய முடிவுகள் எல்லாம் சேர்ந்து இரண்டு அறிக்கைகள் இந்த சபைக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு மாணவர்களைப் பொறுக்குவது, ஆசிரியர்களைப் பொறுக்குவது என் பதைப் பற்றியெல்லாம், மற்ற பகுதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. இன்றைக்கு எடுத்திருக்கும் முடிவு எல்லாப் பகுதிகளையும் பற்றியது அல்ல, பி.ஏ. மட்டும்தான். இன்னொன்று. பி. ஏ. வகுப்புக்கு தமிழ் மொழி போதனு மொழியாக இருக்கவேண்டும் என்று சொல்லும்போது, இன் னொன்றையும் கவனிக்கவேண்டும். ஆங்கிலத்தைப் பொருத்தவரை, ஆங் கிலம் பி.எஸ்.ஸி. முதலிய வகுப்புகளில் சொல்லிக்கொடுக்கும் தகுதிக்கு, பி.ஏ. வகுப்புக்கும் சொல்லிக்கொடுக்கப்படும். ஆகவேதான், நாலாவது பாரகிராபில்—

**"Government wish to make it clear that the study of English as a subject will continue in the new Tamil medium B.A. degree courses and emphasize that the standard in this subject will be, as it is at present, the same as in Part I of the reorganized B.Sc., degree courses."**

ஆகவே தான் அதையும் தனியாக வலியுறுத்தியிருக்கிறது. ஆங்கிலத்தைப் புறக்கணிக்கப் போகிறார்கள், புறக்கணிக்கப் போகிறார்கள், என்று பொது வாக எல்லோரும் சொல்லும்போது, ஆங்கிலம் இல்லாமலேயே தமிழ் வந்துவிடுமோ என்று சொல்லும்போது, இப்படித் தொடர்ந்து ஆங்கிலமும் சொல்லிக்கொடுக்கப்படும் என்று விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்பொழுது இந்த உத்தரவை அமுலாக்க வேண்டும் என்று நாம் எடுத்துக்கொண்ட முடிவு அல்ல இது. கொள்கையைப் பொருத்த வரையில் முதலிலே நாம் லாங்க்வேஜ் கமிஷனுக்கு அறிக்கைச் சமர்ப்பித்தபோதே, எல்லோரையும் கலந்தாலோசித்து, ஏகோபித்த முடிவாகச் செய்தோம். அதே மாதிரி இரண்டாவது தடவை, நாம் பார்லியமென்டரி கமிட்டிக்கு அறிக்கை சமர்ப்பித்தோம். எல்லோரையும் கூட்டிப் பேசிப் பிறகுதான் செய்தோம் என்று வலியுறுத்த விரும்புகிறேன். பின்னால் விவாதம் நடந்தது, சில கட்சிக்காரர்கள் ஒப்புக் கொண்டார்களா, இல்லையா என்று விவாதம் இருந்தது. பிறகு அது ஒப்புக்கொள்ளப்பட்டது என்பது எல்லோருக்கும் விளக்கமாக, சந்தேகத்திற்கு இடமில்லாமல், தெளிவாக் கப்பட்டது. பின்னால், அது இந்தசபையிலும், மற்ற இடங்களிலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. அதைப் பற்றிக் கவனிக்க வேண்டியதில்லை இப்பொழுது. ஆகவே, இது தனிப்பட்டமுடிவு என்று சொல்வதற்கில்லை. எல்லோரும் ஒப்புக்கொண்டு எடுத்த முடிவுதான்.

இதிலே இப்பொழுது சில கஷ்டங்கள் தோன்றியிருக்கின்றன. அதைப் பற்றி, இது முக்கியமான விஷயமானதினால்—இந்த சபையில் விவாதம் நடைபெறவில்லை—மேல் சபையில், கௌன்சிலில் விவாதம் நடைபெற்றது. கனம் எதிர்கட்சித் தலைவர், டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார், பல்வேறு கருத்துக்களைத் தெரிவித்தும், இதை எதிர்த்தும், இதற்குத் தன் சம்மதத் தைப் பெறவில்லையென்றும், குறிப்பிட்டார்கள். அப்பொழுது நடந்த விவா தத்தில், நான் இது சம்மந்தப்பட்ட எல்லா தகவல்களையும் சேகரித்து ஒரு வெள்ளை அறிக்கையாக இந்த சபைக்கும், கௌன்சிலுக்கும் கொடுக் கிறேன் என்று உறுதிமொழியளித்தேன். அந்த அடிப்படையில்தான் இன்று இந்த அறிக்கை தயாரிக்கப் பட்டிருக்கிறது. அதில் பல்வேறு

26th April 1960] [Sri C. Subramaniam]

பிரச்னைகளைப் பற்றியும் சொல்லியிருக்கிறது. பொதுவாக விஷயங்களைச் சொல்வது ஒரு புறம் இருக்க, தனித்தனிப் பகுதியாக எடுத்துக்கொண்டு அந்த அடிப்படையிலே இன்றைக்கு என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன என்றெல்லாம் சொல்லியிருக்கிறோம். நாம் நடவடிக்கை எடுத்தது பற்றி குறைகூறுகிறார்கள். கௌன்சில் எதிர்கட்சித் தலைவர் அவர்கள் பகுதி, பகுதியாக எடுத்துக் கொண்டு செய்வார்கள் என்று நினைத்தேன் என்றார்கள். அதனால் தான், 14-வது பாரகிராப், முதலிலேயே,

"Did the Government consult the two vice-chancellors and was the order now under implementation issued with their assent"

அதைக் குறிப்பாக எடுத்துக்கொண்டு பதில் சொல்லியிருக்கிறோம். "The answer is emphatically yes" என்று ஆரம்பித்து விளக்கியிருக்கிறோம். இதிலே அவர்கள் எதிர்க் கட்சித் தலைவர் என்ற முறையிலா அல்லது வைஸ்-சான்ஸலர் என்ற முறையிலா ஒத்துக்கொண்டார்கள் என்பது தெரியவில்லை; தன் சம்மதத்தைப் பெறவில்லை என்று சொல்லும்போது, பைலட் காலேஜிலே அது ஒரு பரீட்சார்த்தமாகச் செய்யப் போகும் திட்டம் என்று நினைத்தேன் என்கும் போதும், அவர்கள் எந்த ஹோதாவில் ஒப்புக் கொண்டார்கள் என்பது அவர்களுக்கே விளங்கவில்லை. வைஸ்-சான்ஸலர் என்ற முறையிலா, அல்லது கல்வி நிபுணர் என்ற முறையிலா, அல்லது எதிர்க் கட்சித் தலைவர் என்ற முறையிலா அவர் சம்மதம் கொடுத்தார் என்பது அவருக்கே தெரியவில்லை.

ஏற்கனவே என் கருத்து விவாதத்திற்கு என்று அனுப்பப்பட்ட குறிப்பில் இருந்தது. ஒரு குறிப்பு அனுப்பியிருந்தேன். அது அபெண்டிக்ஸ் (2) என்று அச்சடிக்கப் பட்டிருக்கிறது.

'This paper has been drawn up in the light of the conclusion reached yesterday (1st March 1959) at the first session of the Tamil Development and Research Council.'

இதிலே திரு. அண்ணாதுரை அவர்களும், திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்களும், இன்னும் மற்ற கட்சித் தலைவர்களும், இன்னும் தமிழ் ஆசிரியர்களும், தமிழ் நிபுணர்களும், எல்லோரும் சேர்ந்து இருந்தார்கள். அந்த முறையிலே, இம்மாதிரி நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று தமிழ் டெவலப்மெண்ட் அண்டு ரிஸர்ச் கௌன்சிலில் முடிவு எடுக்கப்பட்டது.

Sri T. S. RAMASWAMI: On a point of order, Sir. Firstly, is it fair on the part of the hon. the Leader of the House to refer to a discussion in the other House? Secondly, can he refer to the views of a person who is not in a position to reply to him?

• Mr. SPEAKER: The Hon. Minister is explaining the various paragraphs in the White Paper which is before this House and he is not commenting on any observation independently. But while doing so, he may not criticise the statement of any Member of the other House. He is entitled to explain the various paragraphs in the White Paper which is before this House.

Sri T. S. RAMASWAMI: Sir, may I humbly submit that this is a highly centroversial matter in which the Hon. Minister on the one side and the Vice-Chancellor, also the hon. the Leader of the Opposition in the other House, have taken a very definite stand and in which they differ also.

Mr. SPEAKER: He is entitled to explain the White Paper paragraph by paragraph. But while doing so, he need not make any adverse remarks against a Member of any other House. He is entitled to paraphrase what is contained in the White Paper.

[26th April 1960

SRI T. S. RAMASWAMI: Sir, I am afraid I have not made my position clear.

MR. SPEAKER: The hon. Member has raised the point of order and I have given the ruling that the Hon. Minister is perfectly within his right . . .

SRI T. S. RAMASWAMI: If I remember aright, the hon. the Leader of the Opposition in the other House and the Vice-Chancellor is not against the introduction of Tamil as the medium of instruction . . .

THE HON. SRI C. SUBRAMANIAM: Why does the hon. Member himself bring in that controversy now?

MR. SPEAKER: The hon. Member is making the position worse by raising that point.

I have already stated that the Hon. the Leader of the House need not make any adverse remarks against any Member of the other House.

10-00 a.m. THE HON. SRI C. SUBRAMANIAM: As a matter of fact, I have no intention of going through that. But hon. Members wanted that they should understand the White Paper, and that is why I am making an attempt to take the members through the White Paper. That is all. Nothing more than that.

இந்த இரண்டாவது திட்ட அடிப்படையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று அதில் விவரிக்கப்பட்டிருக்கிறது. முதன் முதலில் தமிழ் டெவலப்மென்ட் அண்ட் ரிசர்ச் கவுன்சிலில் இதைப்பற்றி ஆலோசனை செய்து அவர்கள் தங்களுடைய கருத்துக்களை கூறினார்கள். அந்த அடிப்படையில் நாங்கள் மட்டும் செய்த காரியம் அல்ல. எல்லா வைஸ்-சான்சலர்களும் அதைப்பற்றி ஆலோசிக்க வேண்டும் என்று தான் சொல்லப்பட்டது. அது எப்படி ஆலோசிக்கப்பட்டது என்பதைப்பற்றி இரண்டாவது இணைப்பில் அதாவது இரண்டாவது அப்பெண்டிக்ஸில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன் முதல் பாராவில் என்ன சொல்லி இருக்கிறது என்றால். . . .

'This paper has been drawn up in the light of the conclusion reached yesterday (1st March 1959) at the first session of the Tamil Development and Research Council. It is proposed that Minister (Finance) may invite the two Vice-chancellors of the Madras University and the Annamalai University to a meeting at which this paper may be discussed by him with them ; and decisions taken on the matters specified in the last paragraph of this note.'

ஆகையினால் இரண்டு வைஸ் சான்சலர்களையும் அதாவது மதராஸ் யுனிவர்சிட்டி அண்ணாமலை யுனிவர்சிடி வைஸ் சான்சலர்களையும் கூட்டி கலந்து ஆலோசித்து ஒரு முடிவு செய்ய வேண்டும் என்று நினைத்து அதன் படி ஒரு நோட்டு அவர்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டது. பைனான்ஸ் இம்ப்ளிகேஷன் சம்பந்தமாக இரண்டு வைஸ் சான்சலர்களும் கலந்து ஆலோசித்து முடிவு செய்ய வேண்டும் என்ற அடிப்படையில் அது அனுப்பப் பட்டது.

அதற்கு அடுத்தபடியாக பாக்கி இருக்கக் கூடிய விஷயங்கள் முக்கிய மானது என்று கருதி அவைகளைப்பற்றியும் கலந்து ஆலோசிக்கப்பட்டது. கடைசியில் இருக்கக் கூடிய பாரகிராபில் அடிப்படையில் அதைப்பற்றி விவாதிப்பது என்று முடிவு செய்து அதன்படி முடிவு எடுக்கப்பட்டது. அது ஆறாவது பாரகிராபில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதாவது

26th April 1960] [Sri C. Subramaniam]

In the last paragraph of this note, it is stated as follows:—

"It is suggested that the topics for discussion by Minister (Finance) with the two Vice-Chancellors at the meeting proposed in paragraph 1 above should be the following:—

(i) Is the general perspective and time-schedule set out in this paper acceptable, or is any modification necessary?"

இதில் கொடுக்கப்பட்டிருக்கிற டைம் டேபிள்படி 1963–64-ல் எல்லா கல்லூரிகளிலும் தமிழ் போதனு மொழியாகவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதன் மூன்ருவது பாரகிராபில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்ருல்

(NOTE.—It should be open to private colleges to continue to provide English medium instruction in the B.A. degree courses even after this change-over is effected; but no grant will be payable by the State Government in respect of such courses.)

அதன் பிறகு

(ii) Which college should be taken as the Pilot College?

(iii) What should be the mode of selection of pupils for admission to the B.A. degree course in the Pilot College?

(iv) What should be the terms of reference to the Committee to be set up for planning the measures to be undertaken during the year 1959–60 in order to introduce the change in the Pilot College during the year 1960–61?

(v) What should be the composition of the Committee?

அதற்கு பிறகு 1963–64-ல் அது அமுலுக்கு வருகிறது என்ருல் அதற்கு என்று எதாவது ஒரு பைலட் காலேஜ் வேண்டும் என்றும் அப்படி எதை எடுத்துக்கொள்வது என்று ஆலோசிக்கப்பட்டது. அதற்கு வேண்டிய விவரம் கொடுக்கப்பட்டு பைலட் காலேஜாக எதை எடுத்துக்கொள்வது என்று ஆலோசனை செய்யவேண்டும் என்பது.

"Is the general perspective and time-schedule set out in this paper acceptable; 'or is any modification necessary?'

அதில் முக்கியமான விஷயம் ஒன்று கவனிக்க வேண்டியதாக இருக்கிறது.

'. . . These formed the crux of the decision announced in the Government Order of April 1959, and these are set out in unambiguous terms in the note sent to the Vice-Chancellors. During the discussion that took place on the 20th of March 1959, the two Vice-Chancellors did not suggest any modification of the programme or of the time-table. The Vice-Chancellor of the Madras University made only the following suggestions:—

(i) It should be made clear in the Government Order itself that the study of English as a subject will continue in the new Tamil medium B.A. degree courses and the standard in this subject will be the same as in Part I of the reorganized B.Sc. degree courses."

அதைத்தான் முக்கியமாக கவனிக்க வேண்டியதாக இருக்கிறது. அதைப்பற்றி என்ன நினைக்கப்பட்டது என்பதைப்பற்றி இந்த வெள்ளை அறிக்கையில் விவரமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஐந்தாவது பக்கத்தில் 14-வது பாரகிராபில், அந்தப் பக்க கடைசியில்

"(ii) The Pilot College may be a Government college outside Madras City."

[Sri C. Subramaniam] [26th April 1960

அதன் இரண்டாவது இணைப்பில் பார்த்தால் அதைப்பற்றி எந்தவித மான குறிப்பும் இல்லை. ஒன்றாவது இணைப்பு கவர்ன்மெண்ட் ஆர்டரைப் பார்க்கும் போது நாலாவது பாரகிராபில் அது விளக்கமாகக் கொடுக்கப் பட்டிருக்கிறது. அதைப்பற்றி முன்னமே படித்துக் காண்பித்தேன். மதராஸ் யுனிவர்சிடி வைஸ் சான்சலரும் அதற்கு ஒப்புக்கொண்டிருக்கிறார். அதற்கு என்று ஒரு தனி பாரகிராபும் போடப்பட்டிருக்கிறது. இரண்டாவ தாக சொன்னது

" (iii) The same set of question papers should be prepared for all students taking the B.A. degree examinations including those coming from the Pilot College. The question papers should be printed in English and Tamil for the benefit of all students including the Tamil medium students and valuation of the papers should be made, as it is at present done, by persons not connected with the college to which the students belong."

என்று சொன்னார்கள். அதன்படி கோயம்பத்தூர் காலேஜ் எடுக்கப் பட்டது.

" (iv) In the preparation of technical terms for use during instruction in the Tamil medium, well-known international terminology should be used subject to such adaptations as may be necessary and, where well-known Tamil terms are used, the international terms should also be indicated in brackets."

இது சரி என்று ஒப்புக்கொள்ளப்பட்டது. இது சர்க்கார் எடுக்க வேண்டிய நடவடிக்கையில் ஒன்றுமில்லை. யுனிவர்சிட்டி எடுக்க வேண்டிய நடவடிக்கை அது. அதற்கு கவர்ன்மெண்ட் ஆர்டர் குறிக்க வேண்டிய அவசியம் இல்லை.

" All these suggestions were accepted and suggestions (i), (ii) and (iv) were incorporated in the Government Order."

அதுவும் ஒப்புக்கொள்ளப்பட்டது.

" The answer is emphatically ' yes '."

மூன்றாவது பொறுத்த வரைக்கும் அது யுனிவர்சிட்டி எடுக்க வேண்டிய நடவடிக்கை என்ற காரணத்தால் அதுவும் ஒப்புக்கொள்ளப்பட்டது என் பதால் அதை யுனிவர்சிட்டிக்கு விடப்பட்டது. ஆகையால் இந்தச் சபை கவனிக்கவேண்டியது இந்த அடிப்படையில் இரண்டு வைஸ் சான்சலர்களை யும் கலந்து ஆலோசித்து அவர்கள் கொடுத்த ஆலோசனை என்ன என் பதைப்பற்றி இதில் விரிவாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மதராஸ் யுனிவர் சிட்டியும் அண்ணாமலை யுனிவர்சிட்டியும் ஒப்புக்கொண்டு அதற்கான முறை யில் கவர்ன்மெண்ட் ஆர்டர் மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது. அதன்படி முடிவு செய்து அதன்படி ஆரம்பித்திருக்கிறார்கள். அடுத்து

" The next issue arising out of the criticism levelled against the Government decision is that the Government were usurping the functions of the University by taking decisions which the University should take and were infringing its authority."

அது எந்த அளவுக்கு சரி என்பதைப்பற்றி நாம் இங்கே விவரமாக ஆலோ சித்திருக்கிறோம். அது விஷயமாக நாம் கவனிக்க வேண்டியது புதியதாக இல்லாது விதி அடிப்படையில் எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கப் படவில்லை. 1948–49-ம் வருஷத்திலேயே யுனிவர்சிட்டி சொன்னதை ஆலோசனை செய்து யாருக்காவது ஒரு வருஷ நோட்டீஸ் கொடுத்து விட்டு தமிழ் மொழியில் பாடங்களை சொல்லிக்கொடுக்கலாம் என்பதை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அந்த அடிப்படையில் நடக்க வேண்டும் என்று கோயம்புத்தூர் காலேஜைப் பொறுத்த வரைக்கும் நாங்கள் நோட்டீஸ் கொடுக்க வேண்டும் என்று முடிவு செய்து அதன்படி அந்த இலாகா தலைவரான டி.பி.ஐ. அவர்கள் நோட்டீஸ் கொடுத்திருக்கிறார். அதன்படி

26th April 1960] [Sri C. Subramaniam]

கோயம்பத்தூர் காலேஜில் 1960-61 முதற்கொண்டு தமிழில் போதிக்க வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. அது டி.பி.ஐ.யின் கீழ் இருப்பதால் அவருடைய மானேஜ்மெண்டின் கீழ் இருக்கிறது என்ற முறையில் நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். அந்த அடிப்படையில் கோயம்பத்தூரில் எடுத்துக்கொண்டிருக்கிறோம். மற்ற அரசாங்கக் கல்லூரிகளைப் பொறுத்த வரைக்கும் 1963-64 முதற்கொண்டு எல்லா கல்லூரிகளிலும் ஆரம்பிக்க வேண்டும் என்று நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன்படி எல்லா கல்லூரிகளிலும் பி.ஏ. வகுப்பில் அந்த ஆண்டு முதற்கொண்டு தமிழில் பாடம் கற்பிக்கப்படும். யுனிவர்சிட்டி விதிக்கு மாறுபட்டு விதி செய்யப் படவில்லை. யுனிவர்சிட்டி விதிக்கு மீறி எந்த விதத்திலும் நடவடிக்கை எடுக்கவில்லை. தனிப்பட்டவர்களுடைய கல்லூரிகளைப் பொறுத்த வரையில் அவர்கள் சர்க்காருடைய உதவி பெற வேண்டுமானால் அவர்களும் அப்படி ஆரம்பிக்க வேண்டும். இல்லையானால் அவர்களுக்கு சர்க்காருடைய உதவி கிடைக்காது. அவர்களே சம்பளம் வசூல்செய்து கொண்டு நடத்திக்கொள்ள வேண்டியதுதான் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே யுனிவர்சிட்டி நடவடிக்கையில் சர்க்கார் எந்த விதத்திலும் தலையிடவில்லை. மானியம் கொடுப்பது சம்பந்தமாக முடிவு செய்ய வேண்டியது சர்க்காருடைய பொறுப்பு. அது யுனிவர்சிட்டியினுடைய பொறுப்பு அல்ல. நிதி விஷயமாக கட்டாயம் கொடுக்கவேண்டும் என்று சொல்வதற்கு யுனிவர்சிட்டிக்கு அதிகாரம் கிடையாது. யுனிவர்சிட்டி விதிகளில் எந்த விதத்திலும் தலையிடுவதாக இல்லை. அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற அதிகாரத்தில் எந்த விதத்திலும் தலையிடுவதாக இல்லை, தலையிடக் கூடிய அளவில் எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. வைஸ் சான்சலர்களை ஆலோசித்துத்தான் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. விதிகளை அனுசரித்து என்னென்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமோ அந்த முறையில் தான் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் சிலர் சொல்லலாம் மானியம் கொடுக்கவில்லையென்றால் பண நெருக்கடி ஏற்பட்டுவிடும் அதனால் அவர்கள் கட்டாயமாக ஒப்புக்கொள்வதற்கு வழி ஏற்படும் என்று சொல்லலாம். இப்படியே சிலர் கூறிக்கொண்டும் வருகிறார்கள். இது சரியான வாதம் அல்ல என்பது என்னுடைய கருத்து. அதைப்பற்றியும் இதில் விரிவாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. சர்க்காருக்கு இருக்கக் கூடிய நிதியை வைத்துக்கொண்டுதான் திட்டம் போட்டு வேலை செய்ய முடியும். ஒவ்வொன்றுக்கும் இவ்வளவு பணம் ஒதுக்க வேண்டும் என்று முடிவு செய்து அதை இந்தச் சபையின் முன் வைத்து முடிவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. அப்படிப் பார்க்கும்போது பி.ஏ. வகுப்பில் தமிழில் சொல்லிக்கொடுக்கவேண்டும் என்று சொன்னால் அப்படி நடவடிக்கை எடுத்துக்கொள்ளுகிறவர்களுக்கு சர்க்கார் உதவி செய்ய வேண்டியதாக இருக்கிறது. அப்படி தமிழில் சொல்லிக் கொடுப்பது என்று ஒத்துக்கொள்ளாவிட்டால் அவர்களே சம்பளம் விதித்து வசூலித்துக்கொள்ளலாம் என்று திட்டமிட்டிருக்கிறோம். இப்பொழுதுகூட ஆரம்பப் பள்ளிகளில் சர்க்காருடைய உதவி வேண்டுமானால் சம்பளம் வாங்கக் கூடாது என்றும் சம்பளம் வாங்குவதாக இருந்தால் அவர்களுக்கு சர்க்காருடைய உதவி கிடைக்காது என்று சொல்லி இருக்கிறோம். அதைப் போலவே யுனிவர்சிட்டி கிராண்ட் கமிஷன் இருக்கிறது. அதைப்பற்றி பிரமாதமாகச் சொல்லுகிறார்கள். யுனிவர்சிட்டி கிராண்ட் கமிஷன் என்ன சொல்லியிருக்கிறார்கள், அவர்கள் சொல்வது யாருக்கு இந்த மூன்று வருஷம் சம்பளம் கொடுப்பதாக ஒப்புக்கொண்டிருக்கிறார்களோ அந்த யுனிவர்சிட்டிக்குத்தான் அந்தச் சலுகைகள் கொடுக்கப்படும் என்றும் பணம் உதவி கொடுக்கப்படும் என்று சொல்லி இருக்கிறார்களே, மற்றவர்களுக்கு பண உதவி கிடையாது என்றும் சொல்லி இருக்கிறார்களே அதற்கு என்ன செய்வது.

இது financial sanction என்று சொல்லி குற்றம் சொல்ல முடியுமா என்ன. அவர்கள் இதை ஒரு கொள்கையாக ஒப்புக்கொண்டு, இது மாதிரி நடத்த வேண்டும் என்று சொன்னார்கள். ஆகையினால் இது மாதிரி வைக்கிறவர்களுக்கு உதவி செய்ய தயார் என்று சொன்னார்கள். அதுபோலத்தான் சர்க்கார் எடுத்துக்கொண்டிருக்கக் கூடிய நடவடிக்கையும்.

[Sri C. Subramaniam] [26th April 1960

மத்திய சர்க்கார் ஒரு விஷயத்துக்கு அதிகமாக மான்யம் கொடுக்கிறோம், இன்னொரு விஷயத்துக்கு அதைவிட குறைவாக மானியம் கொடுக்கின்றோம், சில விஷயங்களுக்கு மானியமே இல்லை என்று சொல்கிறார்கள். அதனால் நாம், மானியம் இல்லாமலும் செய்யவேண்டும் என்று அவசியம் இருந்தால் சில விஷயங்களை செய்கிறோம். மானியம் கிடைக்கும் விஷயங்களையும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்றால், எடுத்துக்கொள்கிறோம். ஆகையினாலே இதிலே யாருக்கு பொறுப்பு இருக்கிறதோ, அவர்கள் பார்த்து முடிவு செய்ய வேண்டியதுதான். அந்தப் பொறுப்பு இந்த சர்க்காருக்கும் இந்த சபைக்குந்தான் இருக்கிறதே தவிர, யுனிவர்சிட்டிக்கு பொறுப்பே அல்ல. அதனால் யுனிவர்சிட்டி விஷயங்களிலே தலையிட்டதாக யாரும் சொல்லமுடியாது. இதைத்தான் விரிவாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

அதற்கு அடுத்தபடியாக, இன்னும் ஒன்று எல்லோராலும் சொல்லப் படுவது.

**"Whether the change-over from English to Tamil as medium of instruction is opposed to the weight of expert opinion of academic authorities."**

இது எல்லாம் யாரோ அரசியல்வாதிகள் சொல்லக் கூடிய விஷயமே தவிர கல்வி நிபுணர்கள், கல்வியிலே தேர்ச்சி பெற்றவர்கள் எல்லாம் ஆங்கிலந்தான் தொடர்ந்து போதனா மொழியாக இருக்க வேண்டும், தமிழிலே மாற்றுவது பேராபத்து என்பது தான் என்று பலபேர் பேசுகிறார்கள். ஆனால் இதுவரையிலேயும், எந்தக் கமிட்டியாக இருந்தாலும், எந்த சபையாக இருந்தாலும், ஒவ்வொரு சமயத்திலேயும், அவர்கள் எடுத்துக் கொண்டிருக்கக்கூடிய முடிவு எவ்வளவு சீக்கிரத்திலே பிராந்திய மொழியிலே சர்வகலாசாலைகளிலே பாடம் சொல்லிக் கொடுக்கப்படுகிறதோ அப்பொழுதுதான் நாட்டுக்கும் நல்லது, மாணவர்களுக்கும் நல்லது. கல்விக்கும் நல்லது என்பதாகும். அது இங்கேயே கொடுக்கப்பட்டிருக்கிறது. தனிப்பட்டவர்கள் சொல்கிறார்களே தவிர, அவர்களும் இது மாதிரி கமிஷனிலோ, கமிட்டியிலோ, சபையிலோ இருக்கும்போது, மாற்ற வேண்டியது அவசியம்தான் என்று சொல்கிறார்கள். அதிலேயும் முக்கியமாக, நமது **Madras University Vice-Chancellor** அவர்கள் பங்கு கொண்டிருக்கக் கூடிய சபைகள், கமிஷன்கள், கமிட்டிகளிலே எவ்வாறு சொல்லப் பட்டிருக்கிறது என்பதை இதிலே வரிசையாக சொல்லப்பட்டிருக்கிறது. அதிலே முதன் முதலிலே கவனிக்கப்பட்டது இந்த மெமொராண்டத்தினுடைய ஆரம்பத்திலேயே கொடுக்கப்பட்டிருக்கிறது. 1-வது பக்கத்திலே 5-வது பாராவிலே ஆரம்பமாகிறது.

"*Page 1, Paragraph* 5.—The problem of medium of instruction **in educational institutions has exercised the minds of the people and the Government, both before and after independence. Progressive steps taken from as early as 1939 onwards have resulted in the introduction of the mother-tongue as the compulsory medium of instruction in the High Schools of the State."**

அதற்குப்பிறகு, கல்லூரிகளைப் பொருத்த வரையிலே

**"The fourth quinquennial conference of Indian Universities held in Bombay in March 1939 passed the following resolution:—**

நான் மகாத்மா காந்தி என்ன சொன்னார் என்று சொல்லவரவில்லை. கல்வியைப்பற்றி அவருக்கு என்ன தெரியும் என்று நம்முடைய கல்வி நிபுணர்கள் எல்லாம் சொல்லி விடுவார்கள். ஆனால், இந்த கல்வி நிபுணர்களெல்லாம் என்ன சொல்கிறார்கள் என்று தான் இதிலே சொல்லி இருக்கின்றது. 1939 மார்ச்சிலே

**'Resolved that, in the opinion of this conference, the medium of instruction at different stages of Education up to and including the Degree course should, as far as circumstances permit, be the mother-tongue of the students.'"**

26th April 1960] [Sri C. Subramaniam]

1939-லே நமக்கு சுயராஜ்யம் வருகிறதற்கு முன்னாலே அப்பொழுதுதான் எலெக்ஷன் நடந்து மக்கள் மந்திரி சபை ஏற்பட்டது. அப்பொழுது இவர்கள் கூடி யோசனை செய்தது.

"The Syndicate of the Madras University, after consideration of this resolution, resolved to give colleges the option to teach students in a modern Indian language in a group of optional subjects for the whole course in the Intermediate or any Degree course and expressed willingness to arrange for the examination of the candidates through the medium of that language if notice were given when the junior classes were commenced."

1939-லேயே சின்டிகேட் கூடி முடிவு பண்ணியது என்னவென்றால் Intermediate ஆனாலும் சரி, பட்டப்படிப்பாக இருந்தாலும் சரி, வேறு மொழிகளிலே பாடம் சொல்லிக்கொடுக்கலாம் என்பது. அப்பொழுது எத்தனை புத்தகம் இருந்தது தமிழிலே. தெலுங்கிலே, கன்னடத்திலே எவ்வளவு புத்தகங்கள் இருந்தன ? 1939-லே இருந்து 1960 வரையில் நமது தமிழ் மொழியும், பிற மொழிகளும் எவ்வளவு வளர்ந்து இருக்கின்றன ? இது ஒருபுறம் இருக்க அந்தக் காலத்திலேயே, அனுமதி கொடுக்கலாம் என்று பொதுவான தீர்மானம் நிபந்தனை எதும் போடாமல் நோட்டீஸ் கொடுத்து செய்யலாம், பரீட்சை வைக்க தயார் என்று சொன்னார்கள்.

"Later, in 1943, the Syndicate altered this, giving itself the power to permit candidates to appear for and answer the paper or papers in a group under Part III of the Intermediate examination in an Indian language from 1945 provided one year's notice was given by the college concerned."

அதன்பிறகு மூன்றாவது பாகம் சரித்திரம், போன்ற பாடங்களிலே Intermediate-க்கு மட்டும் சொல்லிக் கொடுக்கலாம் என்று 1943-லே மாற்றி அமைத்தார்கள். 1948-ல்

"Subsequently, in 1948, provision was made by the University to permit candidates to appear for and answer the papers in a group under Part III of the B.A. degree examination in an Indian language provided one year's notice was given by the college concerned."

இது 1948-லேயே வந்தது. 12 வருஷம் ஆய்விட்டது. 1946-லே

"Tamil was introduced as the medium of instruction in three colleges in the State including the Government Arts College, Coimbatore, in 1946."

ஆனால் 1949-50-லே கைவிடப்பட்டு விட்டது. அதற்குக் காரணம் போதுமான ஆயத்தம், சரியாக இல்லை. அதனால் தொடர்ந்து சொல்லிக் கொடுக்க முடியவில்லை என்று திரும்பவும் ஆங்கிலத்தை போதன மொழியாக ஏற்பாடு செய்துவிட்டார்கள். இதுதான் ரொம்ப முக்கியம்.

"The problem continued to be examined at an all-India level after independence. A committee of Vice-Chancellors of Indian Universities appointed by the Government of India to consider the question of medium of instruction recommended in 1948 that English should be replaced by Indian languages as the medium of instruction at the University stage during a period of five years from 1948, that Universities should, within this period, adopt the language of the State or Province or the region as the medium of instruction and examination and that, after the period of five years from 1948, English should cease to be the medium of instruction and examination."

ஆகையினாலே 1948-லே வைஸ் சான்ஸலர்கள் அடங்கிய கமிட்டி முடிவு செய்தது. இதிலே இருந்து 5 வருஷத்துக்கு தொடர்ச்சியாக முயற்சி எடுத்துக்கொண்டு 1953-வது வருஷத்திற்குப் பிறகு ஆங்கிலத்தை போதன

[Sri C. Subramaniam] [26th April 1960

மொழியாகவோ, பரீட்சை செய்யக்கூடிய மொழியாக இருக்கக் கூடாது என்ற திட்டத்தை சிபாரிசு செய்து இருக்கின்றது. இது மகாத்மா காந்தி செய்த முடிவு அல்ல. இது வைஸ் சான்சலர்கள் செய்த முடிவு. அதற்கு பிறகு

"The Central Advisory Board of Education expressed its view that the aim of all Universities should be the replacement of English by an Indian language as the medium of instruction at the University stage . . ."

Vice-Chancellors of University கமிட்டி செய்த தீர்மானத்தை பரிசீலனை செய்து, அவர்களும்

"The Central Advisory Board of Education expressed its view that the aim of all Universities should be the replacement of English by an Indian language as the medium of instruction at the University stage . . ."

என்று சிபாரிசு செய்தார்கள். இதற்கு மத்தியிலே University Education Commission, மிகவும் முக்கியமான கமிஷன், நம்முடைய சர்வகலாசாலை படிப்பைப்பற்றி எல்லாவிதமான ஆராய்ச்சியும் செய்து, ஒரு முடிவை சொல்ல வேண்டும் என்ற முறையிலே—இந்த மூன்று வருஷ பட்டப் படிப்பும் கூட இந்த University Education Commission செய்த சிபாரிசுகளை அடிப்படையாகக் கொண்டுதான் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதிலே நம்முடைய வைஸ் சான்ஸலரும் ஒரு மெம்பர், டாக்டர் ராதா கிருஷ்ணன், இன்றைக்கு உபஜனாதிபதியாக இருக்கின்றார்களே அவர்கள்தான் Chairman—அவர்கள் சொல்லி இருப்பதை படித்துப் பார்க்கவேண்டும். இது யாரோ வழியிலே போனவர்களோ, அரசியல் வாதிகளோ சொன்னதல்ல.

"*University Education Commission*—

*Place of regional languages.*—Higher education is the door through which some of the educated youth will pass into Federal services and Federal politics. But much the greater proportion will remain in the provinces. Both from the point of view of education and of general welfare of a democratic community, it is essential that their study should be through the instrumentality of their regional language. Education in the regional language will not only be necessary for their provincial activities, it will enable them to enrich their literature and to develop their culture. Educated naturally—(this is very important)—in the regional language, they ought to achieve higher standards of learning and of thought, and should be able to give a powerful stimulous to research and extension of the boundaries of knowledge."

ஏதோ வெறுமனே படிப்பதற்கு மட்டும் இல்லை. மற்ற எல்லாவிதமான கல்வித் துறைகளிலும் ஏற்படுகிற விருத்திக்கும் இந்த பிராந்திய மொழியில் கல்வி கற்பதின் மூலம்தான் அதிகமான வசதி ஏற்படும் என்பதை யுனிவர்சிட்டி Education கமிஷன் வற்புறுத்தி இருக்கிறது.

"Educated naturally in the regional language, they ought to achieve higher standards of learning and of thought, and should be able to give a powerful stimulous to research and extension of the boundaries of knowledge. Equipped with the requisite knowledge of the Federal language, the provincial students will have no difficulty in joining institutes of an All-India character, and the provincial scholars in undertaking to teach them."

ஆகவே படிப்பின் தரம் குறைந்துவிடும் என்று சொல்கிறார்களே. இந்த கமிஷன் அந்த மாதிரி சொல்ல வில்லை. அதற்கு மாறாக படிப்பின் தரம் மேலும் உயரும் என்று சொல்கிறது. மேலும் சிந்தனா சக்தி

அதிகமாக ஏற்படும் என்று சொல்லி இருக்கிறார்கள்.

" **They ought to achieve higher standard of learning and thought** "

ஆகையினால் மற்ற பகுதிகளில் பல கலாசாலைகள் வெவ்வேறு மொழிகளில் இருந்தாலும் கூட பொது மொழியாகிய ஹிந்தி தெரிந்தால் மற்றவர்களும் அங்கே போய் படிக்கலாம் என்று இருக்கிறது.

*Pockets of minorities.*—The policy that the language of the region should be the medium of education at all stages in the region has cretain obvious limitations. Theer are in India a number of provinces which contain pockets of inhabitants speaking a language different from the regional language. In such cases the right policy is to allow unreservedly the use of the mother-tongue for basic education and if the numbers are adequate for secondary education also, introducing the regional language gradually in the upper grades at the school as the child grows older, and making it the medium of instruction at the University stage.

ஆகவே வேறு மொழி பேசும் சிறுபான்மையோர்கள் இருந்தாலும் அவர்கள் ஆரம்ப பள்ளிக்கூடங்களிலும் உயர்நிலைப்பள்ளிக்கூடங்களிலும் தாய் மொழியால் கற்று யூனிவர்சிட்டி கட்டத்திலிருந்து பிராந்திய மொழியால்தான் அவர்களுக்கு சொல்லிக்கொடுக்க வேண்டுமென்று இருக்கிறது.

Therefore, we recommend that for the medium of instruction for higher education English be replaced as early as practicable by an Indian language which cannot be Sanskrit on account of vital difficulties and that higher education be imparted through the instrumentality of the regional language with the option to use the Federal language as the medium of instruction either for some subjects or for all subjects.

ஆங்கிலத்தைப் பற்றி இங்கே பேசவில்லை. ஆகவே யுனிவர்சிட்டி Education கமிஷன் எல்லா பாடங்களும் தமிழிலேயே இருக்கவேண்டுமென்றும் வேறு ஏதாவது ஒன்று பொது மொழியாக இருக்கவேண்டுமென்றால் ஹிந்தியைப்பற்றி கவனிக்கவேண்டுமென்றும் சொல்லி இருக்கிறது. இதை Central Advisory Board of Education -ம் ஒப்புக்கொண்டிருக்கிறது. இதில் ஒரு முக்கியமான விஷயம் இருக்கிறது. அதில் நாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். அவர்கள் என்ன சொன்னார்கள் என்பதை நாம் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். ஏனென்றால் பின்னால் வருபவைகளை நாம் மனதில் வைத்துக்கொண்டு வேலை செய்ய வேண்டி இருக்கிறது.

*The Central Advisory Board of Education.*—It noted that certain institutions were carrying on the experiment of using an Indian language as the medium of instruction or of encouraging the study of a common Indian language and expressed its opinion that the Universities which were willing to impart education in the national language should be allowed to do so and necessary financial aid should be given.

அப்போது National Language என்றால் ஹிந்தி மட்டும் என்று நினைத்துக் கொண்டு இருந்தார்கள். பிறகு National Language என்றால் 14 இந்திய மொழிகளையும் குறிக்கும் என்ற விளக்கம் நம்மால் பின்னால் கொடுக்கப் பட்டு அதை பிரதம மந்திரியும் மற்றவர்களும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

The Syndicate of the Madras University considered the report of the University Education Commission in 1950. Its resolution is extracted below :—

" The Syndicate while confirming the previous recommendations, viz. :—

(1) that educational institutions should have the freedom to choose their medium of instruction;

[Sri C. Subramaniam] [26th April 1960

(2) that educational institutions should not be deprived of the liberty of choosing English as the medium of instruction; and

(3) that All-India institutions of Research should for the present continue to have English as their language;

இதுதான் முக்கியம். அதாவது யுனிவர்சிட்டி வகுப்புகளில் பிராந்திய மொழியை போதனா மொழியாக்க உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும்.

**urges the need for—**

(*a*) taking immediate steps to prepare the ground for introducing the regional language as the medium of instruction in University classes;

(*b*) enriching sufficiently and suitably the regional language as the medium of instruction in University classes;

(*c*) enriching sufficiently and suitably the regional languages so that they can be used as the medium of instruction in due course;

(*d*) providing suitable books and properly equipped personnel for implementing the recommendations contained in clauses (*a*) and (*b*).

இதை 1951-ல் Senate-ம் பரிசீலனை செய்திருக்கிறது.

The Senate, in 1951, after considering this resolution of the Syndicate recommended to it that in taking immediate steps to prepare the ground for introducing the regional language as the medium of instruction in University classes, top priority should be given to preparing standard glossaries of scientific and technical terms in the four main languages of the State (Tamil, Telugu, Malayalam and Kannada) so that the regional languages might be enriched and suitable books in those languages might be provided soon. Notwithstanding all these recommendations of the University Grants Commission and the resolution of the Syndicate, the Madras University took no concrete steps to change the medium of instruction in the colleges affiliated to it, nor did they make any suggestions.

இதுதான் 1950ம் வருஷம் வரையில் இருந்த விஷயம். அதற்குப் பிறகு இந்த மொழிவாரி பிரச்னை வந்து ஆந்திரம் பிரிந்து விட்டது. அதற்குப் பிறகு 1955-ல் மற்றவர்களும் பிரிந்து போகும் நிலைமை ஏற்பட்டது. 1955 ஜூன் மாதத்தில் நான் கல்விமந்திரியாக இருந்தபோது ஒரு மகாநாடு கூட்டினேன். அதில் எல்லா தலைமை ஆசிரியர்களும் Vice-Chancellor களும் கல்வி நிபுணர்களும் கலந்து கொண்டு பேசினார்கள். அதில் எல்லோருடைய முடிவும் தமிழ் அல்லது பிராந்திய மொழிதான் போதனா மொழியாக இருக்க வேண்டும் என்பதுதான். சிலர் அவசரப்படாமல் எவ்வளவு மெள்ள போகவேண்டுமோ அவ்வளவு மெள்ள போக வேண்டுமென்ற கருத்தை ஒரு சிலர் சொன்னார்கள். ஆனால் பெரும் பகுதியினர் உடனடியாக செய்யவேண்டுமென்று சொன்னார்கள். அதுவும் பள்ளிக்கூடங்களில் தமிழ் போதனா மொழி ஆகிய பிறகு யுனிவர்சிட்டியில் மட்டும் அதை போதனா மொழியாக்காமல் இருந்தால் பிள்ளைகள் கஷ்டப்படுவார்கள். ஆகவே உடனடியாக அங்கேயும் தமிழை போதனா மொழியாக ஆக்க வேண்டுமென்று சொன்னார்கள். இதை எல்லாம் கேட்ட பிறகு நான் நடவடிக்கை எடுப்பதற்காக இரண்டு வைஸ் சான்ஸலர்களையும் டி. பி. ஐ.யையும் வைத்துக் கொண்டு ஆலோசனை கேட்டேன். இது கவர்ன்மெண்ட்டு எடுக்க வேண்டிய நடவடிக்கையல்ல. ஒரு கமிட்டி போட்டு நடவடிக்கை எடுக்கச்சொன்னார்கள். அதன்படி ஒரு கமிட்டி போடப்பட்டது.

26th April 1960] [Sri C. Subramaniam]

*G.O. Ms. No.* 1256, *Education, dated* 18*th July* 1955 (*Appendix III*).

" . . . To consider the further steps to be taken in the matter, a meeting was convened by Government on 23rd June 1955 which was attended among others, by the Vice-Chancellors of University of Madras and the Annamalai University and it was decided at this meeting that a Committee composed of experienced educationists and experts in the several subjects should be appointed to advise the Government in the matter. The Government accordingly constitute a Committee consisting of the following Members :—

இந்த மாகாநாடு 18-ம் தேதி நடந்தது.

Dr. A. Lakshmanaswami Mudaliar, Vice-Chancellor, University of Madras (Chairman).

Sri T. M. Narayanaswami Pillai, Vice-Chancellor, Annamalai University, Annamalainagar.

The Director of Public Instruction (Member-Secretary), and so on.

இதுமாதிரி 30 பேர்களை கொண்ட ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது.

The Committee may take note of the following resolution of the Reference Board of Scientific Terminology.

அதாவது international terminology இருக்கவேண்டும். அந்த கமிட்டியின் ஆலோசனைப்படி நடப்பதாக ஒப்புக்கொண்டோம். ஆனால் அந்த கமிட்டி எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை. சர்க்காருக்கு அதனிடம் இருந்து எவ்விதமான அறிக்கையும் வரவில்லை.

அப்புறம் 1956-லேயே நம் மாகாணம் பிரிந்தது. தனித் தமிழ் மொழி 10–30 a.m.
பேசுகின்ற ராஜ்யமாக அமைந்துவிட்டது. முன்னாலாவது ஏதாவது சாக்குப் போக்குக்கு சொல்லலாம். இரண்டு மூன்று மொழி பேசுகின்றவர்கள் இருக்கின்றார்களே, ஒவ்வொரு மொழிக்காரர்களுக்கும் தனியாகப்புத்தகம், தனியான ஆசிரியர்கள் என்று எப்படி ஏற்படுத்துவது என்று சொல்லலாம். ஆனால் தனித் தமிழ்மொழி பேசும் ராஜ்யமாக அமைந்த பிற்பாடு இந்தக் சாக்கு சொல்வதற்கில்லை. 1956-க்குப் பிற்பாடு டிசெம்பர் மாதம் என்பது என்னுடைய ஞாபகம் ஆட்சி மொழி தமிழாக இருக்கவேண்டும் என்ற சட்டத்தை பெரிய ஆர்வத்துடன், குதுகலத்துடன் நாம் இந்தச் சட்டசபையில் நிறைவேற்றி வைத்தோம். அதன்பிற்பாடு போதனா மொழி கல்லூரிகளில் எப்படி இருக்கவேண்டும் என்பது மிகவும் அவசரமான விஷயமாகிறது. 1957-ல் தேர்தல் வந்தது. 1955-ல் போட்ட கமிட்டி ரிப்போர்ட்தான் என்ன வருகிறது பார்ப்போம் என்று அந்தச் சமயம் இப்பிரச்சனையை அசரப்போட்டோம். அதற்குப் பிற்பாடுதான் இந்த "மூன்று ஆண்டுகளில் எல்லா மாறுதல்களும் வந்தன. பார்லிமெண்ட் கமிட்டி தீர்மானப்படி பி.ஏ. பரிட்சைக்கு வைக்கலாம் என்று அது வரையில் ஆரம்பம் பண்ணவேண்டும் என்று முடிவு செய்தோம். 1959-லே இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. இதற்குமேல் செய்திருப்பதை எல்லாம் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. இதுவரையிலும் எந்தக் கமிட்டியாவது, எந்த நிபுணர்களாவது பிரதேச மொழி போதனா மொழியாக இருக்கக்கூடாது என்று சொல்லியிருக்கிறார்களா என்று பாருங்கள். ஆங்கிலம்தான் போதனா மொழியாக இருக்கவேண்டும் என்கிற உற்சாகமுள்ளவர்கள வேண்டுமானாலும் அதற்குச் சாதகமாக யாராவது சொல்லியிருக்கிறார்களோ என்று எடுத்துக் காட்டினால் நான் ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருக்கிறேன். யாரோ ஒருவர் துணைவேந்தர் சொல்வதற்கு கல்வி மந்திரி எதிராக இருக்கிறார் என்று விஷயம் தெரியாமல் பேசலாம், சிலர் பேசுகிறார்கள். சிலர் எழுதியும் வருகிறார்கள். "நம் நாடு" பத்திரிகையில் தான் அவ்வாறு எழுதியிருக்கிறது. பின்னால் பதில் சொல்கிறபோது அதைச்சொல்கிறேன்.

[Sri C. Subramaniam] [26th April 1960

இரண்டாவது விஷயம். '**whether the change—over from English to Tamil as medium of instruction is opposed to the weight of expert opinion of academic authorities**' என்பதிலே—ஒவ்வொரு விஷயத்தையும் எடுத்துக் காட்டியிருக்கிறேன். இதை எதிர்த்துச் சொல்லக் கூடியவர்கள் கிடையாது. அதற்கு அடுத்தபடி '**is the change-over prejudicial to the development of science and technology**' என்பதை திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அதை ஒட்டித்தான் சையன்ஸ், டெக்னலஜி முதலியவற்றில் இப்போது முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது. என்னுடைய கருத்து என்னவென்றால் எப்போது இதுவும் தமிழாக்கப்படுகிறதோ அப் போது தான் இவையும் வளர்ச்சி அடையும். ஆனாலும் மற்றவர்கள் சொல்வதை ஏற்றுக்கொண்டு அதைப் பொறுத்த வரையில் எந்தவிதமான மாறுதலும் செய்யவில்லை. ஆகவே அந்தக் குற்றச்சாட்டு எந்த அள வுக்குப் பொருத்தமானது என்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். இன் னொன்று முக்கியமாகச் சொல்லப்படுகிறது.

It is asserted that the change-over will be prejudicial to national unity.

என்று போட்டிருக்கிறார்கள். இதற்கு நான் பதில் சொல்லவில்லை. நான் சொன்னாலும் அரசியல்காரன். அரசியல் கருத்தை வைத்துச்சொல்கிறான் என்று சொல்வார்கள். ஆனால் இந்தியை போதனமொழியாக்குவதற்கு முதலில் எடுத்துக் கொண்ட நடவடிக்கைபடி இந்தக் கேள்வித்தாள் யூனிவர்ஸிடிகளுக்கு அனுப்பி வைக்கப்பட்டது. அப்போது அவர்களே விடை எழுதியிருக்கிறார்கள். யூனி வர்ஸிடியைச் சேர்ந்தவர்கள் என்ன பதில் சொல்லியிருக்கிறார்கள் என் றால்.

"Inter-University migration of students and teachers affects only a small proportion of students and for this purpose it would be futile to have a common system in all Universities. So far as teachers are concerned, provincialism has come to stay and it is a decreasing number that can find opportunities of employment in other parts of the country either in the teaching profession or in any other occupation."

என்று சொல்லிவிட்டார்கள். நான் சொல்வதாக இருந்தால் இன்னும் வேறுவிதமாகக் கூடச் சொல்லியிருப்பேன். போதன மொழி நாடு முழு வதற்கும் ஒன்றாக இருக்கவேண்டிய அவசியம் இல்லை, என்பது இவர் களுடைய கருத்து. இதில் இன்னொன்றை யோசித்துப்பார்க்க வேண்டும். நாம் மாத்திரம் நம்முடைய சர்வகலாசாலையில் பிராந்திய மொழியை போதனமொழியாகக் கொண்டுவரவில்லை. மற்ற எல்லா சர்வகலாசாலை களிலும் நமக்கு முன்பே இந்த வேலை ஆரம்பமாகிவிட்டது. ஸ்ரீ மாலி அவர்கள் இதைப்பற்றி லோகசபையில் பிரசங்கம் செய்தார்கள். எட்டு சர்வகலாசாலைகளில் பிராந்திய மொழியையோ இந்தி மொழியையோ போதன மொழியாக ஆக்கிவிட்டார்கள். இன்னும் 14 சர்வகலாசாலைகளில் பிராந்திய மொழியை போதன மொழியாக ஆக்கக்கூடிய திட்டம் ஏற் பட்டுவருகின்றன. சென்னை மாத்திரம் தனியாக இருக்கமுடியுமா? மற்ற வர்கள் எல்லோரும் துணிந்து குதித்து நீந்த ஆரம்பித்து விட்டார்கள். நாம் மட்டும் ஆங்கிலத்தை போதன மொழியாக வைத்துக்கொண்டிருந்தால் நான் கைந்து வருஷங்கள் கழித்து நம் நிலை என்ன ஆகும்? அநேகமாக மற்ற எல்லா கல்லூரிகளிலும் இந்தியோ இதரமொழியோ போதன மொழியாக வந்து அந்த மொழிகளும் நல்ல வளம்பெற்று விட்ட சமயத்தில் நாம் ஆங்கிலத்தையும் வைத்துக்கொள்ள முடியாது. தமிழ் மொழியும் அப் போது வளம் பெற்று இருக்காது. இன்றைக்கு ஒரே மொழிதான் போதன மொழியாக இருக்கவேண்டும் என்று நம் ராஜ்யத்தில் உள்ளவர்கள் சொல்லும்போது ஆங்கிலம் தான் இருக்கவேண்டும் என்கிற நினைப்பில் சொல்கிறார்கள். "ஆமாம், ஆமாம், இந்தியா முழுவதற்கும் ஒரு மொழி தான் போதன மொழியாக இருக்கவேண்டும்" என்று மற்றவர்கள்

26th April 1960] [Sri C. Subramaniam]

ஒப்புக் கொள்ளும்போது இந்தியை ஒரு மொழியாகக் கொண்டுவந்து விடலாம்" என்கிற நினைப்பில் சொல்கிறார்கள். இதை நாம் புரிந்து கொள்ளவேண்டும். எப்படியோ இன்றையதினம் ஆங்கிலம் வந்து புகுந்து விட்டது. ஆங்கிலம் போயிற்று என்றால் இனி நம் ராஜ்யத்தில் தமிழ்தான் வரவேண்டுமே தவிர இந்தி புகுவதற்கு நாம் இடம் கொடுக்கக்கூடாது.

இந்திதான் எல்லா மாகாணத்திலும் வரவேண்டும் என்று இந்தி பேசுபவர்களிடம் கோபம் கொள்ளக்கூடாது. அப்படி நினைப்பதுதான் அவர்களுக்கு இயற்கை. என் மொழி எல்லாயிடங்களிலும் பரவ வேண்டும் என்று நான் நினைப்பதில் தவறு கிடையாது.

ஆனால் நாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் ஏமாந்தவர்களாக ஆவோம். தமிழர்கள் எல்லாவற்றிலும் ஏமாந்தவர்கள் என்பதை நிரூபிக்கவேண்டும் என்றால் இவ்விஷயத்திலும் நான் எடுத்துக்கொள்கிற நடவடிக்கையை யாரும் ஒப்புக்கொள்ள வேண்டாம். (ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம்: தமிழர்கள் ஏமாந்தவர்கள் என்று யார் சொன்னார்கள்.) திராவிட முன்னேற்றக் கழகமே அந்த அடிப்படையில் தான் வளர்ந்தது. பிறர் நம்மை ஏமாற்றுகிறார்கள், நாம் ஏமாறுகிறோம் என்ற அவர்கள் சொல்கிற வாதம் இவ்விஷயத்திலாவது பொய்யாகப் போகவேண்டும் என்றால் நாம் ஜாக்கிரதையாக, துணிவாகச் செயல்பட வேண்டும். என்னைப் பொறுத்த வரையில் நான் ஏமாறமாட்டேன். அவர்கள் ஏமாறலாம். மற்ற மாகாணத்தவர்கள் எல்லாம் துணிந்து நீந்த ஆரம்பித்துவிட்ட சமயத்திலும் கூட நாங்கள் இறங்கமாட்டோம், நாங்கள் இறங்கமாட்டோம் என்று சொல்வது சரியாகாது. அதிலும் அவர்கள்தான் கட்சிப் பத்திரிகையிலும் கூட இதில் இருக்கக்கூடிய அபாயத்தை சரியாக உணர்ந்து கொள்ளாமல் எழுதி வருகிறார்கள்.

ஸ்ரீ அண்ணாதுரை அவர்கள் வருவார் என்று பார்த்தேன். **It is asserted that the changeover will be prejudicial to national unity** என்பதை ஒப்புக்கொள்வதற்குத் தயாராய் இல்லை. அது சரியான கருத்து அல்ல என்பதையும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

**That the Government are being unduly hasty"** என்று இன்னொரு குற்றச்சாட்டு இருக்கிறது. இதிலே இருக்கும் ஒரு பகுதியைப் பற்றி சொன்னார்கள். இன்னொரு பகுதி **1963-64**-ல் ஹையர் செகண்டரி கிளாஸ் வரைக்கும் தமிழ் படித்து நேரடியாக பாட படிப்பிற்கு யூனிவர்சிடி படிப்பிற்கு போகவேண்டிய அவசியமாக இருக்கிறது. யூனிவர்சிடி பாட படிப்பிற்கு போகும்போது அப்போதாவது தமிழ் படிப்பு சொல்லிக் கொடுக்கக்கூடிய நிலைமை இருந்தால் சிறப்பாக இருக்கும். விஞ்ஞானம் இதற்கெல்லாம் ஓரளவு ஆங்கிலம் இருந்தால் போதும். டெக்னிகல் டர்ம்ஸ் தெரிந்தால் போதும். ஆனால் கலைப்பகுதியில் இருக்கும் பூகோளம், அர்த்த சாஸ்திரம், தத்துவ சாஸ்திரம் போன்ற இவைகளுக்கெல்லாம் அதிகமாக ஆங்கிலம் அறிவு வேண்டியதாய் இருக்கும். **1963-64**-ல் வரவேண்டிய அவசியம் இருக்கிறது. ஆகையால் இதற்கான ஆரம்பத்தை இப்போதே தயார் செய்வதற்கு முயற்சி செய்யவேண்டும். மற்ற மொழிகளில் போதுமான அளவு பாட புஸ்தகங்கள் எல்லாம் தயார் செய்துக்கொண்டிருக்கும்போது நாம் மட்டும் பின்தங்கி இருந்தால் அப்போது இன்னும் அதிகமான கஷ்டப்பட வேண்டிய நிலைமை ஏற்படும் என்பதை வலியுறுத்திச் சொல்கிறேன். ஆகையால்தான் இப்போது நாம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்கிறோம் என்பதை திட்டவட்டமாக சொல்லப்பட்டிருக்கிறது. இதிலே முக்கியமாக கண்டிருக்கக்கூடிய கருத்துக்கள் பற்றி கடைசியில் பதிலளிக்கையில் எல்லா விஷயங்களையும் விளக்கி சொல்லவேண்டுமென்று நினைத்திருந்தேன். ஆனால் நேற்று சாயங்காலம்தான் வெள்ளை அறிக்கையைப் பார்த்ததாகச் சொல்லப்படுவதால் வெள்ளை அறிக்கையில் கண்டிருக்கும் கருத்துக்களை எல்லாம் விவாதிப்பதற்குச் சௌகரியமாக இருக்கும் என்று கருத்து தெரிவித்தால் இதைப்பற்றி எடுத்துக்கொள்ள விரும்புகிறேன்.

[Sri C. Subramaniam] [26th April 1960

இதுவரையில் நடந்திருக்கும் திட்டங்களை இதிலே விவரித்திருக்கிறேன். இதை விரிவாக எடுத்துக்கொள்ளவேண்டிய அவசியம் இல்லை என்று நினைக்கிறேன். கல்வியிலே ஆரம்பக் கல்வி, உயர்நிலை பள்ளி படிப்பு, இதற்கு மேலே கல்லூரி படிப்பு, தொழில் நுணுக்கப்படிப்பு, **Technical Education,** போதனா மொழி இம்மாதிரி பல இருக்கின்றன. எல்லாவற்றையும் பற்றி பேச முடியாது. ஆகையால் கனம் அங்கத்தினருக்கு எதில் அதிக விருப்பம் இருக்கிறதோ அந்தத் தலைப்பை எடுத்துக்கொண்டு ஆலோசனை கூறினால் அந்த ஆலோசனையை ஏற்று கொள்ளமுடியும். என் இலாக்காக்களிலே இருக்கும் குற்றம் குறைகளை எடுத்துக்காட்டினால் அதை நிவர்த்தி செய்துக்கொள்வதற்கு என்றைக்கும் தயாராய் இருக்கிறோம என்று உறுதி சொல்லி இந்த அடிப்படையிலே கனம் அங்கத்தினர்கள் தங்கள் கருத்துக்களை கூறவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

Sri K. Vinayakam and Sri K. Anbazhagan rose.

The Hon. Speaker called Sri Anbazhagan.

SRI K. VINAYAKAM : Did I not catch your eye, Sir?

MR. SPEAKER : The hon. Member Sri Anbazhagan **caught it first.**

SRI K. ANBAZHAGAN : பாயின்ட் ஆப் இன்பர்மேஷன், வெள்ளை அறிக்கையைப்பற்றி மிக விரிவான கருத்துக்களை தெரிவித்து இருக்கிறார்கள். இதைக்குறித்து அங்கத்தினர்கள் எல்லோரும் பேசவேண்டுமென்று விரும்புவது இயற்கை. இன்று கல்வி மாண்யத்தை ஒட்டி நடைமுடையில் இருக்கும் பிரச்னைகளைக்குறித்து பேச நேரம் போதாது. அப்படி இருக்க வெள்ளை அறிக்கையைப் பற்றி தனியாக விவாதம் செய்வதற்கு ஒரு பகலோ அல்லது ஒரு நாள் பிற்பகலோ ஏற்பாடு செய்வதற்கு நம்முடைய சட்டமன்ற தலைவர் அவர்கள் இசைவார்களா ? இதற்கு சபாநாயகர் அவர்கள் அனுமதி அளிப்பார்களா என்று தெரிந்துகொள்ளவிரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : I have no objection.

MR. SPEAKER : I will give my decision later.

• SRI K. VINAYAKAM : Sir, I am not to be one of those **lucky members** that are to take part in this debate. Since the question of introducing regional language as medium of instruction at the collegiate stage is a very controversial one we want clear views on the stand taken by the Vice-Chancellor and not in his capacity as the Leader of the Opposition in the Council. Is he for the introduction of Tamil as medium of instruction for the B.A. degree courses? Is he for a phased programme as is now being experimented at the Coimbatore College without being hasty about it? For instance, the brochure supplied to us has been got up in English. That shows that we are not yet in a fit stage to take to the regional language as the medium of instruction in colleges. That is the idea we are harping upon. I am not one of hose siding the Vice-Chancellor on all issues. All I want is the experiment now conducted by the Government should be successful, first. We should not regret after four or five years that we embarked upon a thing which proved a failure later, as it proved to be in the early stages of the experiment at Coimbatore. I want a clear and categorical statement, not an ambiguous one, from the Hon. Minister, whether he is for or against, or whether he say 'yes' or 'no' to this.

THE HON. SRI C. SUBRAMANIAM: இப்பொழுது வைஸ் சான்சலருடைய மனதைப் பொறுத்தவரை அப்பெண்டிக்ஸ் II-ல் உள்ள குறிப்பு அடிப்படையில்தான் கலந்து ஆலோசித்தேன். அப்படி கலந்து ஆலோசித்த

26th April 1960] [Sri C. Subramaniam]

தில் இதெல்லாம் சரி என்று தான் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். இதற்குப் பிறகு, "நாங்கள் ஒப்புக்கொள்ளவில்லை. வைஸ் சான்சலர் என்ற முறையில் இதுவரையில் நான் எழுதியது கிடையாது. தனிப்பட்ட முறையில்தான் சொன்னேன், வைஸ் சான்சலர் என்ற முறையில் சொல்லவில்லை" என்று எழுதவில்லை. ஆகையால் நேரடியாக அவர்களிடத்தில் அறிந்துகொண்டவரையில் இதற்கு அவர்கள் சரி என்று சம்மதம் கொடுத்து மாற்றம் செய்வதையும் ஒத்துக்கொண்டு இந்த ஜி. ஓ.வையும் வைஸ் சான்சலர் என்ற முறையில் அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்று தான் எடுத்துக்கொண்டிருக்கிறேன். "நான் முதலில் ஒப்புக்கொண்டாலும்கூட இப்போது மாற்றிக்கொண்டிருக்கிறேன்" என்று இதுவரையில் எனக்கு தகவல் வரவில்லை. யூனிவர்சிடி செனட்டோ அல்லது சிண்டிகேட்டோ இதை பரிசீலித்து ஒத்துக்கொள்ளவில்லை என்ற அப்பிராயம் தெரிவிக்கவில்லை. வைஸ் சான்சலர் பொறுத்தவரை நான் அவர்களிடம் பேசினவரை இதற்கு அவர்கள் ஒத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று நான் சொல்லுவேன்.

**Mr. SPEAKER** : நான் சபைக்கு ஒரு விஷயத்தைப்பற்றி தெரிவிக்க விரும்புகிறேன். இப்பொழுது பாக்கி இருப்பது 160 நிமிஷங்கள், இந்த நேரத்தில் கனம் கல்யாணசுந்திரம் அவர்கள் எதிர்கட்சி சார்பாக பேசுவார்கள். அவர்கள் அரை மணி நேரம் கேட்டார்கள். 20 நிமிஷம் கொடுக்கிறேன் என்று சொன்னேன். 140 நிமிஷம் பாக்கி இருக்கிறது. கனம் அமைச்சர் அவர்கள் பதில் அளிப்பதற்கு முக்கால் மணி நேரம் ஆவது வேண்டியிருக்கும். பாக்கி இருப்பது 100 நிமிஷம் கூட இல்லை. என்னிடத்தில் 14 அங்கத்தினர்கள் பேச வேண்டுமென்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். காங்கிரஸ் கட்சியில் இருந்து 11 பேர்களும், திராவிட முன்னேற்றக் கட்சியில் 2 பேர்களும், கம்யூனிஸ்ட் கட்சியிலே இருந்து ஒருவரும், சோஷலிஸ்ட் கட்சியிலிருந்து ஒருவரும் பேச வேண்டுமென்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். ஐ என். டி.வியில் இருந்து இன்னும் பெயர் கொடுக்கவில்லை. இந்த மான்யத்தை எப்படித்தான் முடிக்கமுடியும் என்று தெரியவில்லை. வெள்ளை அறிக்கை மீது விவாதம் அளித்தாலும்கூட இன்றைய மான்ய கோரிக்கை நேரம்போதாது. ஆகையால் சட்டசபை முதல்வரும் சபையும் ஒத்துக்கொண்டால் இன்று மாலையிலும் உட்கார்ந்து முடிக்கலாம் அல்லது, அங்கத்தினர் ஒவ்வொருவரும் ஐந்து நிமிஷம் வீதம் பேசுகிறார்களா என்று அவர்கள்தான் சொல்லவேண்டும்.

**Sri M. KALYANASUNDARAM** : இன்றைய மத்தியானமும் சபையை வைத்துக்கொள்ளலாம்.

**Mr. SPEAKER** : அப்படியானால் இன்று பிற்பகல் $1\frac{1}{2}$ மணி வரையிலும் விவாதம் நடத்தி மறுபடியும் பிற்பகல் $3\frac{1}{2}$ மணிக்கு சபையை வைத்துக்கொள்ளலாம். மூன்றரை மணிக்கு வைத்தால் தான் கனம் அமைச்சர் அவர்கள் மேல் சபையில் கேள்வி நேரத்தை முடித்துக் கொண்டு வருவதற்கு சௌகரியமாக இருக்கும்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : நான் ஒரு கருத்தை சொல்ல விரும்புகிறேன். வெள்ளை அறிக்கையைப்பற்றி தனியாக விவாதம் நடத்தாமல் இருக்கலாம் என்றாலும், இதை சபையின் முன் வைத்துவிட்டு விவாதிக்காமல்விட்டுவிடுவது சரியாகாது. வெள்ளை அறிக்கையின் மீது இன்னொரு தடவை வேண்டுமானால் இந்தச் சபையின் முன் வைத்து விவாதம் செய்து இந்த சபையின் கருத்து என்ன என்பதைப்பற்றியும் தெரிந்துக்கொள்ள சந்தர்ப்பம் அளிக்கலாம். சந்தர்ப்பம் அளிப்பது மட்டும் அல்ல. காங்கிரஸ் கட்சியைப் பொறுத்தவரை அவர்கள் அம்மாதிரி தான் ஓட்டுப்போடவேண்டுமென்று கட்டுப்படுத்தலாம், அவர்கள் இஷ்டம் போல் அவர்கள் மனசாட்சி எப்படி சொல்லுகிறதோ அம்மாதிரி ஓட்டு செய்யலாம் என்று நினைக்கிறேன். அவர்களுக்கு பிரிடம் ஆப் வோட் இது விஷயத்தில் கொடுத்துவிட வேண்டும். ஆகையால் இந்த சபையின் முடிவு என்ன என்பதைப்பற்றி தெரிந்துக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். இங்கு தடை போடும்போது தனியாக விவாதம் வைத்து முடிவைத் தெரிந்துக்கொள்ளலாம் என்பது என்னுடைய விருப்பம்.

மேல் சபையில் வைத்து அந்த முடிவும் நமக்குத் தெரியவேண்டும். இந்த சபையின் முடிவைத்தான் சர்க்கார் கடைசியாக ஏற்று நடத்த வேண்டுமென்றாலும் அவர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்று கேட்பதற்கு நான் ஓட்டு எடுக்கத் தயாராய் இருக்கிறேன். பிரிடம் ஆப் ஓட் கொடுத்ததினாலே கனம் அங்கத்தினர்களுடைய கருத்தைத் தெரிந்துக் கொள்ள வேண்டியதாய் இருக்கிறது. ஆகையால் இதில் அங்கத்தினர்களுடைய கருத்துக்களைத் தெரிந்துக்கொள்ளவேண்டியது ரொம்பவும் அவசியம். ஆனால் அதற்காக வெள்ளை அறிக்கை மீது அங்கத்தினர்கள் இப்போது தங்கள் கருத்துக்களை சொல்லவேண்டாமென்று தடுக்கவேண்டிய அவசியம் இல்லை. யார் வேண்டுமானாலும் பேசலாம். அவரவர்கள் கருத்துக்களைச் சொல்லலாம். எதிர்க்கட்சித் தலைவர்கள் கருத்துக்களைத் தெரிவிக்க வேண்டியது அவசியம். பொது மக்களுக்கு வழி காட்டும் பொறுப்பு நம்முடையது. ஜூன், ஜூலையில் கோவை காலேஜில் இது அமுலுக்கு வரப்போகிறது. ஆகவே, அவர்கள் கருத்துக்களைத் தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : இந்த மான்யக் கோரிக்கை மீது பேசும்போது, இந்த வெள்ளை அறிக்கையில் உள்ள சமாச்சாரங்களைப் பற்றி பேசக் கூடாது என்று என்னால் தடை போட முடியாது. ஆகவே, அதுபற்றி அவர்கள் பேசினால் நான் அனுமதி கொடுக்க வேண்டியதுதான். இன்னொரு நாள் வேண்டுமானால் இதைப்பற்றி விவாதித்துக் கொள்ளுங்கள். அது அரசாங்கத்தின் இஷ்டம். வெள்ளை அறிக்கையை சபை முன் வைத்த பிறகு அதுபற்றி அங்கத்தினர்கள் குறிப்பிட்டுப் பேசினால் அதை நான் தடுக்க முடியாது.

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படி பேச வேண்டுமென்றுதான் நானும் கேட்டுக் கொள்கிறேன்.

MR. SPEAKER : இன்று ஒரு நாள். ஜூலை மாதத்தில் ஒரு நாள். இந்தக் கோரிக்கையை பாஸ் செய்யவேண்டும். இந்த மான்யக் கோரிக்கை மீது பேசும்போது வெள்ளை அறிக்கை மீதும் பேசலாம் என்பதுதான் என் தீர்ப்பு. ஒவ்வொருவருக்கும் பத்து பத்து நிமிடங்கள் கொடுக்கிறேன். இந்த சபை 1-30 க்குக் கலைந்து மீண்டும் 3-30-க்குக் கூடும்.

SRI M. P. SUBRAMANIAM : சட்டமன்றத் தலைவர் அவர்களே, நம் முன் கல்வி இலாகாவினால் தயாரிக்கப்பட்ட ஒரு குறிப்பு கல்வி இலாகா பணிகளைப்பற்றி விரிவாக இங்கு கொடுத்திருக்கிறார்கள். கடந்த ஒன்றிரண்டு ஆண்டு காலமாக நம் கல்வி இலாகாவால் பெரிதும் ஈர்க்கப்பட்டிருப்பது இலவச மத்திய உணவு, பள்ளிச் சீரமைப்பு, இலவச உடை தானம்; இந்த மூன்றிலும் மிக முக்கியமான கவனம் செலுத்தப் பட்டு வருகிறது என்பதை நாம் நன்கு அறிவோம். இதுகுறித்து தமிழ் நாடு வழிகாட்டுகிறது என்ற பெருமையைக் குறித்து நமது கல்வி இலாகாவும், கல்வி அமைச்சர் அவர்களும் போற்றப்படுகிறார்கள் என்பதை இங்கு பலமுறை சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். மற்ற மாநிலங்களும் நமது மாநிலங்களைப் பின்பற்ற வேண்டுமென்றும் அதில் மத்திய அரசாங்கம் அக்கறை செலுத்துவதாகவும் இங்கு பல முறை கூறப்பட்டிருக்கிறது. இந்த மூன்று திட்டங்களால், பள்ளிச் சீரமைப்பு, இலவச உடை, இலவச பகல் உணவு இவைகளினால் பள்ளிக்குச் செல்லும் பிள்ளைகளின் எண்ணிக்கை அதிகமாகியிருக்கிறது என்பதை நான் மறுக்கவில்லை. அதனால் பல ஏழைப் பிள்ளைகள் பள்ளிக்கு சென்று படிப்பதற்கு வசதியாகயிருக்கிறது; அவர்கள் கொடுத்திருக்கிற குறிப்பிலே நம் தமிழ் நாட்டிலுள்ள எல்லாத் துவக்கப் பள்ளிகளிலும் ஆயிரத்திற்கு மேற்பட்ட பள்ளிகளைத் தவிர மற்ற பள்ளிக்கூடங்களில் இலவச பகல் உணவு கொடுக்கப்பட்டு வருகிறது. அதற்காக இந்த நடப்பாண்டில், 1960-61-ல் 80 லட்சம் ரூபாய் பகல் உணவிற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்கிறார்கள். உண்மையிலேயே இந்தப் பகல் உணவுத் திட்டம் நல்லமுறையில் நடை பெறுகிறதா என்று பார்த்தால் அப்படி பல இடங்களிலும் நடைபெறவில்லை என்று

தான் நான் குறிப்பிட விரும்புகிறேன். என் அனுபவத்தைச் சொல்ல வேண்டுமென்றால் சேலம், ஆத்தூர் வட்டத்தில் அரசாங்கம் கொடுக்கிற ஆறு நயா பைசாவை வைத்துத்தான் இலவச உணவு போடப் படுகிறதே தவிர அரசாங்கம் இங்கு சொல்வது போல் பெற்றோர்களிடமிருந்தோ அல்லது பொது மக்களிடமிருந்தோ வசூல் செய்து போடுவது என்பது முடியாத காரியமாக இருக்கிறது என்பதை நான் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். ஏனெனில், பிள்ளைகளின் நலனை உத்தேசித்து அல்லது பள்ளியின் நன்மையை உத்தேசித்து உதவி செய்கிறவர்கள் ஒன்றிரண்டு பேர்கள்தான் இருக்கிறார்கள். அதுவும் இரண்டு மூன்று மாதங்களுக்குத் தான் கொடுக்கிறார்கள். நிரந்தரமாக அவர்களால் கொடுக்க முடிவதில்லை. ஒரு சிலயிடங்களில் ஒரு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஒன்றிரண்டு ஏக்கர் என்றோ அல்லது பணமாகவோ கொடுத்திருக்கிறார்கள். மற்ற எல்லா யிடங்களிலும் அப்படியில்லை. இதனால் ஆசிரியர்கள் பலவிதமான தொல்லைகளுக்கு ஆளாக்கப்படுகிறார்கள் என்பதை இங்கு சுட்டிக்காட்ட விரும்பு கிறேன். பல பகுதிகளிலும் பொது மக்கள் இதற்கு ஒத்துழைப்பு கொடுப்ப தில்லை. அதற்குக் காரணம், அவர்கள் பொருளாதார நிலை சரியாக இல்லாததுதான். என்ன நடைபெறுகிறதென்றால், பயிற்சிப் பள்ளிக்கு தேர்ந்தெடுக்கும் காலமாகயிருந்தால் அவர்கள் நடவடிக்கைகளை மேல் அதிகாரிகள் டி.ஒ.க்கள் போன்றவர்கள் என்ன பார்க்கிறார்கள் என்றால், எத்தனை பிள்ளைகளுக்கு பகல் உணவு போட்டிருக்கிறார்கள் என்று தான் கேட்கிறார்களே தவிர அவர்கள் மற்ற துறைகளில், அவர்களது வேலையில் அவர்கள் எவ்வளவு சிறப்பெய்தியவர்களாகயிருந்தாலும் கூட அவை யெல்லாம் புறக்கணிக்கப்படுகிறது. ஆகவே, இலவச பகல் உணவு போடு வதில், ஆசிரியர்களைப் பொறுப்பாக்கக் கூடாது என்பதற்காகத்தான் இதைக் கூறுகிறேன். மற்றொன்று. சில தினங்களுக்கு முன்பு சேலத்தில் ஒரு பள்ளியில் ஒரு ஆசிரியர் இது விஷயத்தில் பொய் கணக்கு எழுதியதாக குற்றம் சாட்டப்பட்டு சேலம் நாட்டாண்மை கழகத்தாரின் விசாரணையில் இருக்கிறது. குற்றச்சாட்டு என்னவென்றால், 24 நாட்களுக்கு எல்லாப் பிள்ளைகளுக்கும் உணவு அளித்தார் என்று சொன்னது உண்மையல்ல என்பது புகார். நிலைமை என்னவென்றால், ஆசிரியர்கள் பொதுமக்களிட மிருந்து பணம் வாங்கி உணவு அளிக்க வேண்டுமென்பது திட்டம். ஆனால் பொதுமக்கள் பணம் கொடுப்பதில்லை. ஆகவே, இருக்கிற பணத்தை வைத்துக்கொண்டு பத்து பிள்ளைகளுக்கும் போட்டால் 15 பிள்ளைகளுக்கு போட்டதாகவும், பத்து நாட்களுக்கு போட்டால் அதை பதினைந்து நாட்களுக்கு போட்டதாகவும் எழுதி வைக்கிறார்கள். அப் பொய் கணக்கு எழுதி வைக்கும் நிலைக்கு ஆசிரியர்கள் ஆளாக்கப்படு கிறார்கள். அதிகாரிகளைத் திருப்திப்படுத்த ஆசிரியர்கள் பொய் கணக்கு எழுதி வைப்பதற்கு கட்டாயப்படுத்தப்படுகிறார்கள். பின்னர், பள்ளிச் சீரமைப்பைப்பற்றி கடந்த ஆண்டில் கூட நான் இங்கு பேசியிருக்கிறேன். இதுவரையில் $5\frac{1}{4}$ கோடி ரூபாய் பெறுமானமுள்ளவை, பணமாகவும் பொருள்களாகவும் கொடுக்க உத்தரவாதம் அளிக்கப்பட்டிருக்கிறது. ரொக்கமாக சாமான்கள் 2 கோடி ரூபாய்க்கு கொடுக்கப்பட்டிருப்பதாகச் சொன்னார்கள். நேரடியாகப் பார்த்தால், 2·03 கோடி ரூபாய்க்கு ரொக்க மாகவும் சாமான்களாகவும் வாங்கப்பட்டிருக்கிறது, அவையெல்லாம் பள்ளிக்கூடங்களில் இருக்கிறதா என்று பார்த்தால், இல்லை. ஆகவே, இது குறித்து மீண்டும் ஒரு தணிக்கை செய்யுமாறு கல்வி இலாகாவினரை யும், அமைச்சர் அவர்களையும் கேட்டுக் கொள்கிறேன். பலயிடங்களிலும் சாமான்கள் இரவலாக வாங்கப்படுகின்றன. நாம் மற்றவர்களுக்கு இளைத்த வர்கள் அல்ல என்று காட்டுவதற்காக அதிகாரிகள் வரும்போது அதைக் கொண்டு வந்து வைத்து காட்டிவிட்டு பின் அவர்கள் சென்றவுடன் யாரிடமிருந்து வாங்கினார்களோ அவர்கள் கைக்கு போய் விடுகிறது. இதை, நான் பலயிடங்களில் பார்த்திருக்கிறேன். இதை ஒரு பொது குற்றச் சாட்டாக சொல்கிறேன். இதை விசாரித்துப் பார்க்க வேண்டும். இது குறித்து ஒரு குழு இங்கே அமைக்கப்பட்டிருக்கிறது. இதை நாம் செய்தாகி விட்டது, இதை நல்லதென்று சொல்லியிருக்கிறோம், ஆகவே இதை நிலை நிறுத்த ஆதாரங்கள் காட்டவேண்டும் என்று எண்ணாது உண்மையி லேயே என்ன நடக்கிறது என்பதை கவனித்து ஆராய்ந்தால் நல்லது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். பின்னர், இலவச உடை

தானம். ஒரு 20 நாட்களுக்கு முன்பு எல்லா ஆசிரியர்களும் பள்ளிகளை மூடி விட்டு சென்று விட்டார்கள். அவர்களுக்கு மேல் அதிகாரிகளிடம் இருந்து வந்துள்ள கட்டளை என்னவென்றால், அது எழுத்து மூலம் அல்ல, பள்ளிகள் நடக்கிறதோ இல்லையோ அதுபற்றி எங்களுக்கு கவலையில்லை, ஒவ்வொரு ஆசிரியரும் பத்து பிள்ளைகளுக்காவது உடை இனமாக தைத்துக் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்பதாகும். எப்படி பின் பள்ளிகளை நடத்துவது என்று எங்களைக் கேட்கக் கூடாது என்றும் அதிகாரிகளால் சொல்லப்படுகிறது. காலையில் எட்டல்ல ஒன்பது மணிக்கு பிள்ளைகள் பள்ளிக்கு வந்தால் தங்கள் பெயர்களை கொடுத்து விட்டு ஒரு அரை மணி நேரம் இருந்து விட்டு அவர்கள் போகிறார்கள். ஆசிரியர்கள் உடை தானத்தை ; நிறைவேற்றுவதற்காக வீடு வீடாக அலைகிறார்கள். இன்று, சமுதாயத்தில் செல்வாக்கு அதிகாரம் படைத்தவர்கள் கையில் தான் இருக்கிறது. ஒரு விழா கொண்டாட வேண்டுமென்றோ அல்லது சிறு சேமிப்புத் திட்டம் நடத்த வேண்டுமென்றோ கலெக்டரோ அல்லது ரெவின்யூ போர்டாரோ, ரெவின்யூ இலாகா சிப்பந்திகளிடம் சொன்னால் அவர்கள் அதை விரைவிலேயே முடித்து விடுவார்கள். அவர்களுக்குள்ள அதிகாரம் ஆசிரியர்களுக்கு இல்லை. பெற்றோர்களிடம் ஆசிரியர்கள் போனால், இலவசமாக சாமான்கள் கொடு என்கிறீர்கள், இலவசமாக சோறு போடுங்கள் என்கிறீர்கள் இப்பொழுது இலவசமாக உடை கொடு என்கிறீர்கள், என்று ஆசிரியர்கள் பொதுமக்களால் மிகவும் கேவலமாக பேசப்படுகிறார்கள். இப்படியே போனால், நீங்கள் சம்பளமே இல்லாமல் சொல்லிக் கொடுங்கள் என்று ஆசிரியர்களைச் சொல்வார்களோ என்னவோ ? பல பெற்றோர்கள் ஆசிரியர்களை திட்டுகிற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நாலைந்து நாட்களுக்கு முன்பு கல்வி அமைச்சர் அவர்களும், கல்வி இலாகா தலைவர் அவர்களும் ஆத்தூர் பகுதிக்கு வந்திருந்தார்கள், உடைதான விழாவிற்காக. அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய இரண்டு நாட்களாக அங்கு பள்ளிக்கூடங்களே இயங்கவில்லை. துணிகள் தயாரிப்பது, அவற்றின் கணக்குகளை தயாரிப்பது போன்ற வேலைகளில் ஆசிரியர்கள் ஈடுபட்டிருந்தார்கள். ஆத்தூரைப் பொறுத்த வரை ஒரு பெரிய அச்சடித்த துண்டுப் புத்தகம் வெளியிட்டிருக்கிறார்கள். 500, 300 என்று இவ்வளவு இவ்வளவு துணி கொடுத்தோம் என்று எழுதியிருக்கிறார்கள். அவைகள் இலவசமாக வாங்கப்பட்டதா ? பிள்ளைகள் மூலம் பெற்றோர்களை கட்டாயப்படுத்தி துணி தைத்து வாங்கப்படுகிறது. பெற்றோர்களிடம், இப்படி ஒரு விழா வருகிறது, அதற்காக இவ்வளவு உடைகள் தைத்து வையுங்கள் என்று கூறி விட்டு அப்படி தைத்ததை வாங்கி விழா சமயத்தில் அதை இலவசமாக கொடுப்பது போல் கொடுக்கிறார்கள். பெற்றோர்கள் நிர்ப்பந்தத்தினால் தைத்துக் கொடுக்கிறார்களே தவிர இலவசமாக வழங்கப்படுகிறது என்று சொல்வது தவறாகும்.

11–00 a.m. இவைகளை எல்லாம் செய்யவேண்டியது தான், இது தவறு என்று நான் சொல்லவில்லை. இவ்விதம் பல காரியங்கள் செய்யப்படுவதை நான் வரவேற்கிறேன். ஆனால் இவைகளை எல்லாம் செய்வதை அரசியல் கட்சிகளே செய்யக்கூடிய நிலையில் விட்டால் என்ன, ஏன் ஆசிரியர்களை இதில் நிர்ப்பந்திக்க வேண்டும் என்று தான் நான் சொல்ல விரும்புகிறேன். ஆசிரியர்களை இந்த நிர்ப்பந்தத்திற்கு ஆளாக்கக்கூடாது என்பது தான் எனது குறிக்கோள். ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் இவ்வளவு ஆடைகள் இலவசமாக கொடுக்கப்பட்டது, இவ்வளவு சாமான்கள் இலவசமாக கொடுக்கப்பட்டது என்று சொல்லுகின்ற நேரத்தில் ஆசிரியர்களை நிர்ப்பந்திப்பது சரியல்ல என்பது என் கருத்து.

தவிர ஆசிரியர்களுக்கு புதிய திட்டத்தின் கீழ், பிள்ளைகளிடமிருந்து சம்பளம் வசூல் செய்யும் பள்ளிகளுக்கு அரசாங்கத்தினுடைய உதவி கிடைக்காது என்றும், பிள்ளைகளிடத்திலிருந்து சம்பளம் வாங்காத பள்ளிகளுக்குத்தான் அரசாங்கத்திலிருந்து உதவி பெறுவதற்கு தகுதி உண்டென்றும் அரசாங்கம் உத்தரவிட்டது. இதன் காரணமாக பல பள்ளிகள் பிள்ளைகளிடமிருந்து சம்பளம் பெறுவதை நிறுத்தி அரசாங்க மானியத்தை பெற்றுக்கொண்டு வருகின்றன என்பதை நாம் எல்லோரும் அறிவோம்.

26th April 1960] [Sri M. P. Subramaniam]

அதே நேரத்தில் இதன் கீழ் இருக்கும் ஆசிரியர்களுக்கு, சம்பளம் கொடுக்கும் விஷயத்தில், குறிப்பாக எய்டட் ஸ்கூலில் இருக்கும் ஆசிரியர்களுக்கு சம்பளம் கொடுக்கும் விஷயத்தில் சர்க்காரே நேரடியாக கொடுப்பது என்று திட்டம் வகுத்தார்கள். அதன் பின்னுல் இப்போது திடீரென்று அந்த முறையை மாற்றிக்கொண்டுவிட்டார்கள். மீண்டும், முன்போலவே நிர்வாகத்தினரே சம்பளத்தை அரசாங்கத்தினிடமிருந்து பெற்று ஆசிரியர்களுக்கு பட்டுவாடா செய்ய வேண்டும் என்கின்ற முறையை கொண்டு வந்திருக்கிறுர்கள். இதற்கு என்ன காரணம் என்றே தெரியவில்லை . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த முடிவை சர்க்காரே தனியாக எடுத்துக்கொள்ளவில்லை. எல்லாக் கட்சித் தலைவர்களும் சேர்ந்துள்ள கூட்டத்தில்தான், அங்கத்தினர் கட்சித் தலைவரும் இதில் உண்டு, இவ்விதம் எல்லாக் கட்சித் தலைவர்களும் ஒப்புக்கொண்டு ஏகோபித்துத்தான் இந்த முடிவை செய்திருக்கிறேமே ஒழிய சர்க்கார் தனியாக இந்த முடிவை கொண்டு வரவில்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : இந்த சட்டசபையிலுள்ள எல்லாக் கட்சித் தலைவர்களும் சேர்ந்திருந்து எடுத்திருந்த முடிவாக இருந்தாலும்கூட, அந்த முடிவைப்பற்றி இந்த சபையிலுள்ள எல்லா அங்கத்தினர்களும் அதை அறிந்துகொள்ள வேண்டியது அவசியமில்லையா என்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். அதோடு முக்கியமாக ஆசிரியர்களுக்கு நேரடியாக சம்பளம் கிடைத்துக்கொண்டிந்தபோது கூட, அவர்களுக்கு அனுப்பப்படும் சம்பளத்திற்காக மணியாடர் கமிஷன் குறைத்துத்தான் அனுப்பப்படுகிறது. இந்தக் குறைவு இருக்கக்கூடாது என்று அவர்கள் ஏற்கனவே கேட்டுக்கொண்டிருப்பது எல்லோருக்கும் தெரியும். அவர்களுக்கு சம்பளத்தில் எந்தவிதமான குறைபாடும் இருக்கக்கூடாது என்பதற்காகத்தான்—இந்தவிதமான குற்றத்தை போக்குவதற்காகத்தான் அரசாங்கமே நேரடியாக கொடுத்துக்கொண்டிருந்தது. இப்போது மீண்டும் அந்த குற்றம் நடைபெறக்கூடிய நிலைமை இருந்துகொண்டிருக்கிறது என்பதை அமைச்சர் அவர்களின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். ஆசிரியர்களுக்கு 56, 86 ரூபாய் சம்பளம் இருக்கிறது என்று இருந்தாலும்கூட, அதில் ஐந்தோ, பத்தோ பிடித்துக்கொண்டு சம்பளம் கொடுக்கப்படுகிறது. இதைப்பற்றியும் எல்லாக் கட்சித் தலைவர்களும் சேர்ந்திருக்கக்கூடிய இந்தக் குழு பரிசீலிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும் . . . .

(மணி அடிக்கப்பட்டது.)

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் அனைவரும் நான் மணியடித்தவுடன் தங்கள் பேச்சை முடித்துக்கொள்ளவேண்டும். இல்லையென்றால், இதன் மீது நடைபெறுகிற விவாதம், இன்று மத்தியானம் மட்டுமல்ல, நாளைக்குக்கூட நீண்டுக்கொண்டு போகும். இப்போது 18 பேர்கள் பேசுவதற்கு பெயர் தந்திருக்கிறுர்கள். ஆகவே ஒவ்வொரு அங்கத்தினரும் அவர்களுக்கு குறிப்பிட்டிருக்கிற நேரத்திற்குள் தங்கள் பேச்சை முடித்துக்கொள்ளவேண்டும் என்று தாழ்மையுடன் எல்லா அங்கத்தினர்களையும் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக ஸ்ரீ வேதரத்தினம் பிள்ளை அவர்கள் பேசுவார்கள்.

SRI A. VEDARATHNAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தக் கல்வி மான்யத்தை முழு மனதோடு ஆதரிப்பதோடு, இதன் பேரில் கொண்டுவரப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரணையை எதிர்க்கின்றேன். ஏனென்றுல் இந்த மான்யத்திற்கு வெட்டுப் பிரேரணையாக, இதில் ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையை குறைக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருப்பதற்குப் பதிலாக இதற்கு ஒதுக்கப்பட்டிருக்கும் பணம் போதாது, இன்னும் கூடுதலாக பணம் ஒதுக்கவேண்டுமென்று எதிர்கட்சியிலுள்ளவர்கள் கேட்டிருந்தால் அது வரவேற்கத் தகுந்ததாய் இருந்திருக்கும். ஆகவே கல்வி

[Sri A. Vedarathnam] [26th April 1960

மான்யத்தை குறைக்கவேண்டும் என்று இந்த வெட்டுப் பிரேரணையில் குறிப்பிட்டிருப்பதால் நான் இந்த வெட்டுப் பிரேரணையை எதிர்க்கிறேன்.

(இச்சமயத்தில் ஸ்ரீ எம். ஜகந்நாதன் அவர்கள் தலைமை வகித்தார்.)

1937-ம் வருடத்தில் இந்த மாநிலம், ஆந்திரம், கேரளம், கர்நாடகம் தமிழ்நாடு இவ்வளவும் சேர்ந்திருந்த காலத்தில் இந்த அரசாங்கத்தில் மொத்த வருமானமே 16 கோடி ரூபாய் தான். இன்றைய தினம் நம்முடைய கல்வி இலாகாவுக்காக மட்டும் 16 கோடி ரூபாய் ஒதுக்குகிறோம் என்று சொன்னால் இதை நாம் எவ்வாறு வரவேற்கவேண்டும் என்பதைப்பற்றி நான் அதிகமாக சொல்லவேண்டியதில்லை. இப்போது கல்வி எந்த அளவில் வளர்ந்திருக்கிறது என்பதைப்பற்றியெல்லாம் நமது கல்வி அமைச்சர் அவர்கள் தெளிவாக குறிப்பிட்டார்கள். கடந்த நான்கைந்து ஆண்டுகளுக்குள்ளாக 10 ஆயிரம் புதிய பள்ளிகள் அமைக்கப்பட்டிருக்கிறது, அது மட்டுமல்ல, இந்த மாநிலத்தில் கல்வி இலாகா எந்த முறையில் இயங்கி வருகிறது என்பதைப் பார்த்தால், மதிய உணவுத்திட்டம் மட்டுமல்ல, உடை தாராளமாக கொடுப்பது மட்டுமல்ல, கல்வி சீரமைப்பு ஏற்படுத்துவதுமட்டுமல்ல, இன்னும் எத்தனையோ துறைகளில் நாம் பலவிதமான சீர்திருத்தங்களை செய்துகொண்டு வருகிறோம். இந்த விஷயத்தில் மற்ற மாகாணங்கள் எல்லாம் சென்னை மாகாணத்தைப் பார்த்து நடந்து கொள்ள வேண்டும் என்று அகில இந்திய பிரதமர் பண்டித ஜவகர்லால் நேருவே சொல்லியிருக்கிறார்கள் என்றால், நாம் இதில் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறோம் என்பதைப்பற்றி கூற வேண்டிய தேவையில்லை என்று நினைக்கிறேன். அரசியல் கட்சிகள், கல்வி ஸ்தாபனங்களில் புகக்கூடாது என்று நம்முடைய மாகாணத்தில் எடுத்துக்கொண்ட முயற்சியைப் போன்று வேறு எந்த மாகாணத்திலும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. இதற்கு எல்லா எதிர்க் கட்சிகளும், தங்களுடைய அரசியல் நலனை விட்டுவிட்டு முக்கியமாக கல்வி ஸ்தாபனங்களில் அரசியல் நுழையக்கூடாது என்று ஏகோபித்து ஒரு முடிவுக்கு வந்திருப்பதைப்பார்த்து நான் எல்லாக் கட்சிகளையும் பாராட்டுகிறேன், வரவேற்கிறேன். இங்குள்ள எல்லாக் கட்சிகளும் இந்த முடிவுக்கு ஒத்துக்கொண்டன. ஆனால் ஒரு கட்சி மட்டும், இதற்கு மாறுபட்ட அபிப்பிராயத்தைக்கொண்டிருந்தபோதிலும், பொதுவாக நம்முடைய மாகாணத்தைப் பொறுத்தவரை இதில் பெரும்பாலும் எல்லா கட்சிகளுக்கும் எந்தவிதமான அபிப்பிராய பேதமில்லாத முறையில் நடந்து வருகிறது என்பதை நான் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

மேலும் கல்லூரிகளில் தமிழ் மூலம் பாட போதனை நடைபெற வேண்டும் என்று நமது சர்க்கார் சீரிய திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இதை பலரும் பாராட்டுகின்றார்கள். முக்கியமாக 1960-ம் ஆண்டில் இந்த நாட்டில் எல்லா மாணவர்களுக்கும் படிப்பதற்கு வசதியும், எழுத்தறிவு இல்லாமை நீங்கும் நிலைமையையும் ஏற்படுத்த வேண்டும் என்று அரசியல் நிர்ணய சபை திட்டத்தை வகுத்திருந்தபோதிலும், ஒவ்வொரு மாகாணத்திலும் சரியானபடி செயல்பட முடியாமல் போனதின் காரணமாக இப்போது 1960 என்றிருப்பதை மாற்றி 1965 என்று இலக்கை குறிப்பிட்டிருக்கிறார்கள். நம்முடைய மாகாணத்தைப் பொறுத்தவரை சர்க்காருடைய உதவி பெற்று, இதே வேகத்தில் எல்லா காரியங்களும் நடந்துகொண்டிருக்குமானால், இன்னும் இரண்டு ஆண்டுகளிலேயே நமது இலக்கை அடைய முடியும். நாட்டிலுள்ள எல்லா மாணவர்களும் கல்வி பெற முடியும் என்பதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். தமிழ் கல்லூரிகளில் போதனா மொழியாக இருக்கவேண்டும் என்று ஆலோசிப்பதற்காக நடந்த கூட்டத்தில்கூட, நமது துணை வேந்தர் அவர்கள் ஆங்கிலம் போதனா மொழியாக இருக்கவேண்டும் என்று கூறினார்கள். இருந்தாலும் கூட, தமிழ் போதனா மொழியாக உயர்நிலைப் பள்ளிகளில் எல்லாம் வந்த பின்னால் உயர்நிலை பள்ளிகளில் படிக்கும் மாணவர்களின் தமிழ் அறிவு ஆச்சரியப்படத்தக்க அளவுக்கு உயர்ந்திருக்கிறது என்று துணை வேந்தர் அவர்களே குறிப்பிட்டிருப்பதை நான் இந்த சபையின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

26th April 1960] [Sri A. Vedarathnam]

இப்போது, நாம் மதிய உணவு கொடுத்து வருவதின் மூலமாகவும், இலவச உடைகள் கொடுத்து வருவதின் மூலமாகவும், பள்ளிகளுக்கு செல்லுவதற்கு சக்தியற்றிருந்த எத்தனையோ குழந்தைகள் இன்றைக்கு பள்ளிகளுக்கு செல்லுவதற்குரிய ஒரு வாய்ப்பு இதனால் கிடைத்திருக்கிறது என்று நம்மால் சொல்ல முடியும். ஆனால் ஒன்றிரண்டு இடங்களில் வேண்டுமென்றால், அங்கங்கே சில தவறுகள் நடந்திருக்கலாம். அதற்காக இந்த நோக்கமே தவறு என்று சொல்லுவது சரியல்ல என்பதை நான் பணிவுடன் குறிப்பிட விரும்புகிறேன். ஆதாரக் கல்வி சம்பந்தப்பட்ட வரையில் நம்முடைய மாகாணத்தில் நல்ல முறையில் பல பள்ளிகள் ஆரம்பிக்கப்பட்டன. ஆரம்ப கல்வியை பொறுத்த மட்டில் குறிப்பிட்ட பிரகாரம் தான் நடந்து கொண்டு வருகிறது. இதையும் போதிய அளவுக்கு நல்ல முறையில் நடத்துவதற்கு கல்வி இலாகா கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு கல்வி இலாகாவினருக்கு இப்போது வேலைகள் எல்லாம் விரிவடைந்து இருப்பதின் காரணமாகவும் அதிகாரங்கள் எல்லாம் ஒரே இடத்தில் குவிந்திருப்பதின் காரணமாகவும் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகவே குவிந்திருக்கின்ற அதிகாரங்களை கொஞ்சம் பரவலாக்கிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். உதாரணமாக ஒரு மாடல் பயிற்சியில் ஒரு ஆசிரியர் இல்லையென்றால், இன்னொரு ஆசிரியரை நியமிப்பதற்கு டிவிஷனல் இன்ஸ்பெக்டரிடம்தான் கோரிக்கை போகவேண்டியிருக்கிறது. அப்படியில்லாமல் ஜில்லா கல்வி அதிகாரியை இதைப்பற்றி நடவடிக்கை எடுத்துக்கொள்ளக்கூடிய நிலை இருக்க வேண்டும். இப்போதுள்ள முறையில் ஜில்லா கல்வி அதிகாரி இது போன்ற விஷயங்களில் ஒன்றும் செய்ய முடியாத நிலை இருந்துகொண்டிருக்கிறது. இதைப்பற்றி அரசாங்கம் நன்றாக சிந்திக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இப்பொழுது ராஜ்யம் அளவுக்குப் பெரிய அளவில் கல்வி இலாகா வளர்ந்திருக்கும் காரணத்தினால், இன்னும் கீழே இருக்கும் அதிகாரிகளுக்கு அதிக அதிகாரம் கொடுத்து மேலே இருப்பவர்களுடைய பளுவைக் குறைத்துக்கொண்டு, அப்பீலுக்கு வேண்டுமானால் வகை செய்துகொள்ளலாமே அல்லாமல், சிறு விஷயங்களிலே அவர்களுடைய கவனம் செலுத்த வேண்டுமென்று நான் எதிர்பார்க்கவில்லை.

ஆங்கிலம், பரீட்சையிலே முக்கிய ஸ்தானம் பெற்றிருக்கிறது. எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சையில் தவறுபவர்கள் அத்தனை பேரும், 100-க்கு 99 பேர்கள் ஆங்கிலத்தில் தவறியவர்களாகத்தான் இருக்கிறார்களே அல்லாமல், ஏனைய பரீட்சையிலே அவர்கள் தவறியவர்கள் அல்லர். இந்த நிலைமை இருப்பதைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். கிராமங்களிலே இதுவரையில் எழுத்து வாசனை இல்லாத எளிய குடும்பங்களிலிருந்து வந்து படிக்கிற பிள்ளைகளுக்கு ஆங்கிலம் ஒரு பெரும் சுமையாக இருக்கிறது. ஆங்கிலத்திற்கு அவ்வளவு பிரதான்யம் கொடுக்கவேண்டுமா என்பதை ஆலோசிக்கவேண்டும். இதே நேரத்தில், விஞ்ஞானம், ரசாயனம், பௌதீகம் போன்ற அந்தப் பாடங்களைக் கற்பிப்பதற்கு அவர்களுக்கு அந்த நேரத்தை பயன்படுத்தினால் அது இன்னும் பலன் தரத்தக்கதாக இருக்கும். மொழி விஷயத்தில் இவ்வளவு "எம்பஸிஸ்" கொடுத்து, வற்புறுத்தப்படவேண்டுமா என்ற விஷயத்தைக் கல்வி இலாகா சிந்திக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதே சமயத்தில், ஆங்கிலம் கல்லூரிகளில் போதன மொழியாக இருக்கக் கூடாது என்று சொல்லுகிறார்களேயொழிய, ஆங்கிலமே கூடாது என்று சொல்லவில்லை. ஆங்கிலம் இன்னும் திறமையாக நன்றாக போதிக்கப்படவேண்டும் என்று, ஐந்தாம் வகுப்பிலிருந்து போதிக்கப்பட வேண்டும், ஆங்கிலத்தில் தனிச் சிறப்புப் பயிற்சி வேண்டும் என்று அரசாங்கம் செய்திருக்கும் முடிவு வரவேற்கத் தகுந்தது என்ற விஷயத்தை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். எக்ஸ்ப்ளாய்ட்டேஷன் முறையில், ஆங்கிலேயர்கள் காலத்தில் மெக்காலே கல்வித் திட்டத்தைக் கொண்டுவந்தார்கள். இந்த நாட்டைச் சுரண்டி வாழ்வதற்காக ஏற்படுத்திய அந்தத்

[Sri A. Vedarathnam] [26th April 1960

திட்டம் நம்முடைய நாட்டுக்குப் பொருந்தாத கல்வித் திட்டம் என்று எத்தனையோ பட்டமளிப்பு விழா (கான்வகேஷன்) க்களில் பல பெரிய பட்டதாரிகள் கூறியிருக்கிறார்கள். அந்த அடிப்படையிலே கல்வி முறை நடைபெறுவது ஒரு நாளும் இந்த நாட்டுக்குப் பொருந்தாது. ஜாதி, வகுப்பு வாதம் அற்ற, வர்க்கபேதம் அற்ற, சுரண்டல் அற்ற சமுதாயத்தை நாம் நிர்மாணிக்கவேண்டுமானால், இப்பொழுதிருக்கும் இந்தக் கல்வி முறையின் மூலமாக அதை ஒருக்காலும் நாம் அமைக்க முடியாது. சுரண டலற்ற சமுதாயம் வேண்டுமானால், சுயதேவையை அடிப்படையாகக் கொண்டு, தொழிலே இணைப்புப் பாடமாகப் பயிலக்கூடிய ஆதாரக் கல்வி யின் மூலமாகத்தான் நாம் எதிர்பார்க்கும் சமுதாயத்தை அமைக்க முடியும். அதற்கான முறையிலே எங்கெங்கே "பேஸிக் பெல்ட் ஏரியா" இருக்கிறதோ அங்கிருக்கும் உயர்நிலைப் பள்ளிகளையெல்லாம் போஸ்ட் பேஸிக்காக மாறறவேண்டும். அது இப்பொழுது செய்ய சாத்தியம் இல்லா விட்டாலும், எட்டாம் வகுப்பு வரையிலாவது ஆதாரக் கல்வி முறையைக் கொண்டுவரவேண்டும். ஒரத்தநாட்டில் இருக்கும் பேஸிக் ட்ரெயினிங் ஸ்கூல் மாணவர்களுக்கு ஸ்டைபெண்டைக் கொடுக்கவேண்டும். பெண்கள் ஆதாரப் பயிற்சிக்கு இன்னும் வகை செய்ய வேண்டும். லேடி வில்லிங்டன் காலேஜிலாவது இம்மாதிரி மறு பயிற்சிக்கான வசதியோடு ஆசிரியைப் பயிற்சியை நடத்தவேண்டுமென்ற விஷயங்களை நான் சொல்லிக்கொண்டு இந்த மானியத்தை முழு மனதோடு ஆதரித்து, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகின்றேன்.

*SRI V. K. KRISHNAMURTHY : அவைத் தலைவர் அவர்களே, கல்வி வளம் பெருக, செல்வ வளம் கோரும் கல்வி மானியக் கோரிக் கையைப் பெரிதும் ஆதரித்து வரவேற்றுப் பாராட்டி மகிழ்ச்சியுறுகிறேன். கடந்த ஆண்டை விட இவ்வாண்டு 2 கோடி 20 லட்சம் ரூபாய் அதிகமாக ஒதுக்கி வைத்திருப்பது உவகையுற வைத்துள்ளதுடன் கல்வி மேலும் பெருக அடிகோலிருப்பது நன்கு தெரிகிறது.

கல்லூரிகளில் தமிழ் பாட மொழியாக இருக்கவேண்டும் என்பதை எதிர்க்கும் கூட்டம் இங்குள்ளது. ஆதிக்க மொழி—உரிய மொழி ; இவ் விரண்டிற்கும் போராட்டம். ஆதிக்க மொழியினர் ஆங்கிலம்தான் பாட மொழியாக இருக்க வேண்டுமென்கின்றனர் ; உரிய மொழிக்குரியவர் தமிழ் மொழிதான் பாட மொழியாக இருக்க வேண்டுமென்கின்றனர். இப்போராட்டம் ஐரோப்பாவிலும் நிகழ்ந்தது. லத்தீன் மொழி ஆதிக்க மொழியாக இருந்தது. ஆங்கில மொழி—பிரான்சு மொழி—ஜெர்மன் மொழி உரிய இடம் பெற முடியவில்லை. லத்தீன் மொழிதான் என்றும் இருக்கவேண்டுமென்ற வாதம் வளர்ந்தது.

இன்று தமிழகத்தில் ஆதிக்க மொழியை விரும்புகிறவர்கள் ஆங்கிலம் தான் இருக்கவேண்டுமென்கின்றனர். பிறமொழிதான் பாட மொழியாக இருக்க வேண்டுமென்கிற வாதங்கள் கீதங்களாகவும் நாதங்களாகவும் ஒலிக்கின்றன. எந் நாட்டிலும் இம் முறை இல்லை. ஒரு பொருளை அறிய பிறிதொரு மொழி வாயிலாகத் தான் அறிய வேண்டுமென்று கூறும் முறை அறங் கடந்ததாகும். எண்ணுவதும் எண்ணத்தை வளர்ப் பதும்—பெருக்குவதும் தாய் மொழியில், இதைக் கூறும்பொழுது பிற மொழியில். பொருளை அறிவது இயல்பாகவே தாய் மொழியில். அதை அறைவது பிற மொழியில். பொருளை அறிவது தாய் மொழியில் ; அறிந்த பொருளை அறைவது பிற மொழியில், இது நியாயமாகுமா ? பொருளைக் கூறுவதற்குப் பிற மொழியில் புலமை வேண்டும். பிற மொழி யறிந்து பொருளையறிய வேண்டுமென்பது ஏற்புடைத்தன்று.

இதே நிலை ஐரோப்பாவிலிருந்தபொழுது துணிவு ஏற்பட்டு ஆங்கிலம்—பிரான்சு—ஜெர்மனி மொழிகள் உரிய இடங்கள் பெற்றன. மொழி வளம் பெற ஷேக்ஸ்பியர் நாடகங்கள், மில்டனின் செய்யுட்கள் அரண் செய்தன. நம் தமிழகத்தில் தமிழ் மொழி பல்லாற்றானும் வளம் பெற்றுள்ளது. மறைமலை அடிகள், எம். எல். பிள்ளை, பண்டிதமணி, நாட்டார் இவர்கள் உரைநடையை வளமுற வைத்தனர் ; மொழிபெயர்த்தனர் ; உரை

26th April 1960] [Sri V. K. Krishnamurthy]

கண்டார்கள் ; ககரத்தை மோனையாக்கி 1330 திருக்குறள், குமரேச வெண் பாவை ஜகவீரபாண்டியன் பாடியுள்ளார். திருவள்ளுவராலும் முடியாத ஒன்று என்று கூறலாம். தமிழ் மொழி நல்ல முறையில் நல்ல வளம் பெற்றிருக்கிறது.

ஆதலால், B.A. வகுப்புக்கு மாத்திரம் தமிழ் பாட மொழி என்று கூறுவது நியாயமல்ல. B.Sc. M.Sc. ஆகிய அறிவியல் பகுதிக்கும் தமிழ் தான் பாட மொழியாக இருக்கவேண்டும். "கடி சொல் இல்லை காலத்துப்படினே" என்ற தொல்காப்பிய விதிப்படி மூலச் சொற்களை அப்படியே ஏற்று விரைவில் கல்லூரியில் தமிழ் பாட மொழி யாக, கட்டாயமாக அமைக்கவேண்டும்.

இங்கிலாந்தில் பாட மொழி எது ? பிரான்சில் பாட மொழி எது ? ஜெர்மனியில் பாட மொழி எது ? தமிழகத்தில் மாத்திரம் ஏன் பிற மொழி கல்லூரிகளில் பாட மொழியாக இருக்கவேண்டும் ? எண்ணிப் பார்த்து ஆவன செய்யவேண்டும். கல்வி அமைச்சர் கொண்டுள்ள முயற்சிக்குத் தமிழகத்து எழுத்தாளர்கள்—புலவர்கள்—அறிஞர்கள்— பேராதரவு என்றும் உள்ளது என்று தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கலைக் களஞ்சியத்தை வரவேற்கிறேன். பாராட்டுகிறேன். தமிழ் மறு மலர்ச்சிக்கென்றிருப்பது பேருவகையுறுதற்குரியதே. என்றாலும் சில திருத்தங்கள் செய்ய வேண்டிய நிலையிலிருப்பதற்கு வருந்துகின்றேன்.

அகரம் என்ற தலைப்பில் பரிமேலழகர்—நச்சினார்க்கினியர் கண்ட விளக்கம் இடம் பெற்றிருக்கிறது. மொழி ஒலி ஆராய்ச்சியில் மூலவரும் முதல்வருமான பா. வே. மாணிக்க நாய்க்கர் கண்ட அகரவொலி ஆராய்ச் சியைப் பற்றிய குறிப்பே இல்லை ; அகர வரிவமைப்பை நன்கு ஆராய்ந்து அ—உ—ம் என்றும் மூலப் பிரணவம் ஓ என்ற வரிவும் அகரத்தில் உள்ளது என்று கண்ட பேருண்மையைக் குறிக்கவில்லை. வருந்து கிறேன்.

இராமலிங்க அடிகளைப் பற்றிய தலைப்பைப் படித்ததும் அவர் பாடிய தெய்வப் பாடல்களில் இங்கிதமாலை உயர் தனிச் சிறப்புடையது. மகா வித்துவான் திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுக்கு இராமலிங்க அடிகள் முதல் பாட்டை நான்கு மணி நேரம் விளக்கியதாகக் குறிப்பு இருக்கிறது. அத்தகைய பாடல்களைப் பற்றிய குறிப்பே இல்லை ; தரம் மலிந்து, ஆராய்ச்சி பெருகியவர்கள் கலைக் களஞ்சியத்தில் இல்லை என்று தெரிகிறது.

சிவஞான போதம் எங்கே ? மிகச் சிறந்த ஞான நூல் சிவஞான போதம். 12 சூத்திரங்கள்—40 வரிகள். ஞானப் பிழிவு. சைவத்தின் கலை ஒளி. இந்நூல் இடம் பெறவில்லை. வருந்துகின்றேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதையெல்லாம் எழுதி தமிழ் வளர்ச்சி கழகத்திற்கு அனுப்புங்கள்.

TEMPORARY CHAIRMAN (SRI M. JAGANNATHAN) : I want to know whether the hon. Member is giving a discourse on Tamil language or literature.

SRI V. K. KRISHNAMURTHY : The Government are paying contribution to this organization. There, this sort of thing is continuing. I appeal to the Hon. Minister to see that these things do not take place.

TEMPORARY CHAIRMAN (SRI M. JAGANNATHAN) : The hon. Member will continue his speech.

[26th April 1960

SRI V. K. KRISHNAMURTHY : " தமிழ் " (494 பக்கம்) என்ற தலைப்பில் கீழ்க்கண்டவாறு வரையப்பட்டிருக்கிறது :—

" மண்ணியல், சிறுதேர் " முதலான வடமொழி நாடகங்களை மொழி பெயர்ப்பதனையும் இந்த நாளில் காண்கிறோம். இத்தகையை மொழி பெயர்ப்புக்களில் சிறந்து விளங்குவது மறைமலை அடிகளின் சாகுந்தலமே ஆம். அடிகள் காளிதாசனிடம் கொண்ட ஈடுபாட்டில் கம்பர் கவியழகினையும் மறந்துவிடுகிறார்.

மறைமலை அடிகளைப்பற்றி இவ்வாறு வரைந்திருப்பது அறங்கடந்த செயலாகும். ரூ. 86,000 மதிப்புள்ள நூல் நிலையத்தை நிறுவி சைவத்தையும் தமிழையும் வளர்த்தார்.

காளிதாசனின் சாகுந்தலத்தை மொழி பெயர்த்தார். இதனால் அவர் தம் வடமொழிப் புலமை விளங்குகிறது ; அடிசனின் கட்டுரைகளை மொழி பெயர்த்தார். இதனால் அவர்கள்தம் ஆங்கிலப் புலமை விளங்குகிறது ; உருக்கப் பாசுரங்களில் உலகில் உயர்ந்த பாசுரங்கள் Tennyson's " In Memoriam " Milton's, " Lycidas " " Shelly's Adoamis " இம்மூன்றையும் வெல்லும் இயல்புடைய " சோமசுந்தரக் காஞ்சியக்கம் " பாடியுள்ளார். இத்தகைய பெரும்புலவரை கரைபடுத்தி வரைந்திருப்பது மிகவும் வருந்துதற்குரியது.

என் ஒருவன் சாந்துணையும் கல்லாதவாறு ? என்று வள்ளுவர் வினவினார். அதற்கேற்ப இறக்குமளவும் படிக்கவேண்டுமென்பதை உணர்ந்து நூல் நிலையங்கள் நிலவுகின்றன.

கார்டியன்ஸ் என்ற ரோம மன்னன் ஈராயிரமாண்டுகட்கு முன்னரே 62,000 சிலம்புகள் வைத்திருந்தார். " The true university of these days is a collection of books " by Carlyle. பெர்னாட்ஷா அவர்கள் " Once in ten generations of men, the world gains an immortal book " பத்து தலைமுறைக்குப் பிறகு ஓர் இறவா நூல் உலகம் பெறுகிறது என்று கூறுவதிலிருந்து நூலின் சிறப்பை அறிகிறோம். நூல் நிலையங்களில் மிகச் சிறந்த உயர்ந்த ஒப்பற்ற நூல்கள் நுழைய முடியவில்லை. இருபது தலைமுறைக்குப் பிறகு தோன்றிய " யாழ் நூல் " நூல் நிலையங்களுள் நுழைய முடியவில்லை. சட்டசபை நூல் நிலையத்திலும் நுழைய முடியவில்லை. ஐம்பது தலைமுறைக்குப் பிறகு தோன்றிய " தொல்காப்பியம் " by வெள்ளைவாரணன் நூல் நிலையங்களுள் நுழைய முடியவில்லை. பதிமூன்று தலைமுறைக்குப் பிறகு உரைகண்ட திருமூலர் திருமந்திரம் நூல் நிலையங்களுள் நுழையவில்லை." You only O! books are liberal and independent. You give to all who ask " என்று கூறியவண்ணம் கலை, அறிவு, ஞானம், சமயம், இலக்கியம், இலக்கணம், வரலாறு இன்ன பிற எல்லாம் அளிக்கும் மறைமலை அடிகள் யாத்த " மாணிக்கவாசகர் காலமும் ஆராய்ச்சியும் " என்ற நூல் நிலையங்களுள் நுழைய முடியவில்லை. கழிவு அதிகமாக கிடைக்கவில்லை என்ற காரணத்தால் நல்ல நூல்கள் நுழையவில்லை. ஆதலால், உயரிய நூல்கள் இடம் பெற ஆவன செய்யுமாறு கேட்டுக்கொண்டு, இம்மானியத்தை ஆதரிக்கிறேன்.

*SRI SOWDI S. SUNDARA BHARATHI : தற்காலிக தலைவர் அவர்களே, கல்வி மான்யத்தின் மீது ஒரு சில குறிப்பிட்ட விஷயங்களைப் பற்றி பேச விரும்புகிறேன். செகண்டரி கல்வி சம்பந்தப்பட்டவரையில், புதியதாக ஹைஸ்கூலில் " பைகர்கேடட் கோர்ஸ் " ஒன்று இண்டரடியூஸ் செய்திருக்கிறார்கள். அதிலே என்ஜினியரிங் கோர்ஸ், செகரடேரியல் கோர்ஸ் என்று இரண்டு பிரிவுகள் இருக்கின்றன. அந்தக் கோர்ஸ் எடுத்துக்கொண்டு படிக்கக்கூடிய மாணவர்களுடைய நிலை சம்பந்தமாக ஒரு சில வார்த்தைகள் குறிப்பிட விரும்புகிறேன். புதியதாக செகரடேரியல் கோர்ஸ் எடுத்து படிக்கக்கூடிய மாணவர்களுடைய விருப்பம் என்ன வென்றால், இவர்கள் மேலே காலேஜில் படிப்பிற்காக செல்ல முடியாத மாணவர்களாக இருக்கிறார்கள். மேலே காலேஜில் சேரும் நிலையில் இல்லாத மாணவர்கள் அந்த கோர்ஸை எடுத்து படிக்கிறார்கள். அந்த கோர்ஸினுடைய நோக்கம் என்னவென்றால் அவர்கள் படிப்பு முடிந்த

26th April 1960] [Sri Sowdi S. Sundara Bharathi]

பிறகு அவர்களுக்கு பொதுவாக ஏதாவது ஆபீஸ்களில் கிளார்க் வேலை செய்வதற்கு அவர்களை தயார் செய்வதுதான். அந்த கோர்ஸினுடைய நோக்கம் நல்ல நோக்கம்தான். ஆனால் அந்தக் கோர்ஸ் எடுத்துக் கொண்டு படிக்கக்கூடிய மாணவர்களின் நிலைமையைப்பற்றி குறிப்பிட்டு ஒரு சில வார்த்தைகள் கூறுவதற்கு ஆசைப்படுகிறேன். அந்த மாணவர்கள் எஸ்.எஸ்.எல்.ஸி-க்கு மேலே காலேஜில் போய் படிக்கவேண்டுமென்று நினைத்தால் காலேஜில் இடம் கிடைப்பதில்லை. அவர்களுக்கு இடம் கொடுக்கப்படுவதில்லை என்ற புகார்கள் அநேகம் தடவைகள் வந்திருக்கின்றன. ஏனென்றால் அவர்களுக்கு சயன்ஸ், ஆங்கிலம் போன்ற மற்ற பாடங்களில் சரியான பயிற்சி இல்லை. எனவே அவர்களை காலேஜில் எடுத்துக் கொள்ள முடியாத நிலை இருக்கிறது. அவர்களுக்கு மேலே படிக்க வேண்டுமென்று நோக்கம் இருந்தால் அது எளிதாக ஈடேறுவதில்லை. ஏனென்றால் அவர்களுக்கு அந்த படிப்பு படிக்க முடியாது. வெளியிலே வந்தவுடன் க்ளார்க் உத்தியோகம் கிடைக்கிறதா என்றால் அதுவும் இல்லை. அவர்களும் பப்ளிக் சர்விஸ் கமிஷன் பரிட்சை எழுதித்தான் ஆக வேண்டும், எம். பி. எஸ்.ஸி பரிட்சை பாஸ் செய்துதான் ஆக வேண்டும். அதற்குரிய ஸ்டாண்டர்டு அவர்களுக்கு இருக்கிறதா என்று கேட்டால் இல்லை. மற்றபாடங்களை எடுத்துப் படிக்கக்கூடிய மாணவர்களுக்கும், எஸ். எஸ்.எல்.ஸியில் செகரேடரியல் கோர்ஸ் எடுத்து படிக்கக்கூடியமாணவர்களுக்கும் ஒரு வித்தியாசம் இருக்கிறது. அவர்களுக்குரிய ஸ்டாண்டர்டையும், மற்ற பாடங்கள் எடுத்துப் படிக்கக் கூடிய மாணவர்களுடைய ஸ்டாண்டர்டையும் ஒப்பிட்டுப்பார்த்தால் கொஞ்சம் வித்தியாசம் இருக்கிறது. எனவே, இவர்கள் மற்ற மாணவர்களோடு சேர்ந்து கொண்டு எம்.பி.எஸ்.ஸி பரீட்சை எழுதி, அதற்குப் பிறகு க்ளார்க் உத்தியோகத்திற்குப் போகவேண்டுமென்றால், அவர்கள் அம்மாதிரி செய்ய முடியாத நிலையில் இருக்கிறார்கள். அவர்கள் காலேஜுக்கும் போக முடியவில்லை. எதற்காகப் படித்தார்களோ அந்த படிப்பினால் அவர்களுக்கு பிரயோஜனம் இல்லாமல் இருக்கக்கூடிய நிலை ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் மிகவும் வருந்திக்கொண்டிருக்கக்கூடிய ஒரு நிலை இருக்கிறது. இந்தக் குறையைப் போக்குவதற்கு நமது அரசாங்கம் முன் வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இது மிகவும் அத்தியாவசியமான ஒரு பிரச்னையாக இருந்து கொண்டிருக்கிறது.

அடுத்தபடியாக, கல்லூரி படிப்பு சம்பந்தப்பட்ட அளவிலே மெடிகல் காலேஜ் மாணவர்களைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அவர்கள் படித்து முடிந்த பிறகு, " இன்டர்ன்மெண்ட் பீரியடில் " ஒரு வருஷ காலத்திற்கு அவர்களுக்கு எந்தவிதமான பிரதிப் பிரயோசனமும் அளிக்கப்படுவதில்லை. ஸ்டைபண்டோ, சம்பளமோ எதுவும் அளிக்கப்படுவதில்லை. அந்த ஒரு வருஷகாலத்தில் அவர்கள் தங்களாகவே தங்களுடைய பணத்தை செலவழித்துக் கொண்டு இருக்க வேண்டியிருக்கிறது. அந்த இன்டர்ன்மெண்டு பீரியடில் இவர்கள் மற்ற டாக்டர்களை விட அதிகமாக வேலை செய்ய வேண்டியிருக்கிறது. இருந்தாலும் கூட, அவர்களுக்கு எந்தவிதமான ஒரு பிரயோசனமும் அளிக்கப்படுவதில்லை. மற்ற யூனிவர்ஸிடிகளில் ஸ்டைபெண்டு போன்று கொடுக்கிறார்கள் என்று கேள்விப்படுகிறேன். அதேமாதிரி நம்முடைய மாணவர்களுக்கு இண்டர்ன் மெண்டுபீரியடில் ஸ்டைபெண்டு கொடுக்கமுடியுமா என்பது பற்றி அரசாங்கம் நன்றாக பரிசீலனை செய்து அவர்களுக்கு ஸ்டைபெண்டு கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, எலிமெண்டரி ஸ்கூல் சம்பந்தமாக ஒரு விஷயத்தைப் பற்றி மட்டும் நான் குறிப்பிட ஆசைப்படுகிறேன். எலிமென்டரி ஸ்கூலில் இருக்கக்கூடிய உபாத்தியாயர்களுக்கு சில கிராமங்களில் வீடுகள் கட்டிக் கொடுக்கப்படுகின்றன. ஜில்லா போர்டு நிர்வாகத்திலிருந்த ஆரம்பப் பள்ளிகள் சம்பந்தப்பட்ட அளவிலே, ஆசிரியர்களுக்காக பல வீடுகள் பல கிராமங்களிலே கட்டியிருக்கிறார்கள். அந்த மாதிரி இடங்களிலே ஆசிரியர்கள் அந்த வீடுகளில் கட்டயாமாக சென்று குடியிருக்க வேண்டுமென்று அவர்களை நிர்ப்பந்திருக்கிறார்கள். அம்மாதிரி அவர்கள் அந்த வீடுகளில் குடியிருக்க வேண்டுமென்று நிர்பந்திக்கப்படும் பொழுது, ரூ. 10

வாடகை கொடுக்க வேண்டியிருக்கிறது. தங்களுக்குக் கிடைக்கக்கூடிய ரூ. 30, 40 சம்பளத்தில் ரூ. 10 வீட்டு வாடகைக்கு கொடுக்க வேண்டுமென்றால், அது அவர்களுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அவர்களுக்கு கிராமங்களில் சில சமயங்களில் இனமாகக்கூட வீடுகள் கிடைக்கும். அல்லது ரூ. 1, 2 அளவில்கூட மாத வாடகைக்கு வீடுகள் கிடைக்கும். அம்மாதிரி இருக்கும் பொழுது, ரூ. 10 அவசியமாக, கண்டிப்பாக வாடகை கொடுத்துத்தான் ஆகவேண்டும். அந்த வீட்டில்தான் குடியிருக்க வேண்டும் என்று அவர்கள் நிர்ப்பந்திக்கப்படுவதின் காரணமாக அவர்கள் கஷ்டப்படுகிறார்கள். இதனால் அவர்களுக்கு ஒரு பெரிய குறை இருந்து கொண்டிருக்கிறது. இதை அரசாங்கம் போக்க வேண்டும் என்று வலியுறுத்திக் கூற நான் ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, மேனேஜ்மெண்டு பள்ளிகளிலுள்ள ஆசிரியர்களுக்கு மெடிகல் எய்டு கொடுக்கப்படுவதில்லை என்ற குறையானது நீண்ட நாட்களாக இருந்துகொண்டு வருகிறது. இதை அரசாங்கம் போக்கவேண்டும். மற்ற பள்ளிகளில் இருக்கக்கூடிய ஆசிரியர்களுக்கு மெடிகல் எய்டு முதலிய உதவிகள் அளிக்கப்படுகின்றன. ஆனால், மானேஜ்மெண்டு பள்ளிகளில் இருக்கக்கூடிய ஆசிரியர்களுக்கு அந்த உதவி அளிக்கப்படுவதில்லை. இந்த வித்தியாசத்தைப் போக்க வேண்டியது மிகவும் அவசியம். எந்த நிர்வாகத்தின் கீழ் வேலை பார்த்தாலும் அவர்கள் ஆசிரியர்கள் தான். அவர்களுக்குத் தகுதி ஒன்றாகத்தான் இருக்கிறது. அவர்களுக்கு அத்தியாவசியமாக வேண்டிய மெடிகல் எய்டு போன்ற வசதிகளை அரசாங்கம் நிச்சயமாக கொடுக்க வேண்டியது அவர்களுடைய கடமை என்பதை சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். பொதுவாக
11–30 a.m. ஆசிரியர்கள் குறைகள் என்று பார்க்கும்போது, கல்வி மான்யத்தில் அவர்கள் தொழில் சம்பந்தமாக அதிகமாகக் குறிப்பிடப்படவில்லை. அவர்களுடைய சம்பள விகிதத்தைப் பொருத்த வரை, பே கமிஷன் ரிப்போர்ட்டை பரிசீலனை செய்கிறோம், முடிவு செய்வோம் என்று குறிப்பு மட்டுந்தான் இருக்கிறது. இதிலே நான் என்ன சொல்ல விரும்புகிறேன் என்றால், எல்லாத் துறைக்கும் கொடுக்கும் முக்கியத்துவத்தைக் காட்டிலும், இந்தக் கல்வித் துறைக்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும் என்பது. யாரும் வருவாயை மட்டும் கணக்கிட்டு சேவை செய்வதில்லை. அப்படிச் செய்தால் இவ்வளவு நல்ல முறையிலே சேவைசெய்ய முடியாது. ஆகவே, அவர்களுக்கு வருவாயை அதிகமாக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. அந்த நிலையை அரசாங்கம் உணர்ந்து, அவர்களை ஊக்கப் படுத்த வேண்டும் என்ற எண்ணத்தை மனதிற் கொண்டு, எவ்வளவு சலுகைகள் கொடுக்க முடியுமோ அவ்வளவு சலுகைகள் அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**TEMPORARY CHAIRMAN (Sri M. JAGANNATHAN) :** The hon. Member has got two minutes more.

**Sri SOWDI S. SUNDARA BHARATHI :** Thank you, Sir, இன்னும் ஒன்று சொல்ல விரும்புகிறேன். அது எலிமெண்டரி ஸ்கூலானாலும் செகண்டரி ஸ்கூலானாலும், அல்லது காலேஜ் ஆனாலும், அந்த கல்வித் திட்டத்திலே மான்யுவல் லேபருக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும். முன்னால் மான்யுவல் லேபரே இல்லாமல் இருந்தது, இப்பொழுது கொஞ்சம் கொஞ்சமாக வைக்கப்படுகிறது. ஆனாலும் இன்னும் அதிகமாக மான்யுவல் லேபருக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். தட் இஸ் ஆல், ஸார்.

*** Sri C. MUTHIAH :** தலைவர் அவர்களே, இந்த கல்வி மானியத்திலே, எல்லா மானியத்தையும்விட, உண்மையோடு, ஆதரவோடு, கிராமாந்திர மக்கள் முழு மனதோடு இதை ஆதரித்து, இதை வரவேற்கிறார்கள் என்ற முறையிலே, இதை முழு மனதோடு ஆதரித்து, அவர்கள் சார்பிலே நன்றி செலுத்தி, கல்வி சீரமைப்பானாலும் சரி, பகல் உணவு திட்டமானாலும்சரி மனமுவந்து உதவிய தனவந்தர்களுக்கும், இந்த சட்ட சபை மூலமாக அவர்களுக்கும் நன்றி தெரிவிக்கக் கடமைப் பட்டிருக்கிறேன், என்பதைச் சொல்லிக்

26th April 1960] [Sri C. Muthiah]

கொண்டு, சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த பள்ளிச் சீரமைப்பு, பகல் உணவு முதலியவைகளை யார் நடத்துகிறார்கள் ? நன்றாக கவனித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். தனியார் இதை செம்மையாக நடத்தி வருகிறார்கள். இதிலே அரசாங்க தலையீடு எதற்கு ? சட்ட சபை அங்கத்தினர்களைப் போட்டு ஒரு கமிட்டி தேவையா ? அரசாங்க அதிகாரிகள் விஷயத்தில் கண்காணிப்பு இருக்க வேண்டும் அரசாங்கத்திற்கு. ஆனால், தனியார் சரியாக நடத்துகிறார்களா என்று பார்ப்பது உசிதமில்லை. பாராளுமன்றத்தில், எதற்கெடுத்தாலும், ஒரு கமிட்டி என்று போடுவது சகஜமாக போய்விட்டது. கமிட்டி நமக்கு ஒரு வியாதியாக வந்து விட்டது. ஆகவே இந்த கமிட்டி அமைப்பது அவ்வளவு உசிதமில்லை. எல்லா இலாகாக்களும்போல இங்கேயும் பல தவிர்க்க முடியாத குறைகள் இருக்கலாம் என்பதை மட்டும் எடுத்துக் கூற விரும்புகிறேன்.

இப்பொழுது, ஆசிரியர் படை 94 ஆயிரத்தை வைத்துக் கொண்டு பெரிய சேனையை நடத்துவது போல் நடத்த வேண்டியிருக்கிறது. பள்ளி சீரமைப்பில் ஓரிரண்டு நாட்கள் ஆசிரியர்கள் வரவில்லையென்றால், அதற் காக அவர்களைக் குறை சொல்லக் கூடாது. இடிந்த பள்ளிக் கூடத்தில் அரசமரத்தடியிலிருந்து பள்ளிக்கூடக் காரியங்களைச் செய்கிறார்கள். அவர் களைப் பெற்றோர்கள் என்று கருதி நடந்த வேண்டும்.

பள்ளிச் சீரமைப்பில், தனவந்தர்கள் பல காரியங்களை ஏற்று, அதற்கு நிலம் தானமும் செய்திருக்கிறார்கள். அப்படிக் கிடைத்த நிலத்தையெல் லாம் என்ன செய்வது என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அம்மாதிரி ஐந்து மாநாடுகளைப் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. இம்மாதிரிக் காரியங்களினால் கிராமப்புறங்களில் பல ஆயிரக்கணக்கானவர் கள் கல்வியறிவு உள்ளவர்களாக ஆக முடிந்திருக்கிறது இந்த 8, 10 ஆண்டு காலத்தில். அவர்கள் இந்தப் பணியை கோவில் மண்டகப்படி போல், கோவில் மண்டகப்படியை விட்டு இந்த கலை மண்டகப்படியைக் கைக்கொண்டிருக்கிறார்கள். இந்த தனவந்தர்கள் இதை நன்கு உணர்ந்து நடத்துகிறார்கள்.

நாகப்பட்டிணம் ஈஸ்டு ரேஞ்சிலே முதலிலே 720 பள்ளிகள் இருந்தன. இப்பொழுது 1,450 இருக்கின்றன. இதற்கு ஈஸ்டு தஞ்சையில் ஒரே ஒரு கல்வி அதிகாரி இருக்கிறார். கல்வி அதிகாரிகளுக்கு அக்கரை யிருக்கிறதா என்றால், அவர்களுக்குக் மனக்குறைகள்தான் அதிகமாக இருக்கிறது. முன்பு ஒரு டி.இ.ஓ. இருந்தார். அவர் வெகுகால மாகத் தன் சர்வீஸ் ரெகுலரைஸ் ஆகவில்லை என்று குறைப் பட்டுக் கொண்டிருந்தார்கள். அப்படியே கடைசியில் இறந்தார்கள். இம்மாதிரி அவருக்கு ரெகுலரைஸ் பண்ணாமல் இருந்ததை மன வேதனையோடு சொல்லுகிறேன். சரியான காலத்தில் ரெகுலரைஸ் செய்தால்தான் அவர் கள் உற்சாகத்தோடு, ஊக்கத்தோடு வேலை செய்ய முடியும். குறிப்பிலே 82 டெபுடி இன்ஸ்பெக்டர்களைப் போடப்போவதாக கண்டிருக்கிறது. 50 பள்ளிகளுக்கு ஒருத்தர் என்றாலும், இந்த 82 பேர்கள் மிகக் குறைவு. ஒரு டெபுடி இன்ஸ்பெக்டரை நான் யார் என்று தெரியாமல், அவர் என் ஆபீசுக்கு வந்த காலத்தில், "மாலையில் வா, போ" என்று அனுப்பி வைத்தேன். அவர் " எனக்கு 5 நாளைக்கு ஒரு தரம் ஷேவ் பண்ணிக் கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன்" என்று சொன்னார்கள். ஆகவே, இவர்கள், பள்ளி ஆசிரியர்களையும் விட மிகக் கேவலமான நிலையில் இருந் தால் எப்படி பணியாற்ற முடியும் என்று கேட்க விரும்புகிறேன். ஆகவே, அவர்களுக்கு அட்ராக்டிவ் பே கொடுத்தாலொழிய, டெபுடி இன்ஸ்பெக்டர் கள், ஆசிரியர்கள், இவர்களெல்லாம் வேலை பார்க்க முடியாது. இவற் றையெல்லாம் மிக அக்கரையாக அரசாங்கம் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக ஒரு பாலிடெக்னிக் பள்ளியை சீயாழியில் ஆரம்பிக்கப் போவதாகச் சொல்லப்படுகிறது. அதற்கு நான் நன்றி செலுத்த கடமைப் பட்டிருக்கிறேன். அதற்கு அடுத்தாற்போலுள்ள கோவலன் நகர மாகிய காவிரிப்பூம்பட்டணம் இருக்கிறது. அங்கு அதை ஆரம்பித்தால்

[Sri C. Muthiah] [26th April 1960

ரொம்பவும் உசிதமான இடமாக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம். ஆகவே காவிரிப்பூம்பட்டணத்தில் அந்தப் பள்ளியை ஆரம்பிக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, ஆசியர்களுடைய குறைகளை ஜாப்தா மூலமாகக் கொடுத்திருக்கிறார்கள். தேர்தல் காலத்தில்தான் பே கமிஷன் வருகிறது என்று சொல்லுகிறார்கள். பாக்கி நாட்களில் எங்களை மறந்து போய் விடுகிறீர்கள் என்று குற்றம் சாட்டுகிறார்கள். இப்படிப்பட்ட அவச்சொல்லுக்கு இடம் தராமல், அவர்களுக்கு வேண்டியதைச் செய்யும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். "நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம், தேர்தல் வந்தால் எங்களுக்கு தானாகவே சம்பளம் கிடைத்து விடும்" என்று சொல்லுகிறார்கள். அந்த அளவுக்கு அவர்கள் பேசும்படியாக இடம் கொடுக்காமல், அவர்களுக்கு சீக்கிரத்தில் ஏதாவது செய்யும்படியாகக் கேட்டுக்கொண்டு, சீக்கிரத்தில் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு, எனக்கு பேசுவதற்கு இந்தச் சந்தர்ப்பத்தைக் கொடுத்ததற்கு என்னுடைய நன்றியை தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRIMATHI C. KOLANTHAI AMMAL : கனம் தலைவர் அவர்களே, இன்று கனம் அமைச்சர் அவர்களால் கொண்டு வரப்பட்டிருக்கிற இந்த கல்வி மானிய கோரிக்கையை முழு மனதுடன் ஆதரித்து ஒருசில வார்த்தைகளை நான் பேச விரும்புகிறேன்.

முதலாவதாக, ஆரம்ப ஆசிரியர்களுடைய பல குறைகளில் வீட்டு வசதியைப்பற்றி பல அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். எங்கள் வட்டாரத்தைப் பொறுத்த வரையில் ஆசிரியர்கள் சார்பாக அரசாங்கத்தினுடைய மானியத்தில் கட்டப்பட்ட வீடுகளை அவர்கள் மிக உற்சாகத்துடன் கட்டி இருக்கிறார்கள். அங்கு 16 ஆசிரியர்கள் வேலை செய்யக்கூடிய ஒரு கிராமத்தில் இரண்டு வீடுகள் கட்டக்கூடிய ஒரு சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. அந்த வீட்டை யாருக்குக் கொடுப்பது என்ற ஒரு பெரிய பிரச்னை ஏற்படுகிறது. ஆகவே தொகுதிவாரியாகவோ அல்லது ஜில்லா வாரியாகவோ எடுத்துக்கொண்டு, தகுந்த அளவில் பணத்தை ஒதுக்கி வீடுகளைக் கட்டிக் கொடுக்க வேண்டும். ஆகவே ஏழ்மை நிலையில் இருக்கக்கூடிய ஆரம்ப ஆசிரியர்களுக்கு அதிகப்படியாக வீடுகள் வசதி செய்து கொடுக்க நம்முடைய அரசாங்கம் தக்க பணம் ஒதுக்க வேண்டும் என்று இந்த இடத்தில் வற்புறுத்த விரும்புகிறேன். எதிர் கட்சியிலுள்ள கனம் அங்கத்தினர்கள் குறிப்பிட்டது போல் பத்து ரூபாய் வாடகை கொடுக்க முடியாமல் பல ஆசிரியர்கள் இருப்பது போல் எங்கள் வட்டாரத்தில் இல்லை. அப்படிப்பட்ட நிலைமையை எங்கள் வட்டாரத்தில் காணவே முடியாது. ஆகவே அதிகப்படியான வீடுகளைக் கட்டுவதற்கு தக்க மானியத்தை ஒதுக்க வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, ட்ரெயினிங் ஸ்கூல்களில் மாணவிகளைச் சேர்க்கும் போது அது ஒரு பெரிய தொல்லையாக ஏற்பட்டு விடுகிறது. அதிலும் சட்டசபை அங்கத்தினர்களாக இருந்துவிட்டால் நூற்றுக் கணக்கான பெண்கள் எங்களைச் சுற்றி இருக்கக்கூடிய சூழ்நிலை ஏற்பட்டு விடுகிறது. ஒவ்வொருவரும் தங்களை ட்ரெயினிங் ஸ்கூல்களில் சேர்த்துவிட வேண்டும் என்று சொல்லிக்கொண்டு சூழ்ந்துகொண்டு விடுகிறார்கள். அப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையைப் பார்த்தால் அந்த இரண்டு, மூன்று மாதங்களுக்கு வேறு ஊருக்கு குடியேறிவிடலாமோ என்றுகூட தோன்றுகிறது. எஸ்.எஸ்.எல்.சி. படித்துவிட்டு, மற்றும் சிலர் இ.எஸ்.எல்.சி. படித்துவிட்டு தங்களுடைய ஏழ்மையினால் வேறு தொழிலுக்குச் செல்ல முடியாமல், தங்களுக்கு தகுந்தது ஆசிரியர் தொழில்தான் என்று கருதி ஆசிரியர் பயிற்சி பெறலாம் என்று வருகிறார்கள். அப்படி வருகிறவர்களில் நூற்றுக் கணக்கான பேர்கள் அப்ளை செய்தால் அவர்களில் ஒருவருக்குத் தான் கிடைக்கிறது. ஆகவே இவ்வளவு பேர்கள் அப்ளை செய்வதால் அதிகப்படியான ட்ரெயினிங் ஸ்கூல்களை ஏற்படுத்த வேண்டும் என்று இந்த இடத்தில் வற்புறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அப்படி அதிகப்படியான ட்ரெயினிங் ஸ்கூல்களை அரசாங்கமே ஏற்படுத்தா

26th April 1960] [Srimathi C. Kolanthai Ammal]

விட்டாலும், தனிப்பட்ட மானேஜ்மெண்ட் அந்த மாதிரியான டிரெயினிங் ஸ்கூல்களை ஆரம்பிக்கிறோம் என்று முன் வந்தால் அவர்களுக்கு அரசாங்கம் உதவி அளிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த முறையில் ஆர்டர் போட்டு பயிற்சி பள்ளிகளை அதிகப்படியாக அமைக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று இந்த இடத்தில் வற்புறுத்திக் கொள்ளுகிறேன். ட்ரெயினிங் ஸ்கூல்களில் மாணவிகளைச் சேர்க்கும் போது உபகாரச் சம்பளம் கொடுக்கிறார்கள். அது அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு காரணமாக இருக்கிறது. ஆகவே அதை நல்ல முறையில் கொடுக்க வேண்டும் என்றும், அதிகப்படியாகக் கொடுக்க வேண்டும் என்றும் வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக உயர் நிலைப் பள்ளியில் வேலை செய்யக்கூடிய தமிழ் ஆசிரியர்களுடைய நிலைமையைப்பற்றி குறிப்பிட விரும்புகிறேன். ஜில்லா போர்டிலும், மானேஜ்மெண்டிலும் வேலை செய்யக்கூடிய ஆசிரியர்களுக்கு ஆரம்பச் சம்பளம் 45 ரூபாய். இன்று அதைத் தவிர 65, 85 ரூபாய் என்று மூன்று க்ரேடுகள் இருக்கின்றன. ஜில்லா போர்டு பள்ளிகளில் மூன்று ஆசிரியர்கள் வேலை காலியானால், அங்கே பயிற்சி பெற்ற தமிழ் ஆசிரியர்கள் வேலை காலி என்று முதலில் சொல்லுகிறார்கள். பயிற்சி பெறாத ஆசிரியர்கள் அதற்கு அப்ளை செய்தால், பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் தேவை என்று சொல்லுகிறார்கள். அப்படிச் சொல்லி பயிற்சி பெற்று வாருங்கள் என்று அனுப்பிவிடுகிறார்கள். அப்படி ஆசிரியர்கள் பயிற்சி பெற்றபின் வந்தால், அப்பொழுது என்ன சொல்லுகிறார்கள் என்றால், தங்களுக்கு பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் தேவையில்லை, இருக்கிறவர்களை வைத்துக்கொண்டு மானேஜ் பண்ணிக் கொள்ளுகிறோம் என்று சொல்லிவிடுகிறார்கள். இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலை தமிழ் ஆசிரியர்களுக்கு இருக்கிறது. அப்படிச் சொல்லிவிட்டு 45 ரூபாய் கொடுத்து நிரந்தரமாக அவர்களையே வைத்துக்கொள்ளுகிறார்கள். இதனால் தங்களுடைய வருவாயை தமிழ் ஆசிரியர்கள் குறைத்துக்கொள்வதாக இருக்கிறது. ஆகவே உயர்நிலை பள்ளிகளில் முதல் பாரம் முதற்கொண்டு தமிழில் ஆசிரியர்களைக் கொண்டு போதிக்கும்படியான ஒரு சூழ் நிலையை உண்டாக்க வேண்டும் என்று இந்த இடத்தில் வற்புறுத்திக் கொள்கிறேன். 85 ரூபாய் சம்பளத்தில் இடம் இல்லை என்று சொல்லும் போது பயிற்சி பெற்ற ஆசிரியர்களுக்கு வேலை இல்லாமல் போய்விடுகிறது. ஜில்லா போர்டு பள்ளிகளில் பல இடங்களில் இது மாதிரியான குறை பாடுகள் இருக்கின்றன என்பதை கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

அதற்குமேல் கல்லூரிகளில் போதனா மொழி தமிழாக இருக்கவேண்டும் என்று சொல்வதை முழு மனதுடன் நான் வரவேற்கிறேன். அதை ஆதரிக்கிறேன். பல ஆண்டுகளாக ஆங்கிலத்தில் போதித்து வந்ததால் சிலர் ஆங்கிலம் இருக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். அவர்களுடைய மனம் இன்னும் மாறவில்லை. நம் நாட்டில் இருக்கக்கூடிய எவ்வளவோ அறிஞர்கள் தமிழ் போதனா மொழியாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையில் கல்லூரிகளில் உள்ள தலைமை ஆசிரியர்களை ஆர்ட்ஸ் கலை பாடங்களை தமிழில் போதிப்பீர்களா என்று கேட்டால், அவர்கள் சரியாக பதில் சொல்ல முன் வரமாட்டார்கள். ஏனென்றால், இப்பொழுது பலர் ஆங்கிலத்தை விட்டுக் கொடுக்க மனம் இல்லாமல் இருக்கிறார்கள். அதனால்தான் கல்லூரித் தலைவர் முதற்கொண்டு எல்லோரும் தமிழில் போதிக்க முடியாது என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அப்படி இல்லாமல் தமிழில் போதிக்க வேண்டும் என்று சொன்னால், அவர்கள் போதிக்கத்தான் முன் வருவார்கள் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கனம் சேலம் அங்கத்தினர் அவர்கள் மதிய உணவு கொடுப்பதைப் பற்றியும், இலவச உடை வழங்குவதைப்பற்றியும் குறிப்பிட்டு ஏதோ அதில் குறைபாடுகள் இருக்கின்றன என்றும் சொன்னார். அப்படிப்பட்ட குறை பாடுகள் எங்கள் வட்டாரத்தில் இருப்பதாகத் தெரியவில்லை என்பதை

[Srimathi C. Kolanthai Ammal] [26th April 1960

இந்தச் சபையில் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். "இடுவார் பிச்சையை கெடுவார் கெடுப்பர்" என்று சொல்லக்கூடிய அளவில் பொது மக்கள் உணவுக்கும், உடைக்கும் நூற்றுக் கணக்கான பணம் கொடுக்கிறார்கள். அதன் மூலம் இலவச உணவு, உடை கொடுக்கப்படுகிறது. அதில் குறை சொல்வது சரியல்ல. அதைப் பார்த்து மற்றவர்களுக்கு கொடுக்காமல் இருக்கத் தோன்றும். அதனால் அப்படிச் சொல்லாமல் இருப்பது நல்லது என்பதை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அதே நேரத்தில் ஆரம்ப ஆசிரியர்கள் பள்ளிக்கூடங்களுக்கு வருவதில்லை என்றெல்லாம் சொல்லப்படுகிறது. அப்படி ஒன்றிரண்டு நாட்கள் வெளியில் சென்றிருக்கலாம். அதற்காக அப்படி எல்லோரும் பள்ளிக்கூடத்திற்கு வராமல் வெளியே போய் விடுகிறார்கள் என்று சொல்வது சரியல்ல. இதைக் கேட்டால் சரியாக நடக்கக்கூடியவர்களுக்குக் கஷ்டமாக இருக்கும் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

இப்பொழுது பள்ளிச் சீரமைப்பு என்பது இந்த மாநிலத்தில் எல்லோராலும் வரவேற்கப்படுகிறது. இதை எல்லோரும் சேர்ந்து உற்சாகத்துடன் வரவேற்கிறார்கள். ஏழை மக்களால் பாராட்டக்கூடியதாக இருக்கிறது. இது ஒரு நல்ல திட்டம் என்பதை தெரிவித்துக்கொண்டு பல ஏழ்மையான குடும்பங்களுக்கு வசதி அளிக்கக்கூடிய திட்டம், இதை எல்லோரும் வரவேற்பார்கள் என்பதையும் சொல்லிக்கொண்டு இந்த சந்தர்ப்பத்தில் எனக்குப் பேசுவதற்கு அனுமதி கொடுத்த கனம் சபாநாயகர் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

* **SRI T. S. RAMASWAMI** : கனம் தலைவர் அவர்களே, இந்த மானியத்தைப்பற்றி பேசும்போது முக்கியமாக செலவு செய்ய வேண்டியது நம்முடைய கல்வி இலாகாதான். இந்தச் சட்டசபையிலும் சரி, பொது மக்களும் சரி இந்தக் கல்வி இலாகாவிற்குத்தான் அதிகப்படியாக செலவு செய்ய வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். எதிர் காலத்தில் போதிய அளவில் கல்வி கொடுக்க வேண்டும் என்ற அளவில் இதற்கு அதிகப்படியாக பணம் செலவு செய்ய ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறோம். அதற்காகவே இந்த கல்வி இலாகாவிற்கு பட்ஜெட் மூலமாக அதிகமாக பணத்தை ஒதுக்கி வைக்கிறோம். அப்படி ஒதுக்கி வைப்பது ஆண்டுக்கு ஆண்டு உயர்ந்துகொண்டே போகிறது. இந்த நிலைமையில் நம்முடைய நாட்டில் மாணவர்கள், குழந்தைகள் அதிகமாக பள்ளிக்கூடங்களில் சேர்ந்து படித்துக்கொண்டிருக்கிறார்கள். என்னைப் பொறுத்த அளவில் இந்த இலாகாவைப்பற்றி ஒரு சில வார்த்தைகளை குறிப்பிட ஆசைப்படுகிறேன். நமது நாட்டின் நிதி வருமானத்தில் அதிகப்படியாக செலவு செய்வது இந்த கல்வி இலாகாதான். அதன் மூலம் அதிகப்படியான குழந்தைகள் பள்ளிகளில் சேர்ந்து படிக்கிறார்கள். அதிகப்படியான குழந்தைகளுக்குச் சொல்லிக்கொடுக்கக்கூடிய நிலைமை இருந்த போதிலும் இன்னும் அதிகப்படியாக செய்ய இயலாமல் இருக்கிறது. நான் இந்த ராஜ்யத்திற்கு வருவதற்கு முன்னதாக இங்கே பல அரசியல் மாறுதல்கள் ஏற்பட்டிருக்கிறது. அதற்குக் காரணமாக இருந்ததெல்லாம் இந்தக் கல்விதான், இந்தக் கல்வி இலாகாதான்.

1936-37-லே இந்தியை கொண்டுவந்தபோது, இந்தி வேண்டுமா, வேண்டாமா என்பதிலேயும், **Shift system** கொண்டு வந்தபோதும், இப்பொழுது தமிழ் போதனா மொழியாக வேண்டுமா என்பதிலேயும், அரசியல் வேற்றுமைகள், அரசியல் வாதப் பிரதிவாதங்கள் ஏற்பட்டு, எதிர் காலத்தை பாதிக்கக்கூடிய ராஜ்யம் ஏதாவது உண்டு என்றால் அது சென்னை ராஜ்யம்தான் என்று நான் வருத்தத்துடன் சொல்லிக்கொள்கிறேன்.

நமது ராஜ்யத்தைவிட குறைந்த வருமானம் உடைய ராஜ்யங்களெல்லாம், இலவசக் கட்டாயக் கல்வியை புகுத்தி விட்டார்கள். நம்முடைய ராஜ்யத்திலே 16 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். ஆனால் அதை செய்ய முடியவில்லை என்று பார்க்கும்போது, மிகவும் வருத்தமாக இருக்கிறது. அந்த விஷயத்தைப் பொறுத்த மட்டில் சட்ட சபை அங்கத்தினர்களுக்கும்,

26th April 1960] [Sri T. S. Ramaswami]

பொது மக்களுக்கும், தலைவர்களுக்கும் முக்கியமான கடமை உண்டு. இந்த வேகத்திலே நாம் போய்க்கொண்டு இருந்தால் இன்னும் எத்தனையோ ஆண்டுகளாகும் நம்முடைய எல்லா மாணவ, மாணவியரும் கல்வி பெறக்கூடிய நிலைமை வருவதற்கு. ஆகவே இவற்றையெல்லாம் சீர் தூக்கிப் பார்க்கவேண்டிய நிலைமை இருக்கிறது என்று இந்த சபையிலே எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, இரண்டு மூன்று ஆண்டுகளாக ஒன்றைப் பார்க்கின்றோம். எல்லா இடங்களிலேயும் மக்களுக்கு ஒரு ஆர்வம் இருக்கிறது. அரசாங்கம் செய்ய முடியாததைக்கூட மக்களாகவே முன்னின்று, எங்கெங்கே பள்ளிக்கூடம் வேண்டுமோ, அதை அவர்களே வைக்கிறார்கள் என்பதும் அதற்கு அரசாங்கமும், ஆசிரியர்களும், கல்வி இலாகாவினரும் உற்சாகம் அளிக்கிறார்கள் என்பதும் போற்றத் தக்கது. மக்கள் தாங்களாகவே முன்வந்து பள்ளிக்கூடம் கட்டிக்கொடுக்கவும், அவைகளுக்கு வேண்டிய சாதனங்களை கொடுக்கவும் ஆன ஒரு இயக்கமே வளர்ந்து கொண்டுவருகிறதைப் பார்த்து இதர ராஜ்யங்கள் மெச்சுகின்றன. பள்ளி சீர்அமைப்பு மகாநாடுகளிலே மக்கள் உவந்து அளிக்கக்கூடிய பொருள் களை சரியாக பராமரிக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

அடுத்தபடியாக, மதிய உணவு இயக்கம் வளர்ந்துகொண்டு வருகிறது. நமது மாகாணத்தைப் பற்றி உலகமே வியக்கக்கூடிய அளவிலே இருக் கிறது. அதை மிகவும் பாராட்டவேண்டும். அதே நேரத்திலே பள்ளிக் கூடத்திலே சொல்லிக்கொடுக்கக்கூடிய ஆசிரியர்களின் கதி ரொம்ப மோசமாக இருக்கிறது என்று எனக்கு முன்னால் பேசியவர்கள், காங்கிரஸ்காரர் கள்கூட, குறிப்பிட்டார்கள். தேர்தல் காலத்துக்கு முன்னால், ஆசிரியர் களுக்கு ஏதாவது கொடுத்துவிட்டு திருப்தி அடைந்தால் போதாது. அவர் களுக்கு எவ்வளவு தேவையோ, அவ்வளவு கொடுக்கவேண்டும்.

கன்னியாகுமாரி ஜில்லா பிரத்தியேகமானது. இங்கேயுள்ள சம்பளம் கூட அங்கே இல்லை. அந்த ஜில்லா சென்னை ராஜ்யத்தோடு சேர்ந்து 41 மாதங்கள் ஆகின்றன. என்றாலும் அங்கேயுள்ள Graduate teachers-ஐப் பொறுத்த வரையில், செப்டம்பர் 8-ம் தேதி இங்கேயுள்ள பட்டம் பெற்ற ஆசிரியர்களைப் போலவே அங்கேயுள்ள பட்டம் பெற்ற ஆசிரியர்களுக்கு சம்பள விகிதம் இருக்கவேண்டும் என்று முடிவு எடுத்தார்கள். ஆனால் அந்த முடிவை நடைமுறையிலே இன்னும் கொண்டு வரவில்லை. அந்த ஜில்லா சென்னை ராஜ்யத்துடன் சேர்ந்தபிறகு வேலை யில் எடுத்துக்கொள்ளப்படும் ஆசிரியர்களுக்கு இங்கேயுள்ள சம்பள விகி தத்தை நடைமுறையில் கொண்டுவருகிறார்கள். ஆனால் தனியார் நடத் தும் பள்ளிக்கூட ஆசிரியர்களுக்கும், அந்த ஜில்லா இங்கே சேரு வதற்கும் முன்னால் இருந்த ஆசிரியர்களுக்கும், சம்பளம் உயர்த்தப்பட வில்லை. இது ஏன் செய்யப்படவில்லை என்று எங்களுக்குத் தெரியவில்லை.

ஆசிரியர்களை இடம் மாற்றுதலும் வேதனை தருகிறது. ஆசிரியர்கள் குறைந்த ஊதியத்தைப் பெறக்கூடியவர்கள். அவர்களுடைய இடங்களுக்கு அருகிலுள்ள பள்ளிக்கூடங்களில் அவர்களை அமர்த்தினால், சௌகரியமாக இருக்கும். அவர்கள் உற்சாகமாக இருந்தால்தான் பள்ளி மாணவர்களுக்கும் நன்றாகப் பாடம் சொல்லிக்கொடுப்பார்கள்.

கல்லூரி போதனா மொழி பிரச்சனையிலே, துரதிர்ஷ்ட வசமாக அரசியல் காரணங்கள் தலையிடுகின்றன. இந்தியை மற்ற ராஜ்யங்களிலே கட்டாய பாடமாக படித்து வந்தார்கள். அதனால் அவர்களுடைய தாய் மொழிக்கு எந்தவிதமான குறையையும் காணோம். உதாரணமாக, கேரள ராஜ்யத்திலே, இந்தி கட்டாய பாடமாக இருந்தும், மலையாளம் வளர்ந்து கொண்டுதான் வருகிறது. இந்தி படிப்பும், ஆங்கில படிப்பும், மலையாளப் படிப்புக்கு அனுசரணையாக இருக்கிறதேதவிர, இடையூறாக இல்லை. இன்னொரு மொழி படிப்பு நமது தமிழ் மொழிக்கு எப்படி கெடுதல் விளைவிக்கும்

என்று என்னாலே புரிந்துகொள்ள முடியவில்லை. எவ்வளவுக்கெவ்வளவு அன்னிய மொழிகள் படிக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நமது தாய் மொழி வளரும். இந்தி படிப்பினால் நமது தாய்மொழி அழிந்துவிடும் என்பதை என்னால் நம்பமுடியவில்லை. அப்படிச் சொல்பவர்கள் எவ்வளவு பெரிய தலைவர்களாக இருந்தாலும் சரி. அதற்குப் பின்னால் **shift system** வந்தது. அதைக் கையாண்டு இருந்திருந்தால் பல கோடிக் கணக்கான குழந்தைகளுக்கு கல்வி அளித்திருக்கமுடியும்.

தாய்மொழியை போதனா மொழியாக கைக்கொள்ளவேண்டிய இந்த தருணத்திலே, அதை நம்முடைய மாணவர்களுக்கு இடையூறு இல்லாத வகையிலேயும், அவர்களுடைய எதிர்கால வாழ்வு பாதிக்கப்படாத வகை யிலேயும், நமது தாய்மொழியை புகுத்தவேண்டும். நமது தாய்மொழி நன்றாக வளர்ச்சி அடைந்தால் ஒழிய, புகுத்தவேண்டும் என்ற ஆசை இருந்தாலும். . . .

**The Hon. Sri C. SUBRAMANIAM** : என்ன சொல்கிறீர்கள் என்று என்னால் புரிந்துக்கொள்ள முடியவில்லை.

**Sri T. S. RAMASWAMI** : தமிழ் மொழியை போதனா மொழி யாக கொண்டுவரவேண்டியது அவசியம், ஆனால் அதற்கு ஒரு **phased programme** வேண்டும்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : நான் சொல்வதை சரி என்று சொல்கிறீர்களா? தவறு என்று சொல்கிறீர்களா?

**Sri T. S. RAMASWAMI** : இன்ன காலவரையறைக்குள் கொண்டு வரவேண்டும் என்று சொல்கிறேன். பாடப் புத்தகங்கள் **(Text books)**, தயாராகவில்லை. அவை பழக்கத்திலே வரவில்லை. அந்த நிலையிலே **1963-64**-ம் ஆண்டிலே புகுத்த வேண்டும். அப்படி செய்யமுடியாத கல்லூரிகளுக்கு அரசாங்கம் பண உதவி தரமுடியாது என்ற நிலைமை ஏற் படுமானால், அது கஷ்டத்தை உண்டாக்கும். எனவே, நமது கலையும், வாழ்க்கையும், மொழியும், வளர்ச்சி அடைந்தால்தான் அதைப் புகுத்துவது நியாயமாக இருக்கும்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இந்த திட்டத்தை நிறுத்தி விடச் சொல்கிறீர்களா?

**Sri T. S. RAMASWAMI** : நாம் அதற்கு தயாராக இல்லாதபோது புகுத்துவது என்பது தவறாகத்தான் முடியும் என்று சொல்லிக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri S. NAGARAJA MONIGAR** : சபைத்தலைவர் அவர்களே, இங்கே கல்வியைப்பற்றி பேசுவதே ஒரு பாக்யம். இதிலே பங்கெடுத்துக்கொள் வதிலே மகிழ்ச்சி அடைகின்றேன். பொது விவாதத்தின்போது ரஸ்தாக் களின் அபிவிருத்திதான் மிக முக்கியம் என்று சொல்லி இருந்தேன். அது எப்படி இருந்தாலும் கல்வி இரண்டாவதாக மிகவும் முக்கியமானது என்பதை மறுக்க முடியாது.

ஒரு பொருளைப்பற்றி நன்றாகத் தெரிந்துகொள்வதும் அதை அறிந்து கொள்ளும் செயலும் சேர்ந்து கல்வியாகும். நாம் நல்வாழ்வு வாழ வேண்டுமானால், மற்ற விஷயங்களைப்பற்றி ஒரு அறிவு, விளக்கம், புரிந்து கொள்ளும் தன்மை வேண்டும். அவைகளை புரிந்து கொள்ளும்போது சிறப்பான முறையிலே புரிந்துகொள்ளவேண்டும். ஆகவே இத்தகைய கல்வியை நமது நாட்டிலே, எந்த அளவுக்கு சமீப காலத்திலே பெருக்கி வருகின்றோம் என்றால், அது மிக மிக வியக்கத்தக்கதாக இருக்கிறது.

26th April 1960] [Sri S. Nagaraja Monigar]

(Deputy Speaker in the Chair)

சென்னை மாகாணம் கல்வி விஷயத்தில் முன் நிற்கிறது என்று சொல்லக் கூடிய முறையில் கல்வி கற்க வேண்டும் என்ற ஊக்கம் நாளுக்கு நாள் பெருகி வருகிறது. அதற்கேற்ப அரசாங்கமும் நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறது. எட்டு உயர்நிலைப்பள்ளிகள் இருந்த என் ஜில்லாவில் இப்போது 70 பள்ளிகள் இருக்கின்றன. எண்பது ஆரம்ப பள்ளிகள் இருந்த என் தாலூக்காவில் இப்போது 300-க்கு மேற்பட்ட பள்ளிகள் இருக்கின்றன. இவ்விதம் பள்ளிகளைப் பெருக்க ஏற்பாடாகி இருக்கிறது. அது மட்டுமா ? கட்டிடங்களை எடுத்துக்கொள்ளுங்கள். "கோவில் இல்லாத ஊரில் குடி இருக்க வேண்டாம்" என்று சொல்வார்கள். பாரதியார் தெருக்கள் தோறும் பள்ளிகள் ஆலயங்களாக இருக்கவேண்டுமென்று சொல்லி இருக்கிறார். அவ்வாறு இன்று கிராமங்களில் குடிசைகளுக்கு இடையில் மங்களூர் ஓடு, சுண்ணும்பு இவைகளைக்கொண்டு கட்டப்பட்ட பள்ளிகள் கோவில்கள் மாதிரி காட்சி அளிப்பதைப் பார்க்கிறோம். அத்துடன் மக்களுக்கு மதிய உணவு, உடை இவைகளைக் கொடுக்க ஏற்பாடு செய்திருப்பது ஒன்றுதான் வெளி நாட்டாரையும் கவர்ந்திருக்கிறது. இருபத்தைந்து ஆயிரம் பள்ளிகளில் சுமார் $8\frac{1}{2}$ லட்சம் பிள்ளைகளுக்கு மதிய உணவு கொடுக்கப்படுகிறது என்றால், இது எப்படி நடக்கிறது என்று புரிந்து கொள்ளவே சிலருக்குக் கஷ்டமாக இருக்கிறது. இவ்வளவுக்கும் மேலாக அடுத்தபடி பள்ளிச் சீரமைப்பு மகாநாடு. சென்ற மாதத்தில் எங்கள் ஊரில் இந்த மகாநாடு நடந்தது. நூறுவது மகாநாடு சமீபத்தில் நெருங்கிக்கொண்டுவருகிறது. இந்த மகாநாடுகளில் மக்கள் குதூகலத்துடன் பங்குகொள்ளுகிறார்கள். இதை எல்லாம் பார்த்துக்கொண்டு இருந்து விட்டு ஏதோ இஷ்டம் இல்லாதவர்களிடம் கசக்கி வாங்கப்படுவதுபோல் இந்த நாட்டில் நடக்கிறது என்று யாராவது சொன்னால் அதற்கு ஆதாரம் கண்டுபிடிக்க என்னால் முடியவில்லை. ஒரு **shift system** கொண்டு வந்து, இன்று மக்களின் **Mandate** களைப்பற்றிப் பிரமாதமாகப் பேசக்கூடியவர், அமுல் நடத்த முற்பட்டபோது அவர் அமைச்சர் பதவியை விட்டு அமைதியாக தியாகராயநகருக்குப் போகவேண்டிய நிலைமை ஏற்பட்டதென்றால், மக்களுக்கோ அல்லது ஆசிரியர்களுக்கோ விரோதமாக ஏதாவது செய்தால் இந்த நிதி அமைச்சரை மட்டும் அல்ல, இந்த சர்க்காரையும்கூட அடுத்த க்ஷணத்தில் நீக்கிவிடுவார்கள். நிற்க இப்படி எங்கு பார்த்தாலும் அபிவிருத்தியாகவே காண்கின்றதே. இதில் ஒத்துழைத்தால் திட்டங்கள் எல்லாம் நிறைவேறி ஆளும் கட்சிக்கே மதிப்புண்டாகிறது. ஒத்துழைக்காமல் நாம் ஒதுங்கியிருந்தாலோ அதிகாரிகள் யாரையோ பிடித்து நிறைவேற்றிவிடுகிறார்கள். அப்பொழுது இன்னமும் கேடு. இப்படி விழிக்கிறார்கள் நமது சகோதரரான மாவட்ட கல்வி இயக்குநர். மந்திரிகளோடு சேர்ந்து இப்படித் திட்டங்களை போட்டு நிறைவேற்றுகிறாரே என்ற வயிற்றெரிச்சல். அவர்மேல் பாய்ச்சல் இதற்கென்ன செய்வது. கல்வி விஷயத்தில் கல்வி மந்திரி எதிர்க் கட்சித் தலைவர் அண்ணாதுரையின் அபிப்பிராயத்தை போதனு மொழி விஷயத்தில் கேட்க விரும்புகிறேன் என்று சட்ட சபையில் கேட்டபோது அவர் உடனே சாமர்த்தியமாக அமைச்சரின் கருத்து எப்படியோ அப்படித்தான் எனக்கும் என்று சொல்லிவிட்டு இன்று பத்திரிகையில் அவர் எதிராக எழுதுகிறார் என்றால், இவைகள் எல்லாம் வேண்டுமென்றே நடக்கும் நாடகமோ என்று தோன்றுகிறது. இப்போது ஆங்கிலம் அடியோடு போய்விடும் என்று நினைக்காதீர்கள். பரிக்ஷார்த்தமாக ஒரு கலாசாலையில் ஏற்படுத்துகிறோம் என்று சொல்லும் போது இதில் ஆட்சேபணை கொள்ள இடம் இல்லை. என்னைப் பொருத்த வரையில் பரீக்ஷரார்த்தத் திட்டம் பி.எ. டிகிரியோடு இல்லாமல் **Technical Courses**-க்கும் ஓரிடத்தில் இருந்தால் நல்லது என்று நினைக்கிறேன். இதை இன்னும் கொஞ்ச நாளைக்குத்தான் மதிக்கக் கூடாதா என்று நானும் நினைத்தது உண்டு. கேரளம் போன்றும் இன்னும் மற்ற வெளிநாடுகளைப் போலும் நாம் இன்னும் கல்வியில் அதிகமாக முன்னேறவில்லை. அப்படி இருக்கும்போது இதை 10, 15 ஆண்டுகளுக்குத் தள்ளிப் போடக் கூடாதா என்று நான் நினைத்தது உண்டு. இப்படிப்பட்ட சந்தேகத்திற்கெல்லாம் அமைச்சர் அவர்கள் விளக்கம் 12-00 noon.

[Sri S. Nagaraja Monigar] [26th April 1960

கூறியிருக்கிறார். மேலும் பொது ஜனங்களின் கருத்தை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு இதைக் கவனிப்பதாகவும் சொல்லி இருக்கிறார். யூனிவர்சிடி கமிஷன் இதை ஒப்புக்கொண்டது என்று படித்துக் காண்பித்தார். ஒப்புக்கொண்டு இருக்கலாம். நாம்கூட மொழிவாரி மாகாணங்கள் நல்லது என்று ஆரம்பித்தோம். பின்னால் அது நல்லதாகவும் முடிந்தது. கெட்டதாகவும் முடிந்தது. இதுவும் அப்படி ஆகலாம். ஆனால் மொழி விஷயத்தில் அத்தகைய பயம் வேண்டியதில்லை. **Technical education** வகையிலும் பரீட்சை செய்து பார்ப்பது நல்லது என்று நினைக்கிறேன். பொதுவாகக் கல்வியைக் கொடுப்பதில் ஆட்சேபணை இல்லை. தரத்துடன் கல்வி கொடுப்பதில் சர்க்காருக்கு அக்கரை உண்டு. இன்று நாட்டில் பலவிதமான எண்ணங்கள் புகுந்துகொண்டு **Training school**-லில் இருக்கும் ஒரு மாணவனைப் பார்த்து நீ எந்த தேசத்தைச் சேர்ந்தவர் என்று கேட்டால் நான் தமிழ் நாட்டை சேர்ந்தவன் என்று சொல்லும்படியான நிலைமை இருக்கிறது. இந்தியாவைச் சேர்ந்தவன் என்று சொல்கிறதில்லை. இந்த நாட்டைப் பிளவு செய்யும் நோக்கத்துடன் இருக்கும் சக்திகளைப் பார்க்கும்போது மிகவும் வருத்தமாக இருக்கிறது. பள்ளிகளில் ஹெட்மாஸ்டர் தனக்குக் கீழ் உள்ள உபாத்தியாயர்கள், பிள்ளைகளை இவ்வகையில் தூண்டும்போது அவர்களைக் கண்டிக்காமல் பயந்துகொண்டு அவர்கள் பக்கம் பேசுவதை நான் பார்த்திருக்கிறேன். இது கூடாது. கல்வியின் தரம் உயரவும், ஒழுக்கமும், பண்பாடும் வளரவும் அவர்கள் பாடுபடவேண்டும். இப்போது **Philosophy course** குறைந்துகொண்டு வருகிறது. நாட்டில் இப்பொழுது பிலாஸபி அவ்வளவு தேவை காணவில்லை என்றுகூட கூறப்படுகிறது. அரசன் எப்படியோ, குடி அப்படி என்று சொல்வதுண்டு. அதற்கு வேண்டிய வகையில் நாட்டை நடத்தி இப்போதுள்ள நிலையில் எந்த முறையில் பிலாஸபியை புகுத்த முடியுமோ, அந்த வழிகளில் எல்லாம் புகுத்த வழி தேடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். எந்த வழியில் இந்த நாடு சுயராஜ்யம் அடைந்தது என்று கேட்டால் பதில் சொல்ல முடியாத நிலைமை நாட்டில் இருக்கிறது. இந்திய காங்கிரஸ் மகாசபையின் சரித்திரத்தை நான் சொல்லுகிறேன் என்று எண்ணக்கூடாது. இது எல்லோருக்கும் பொதுவான சரித்திரம். ஆகவே சுயராஜ்யம் வாங்கிய சரித்திரத்தை தனி **subject**-ஆக வைக்க வேண்டும். மேலும் காந்தி அவர்களின் சத்திய சோதனையை ஒரு பாடமாக வைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். தனித் தனி பேபர் பரீக்ஷை ஏற்படுத்தவேண்டும். வயது வந்தோர் கல்வியைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். பன்னிரண்டிலிருந்து 17 வயது வரையில் வேண்டுமென்று வைத்திருக்கிறார்கள். அதற்கு மேற்பட்டவர்களுக்கும் வேண்டுமென்று நான் சொல்லுகிறேன். இந்தச் சட்ட சபையில் மதிப்பு வாய்ந்தவர்கள் எல்லாம் மந்திரி மலத்தில் இறங்கிவிட்டார் என்று சொல்லும் அளவுக்கு வந்திருக்கிறார்கள். ஆகவே முதியோர் கல்வி அதிக வயதானவர்களுக்கும் வேண்டும் என்ற எண்ணம் அதிகரிக்கிறது. அது மட்டும் இல்லை. இங்கே பிரமாணம் எடுத்துக்கொண்டு 10 நாளைக்கு முன் என்னைப் பொருத்தவரையில் எனக்கு மத்திய சர்க்கார் கிடையாது என்று ஒருவர் சொன்னார். அவர் குறிப்பாக இந்த சட்ட சபையில் இருப்பது ஒவ்வாது. அவர் மீண்டும் பிரமாணம் எடுத்துக்கொள்ளாமல் இந்த சட்ட சபையில் இருப்பது சரியல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே இத்தகையவர்களுக்கு முதியோர் கல்வி அவசியம் வேண்டும். உதவி பெறும் பாடசாலைகளைப்பற்றி ஒன்று சொல்ல விரும்புகிறேன். பள்ளிகளே இல்லாத காலத்தில் அவர்கள் இப்படிப்பட்ட பள்ளிகளை ஆரம்பித்துக் கல்வி கற்றுக் கொடுத்து வந்தார்கள். இன்று ஏராளமான பள்ளிகள் ஆரம்பித்தும் கூட மக்கள் சம்பளம் கொடுத்து அவர்களிடம் படிப்பதைப் பார்த்தால் இது அந்த உபாத்தியாயர்களின் தரத்தைக் காட்டுகிறது. ஆகவே அவர்கள் விஷயத்தில் திடீரென்று கடின சட்டங்களை ஏற்படுத்தக் கூடாது. அப்படிப்பட்ட பள்ளிக்கூடங்களும் இருந்தால் போட்டி போட்டுக் கொண்டு பாடங்களை நன்றாகச் சொல்லிக் கொடுக்கும் நிலைமை ஏற்படும். எவ்வளவு நன்மையைச் செய்த நமது நிதி அமைச்சர் பொன்னுடை போர்த்தப்படுவதற்குத் தகுதி உடையவர். அவருடன்

26th April 1960] [Sri S. Nagaraja Monigar]

ஒத்துழைக்கும் இந்த இலாகாவினரும் நம் பாராட்டுதலுக்கு உரியவர்கள் இம்மாதிரி இந்த மொழி விஷயத்தில் சிறப்பாக இந்த நாட்டைச் செலுத்தி வரும் அமைச்சர் அவர்களுக்கு எல்லோரும் துணையாக இருக்கவேண்டு மென்று சொல்லி

“ பொழுது புலர்ந்தது ; யாம் செய்த தவத்தால்
புன்மை யிருட் கணம் போயின யாவும் ;
எழு பசும் பொற் சுடர் எங்கணும் பரவி,
எழுந்து விளங்கியது அறிவு எனும் இரவி ;
தொழுதுனை வாழ்த்தி வணங்குதற்கு இங்கு உன்
தொண்டர் பல்லா யிரர் சூழ்ந்து நிற்கின்றோம்
விழிதுயில் கின்றனை இன்னும் என் தாயே,
வியப்பிது காண் ! பள்ளி எழுந்தருளாயே.”

இப்படி வளர்ந்துவர, நாம் கெட்டுவிட்டோம், பின்னடைந்துவிட்டோம், நாம் ஏமாந்துவிட்டோம் என்று கூறிக்கொண்டிராமல் இருட்டில்லாமல் பொழுது விடிந்தது. ஆகவே, எழுந்து வந்து இந்த மானியத்தை எல் லோரும் பாஸ் செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* SRIMATHI A. SUARES : Mr. Deputy Speaker, while supporting the Demand for Rs. 15,79,50,705 under Education, I wish to make a few remarks on the proposed change in the medium of instruction in colleges. In his Budget speech, the Hon. the Minister for Education stated that with effect from 1963–64, the medium of instruction in all colleges for the B.A. Degree course should be Tamil.

Sir, I desire to make a plea on behalf of all the linguistic minorities in the Madras State and these are a good many. In Madras City alone, the census figures for 1951 give the following numbers against each language :—

| | |
|---|---|
| Telugu .. .. .. .. .. | 234,379 |
| Urdu .. .. .. .. .. | 89,505 |
| Malayalam .. .. .. .. .. | 40,401 |
| Hindi .. .. .. .. .. | 23,146 |
| English .. .. .. .. .. | 18,848 |
| Kanarese .. .. .. .. .. | 15,866 |

THE HON. SRI C. SUBRAMANIAM : Will the hon. Lady Member please read paragraph 34 of the White Paper ?

SRIMATHI A. SUARES : Yes, I have seen it. These are the figures of the 1951 census. With the reorganisation of States in 1956, the figures for Telugu, Malayalam and Kanarese will be less, but it was mostly Government servants who moved from the Madras State.. Business people continue to carry on their trade in Madras The position in other big cities in the State will be similar, though to a lesser degree.

The children of these linguistic minorities are probably studying in Anglo-Indian schools or Matriculation schools or in parallel classes in S.S.L.C. schools through the English medium. They have taken Tamil as the second language in most cases. But with the present standard of Tamil, it would be difficult for them to continue their B.A. Degree courses through the medium of Tamil. So, necessary provision, will be required for the children of the linguistic groups for higher education in the Madras State.

[Srimathi A. Suares] [26th April 1960

Sir, the 1951 census figures show that 961,743 people in the Madras City are Tamil-speaking and a total of about 454,000 people are non-Tamil speaking. This works out to 47 per cent of non-Tamils in the Madras City alone. The same may be the position in other cities, I mean large cities in the Madras State, perhaps to a lesser degree.

It has been stated in the First Report of the College Tamil Committee that 'it will be open to private colleges to continue to provide the English medium of instruction in the B.A. Degree course even after this change-over is effected, but no grant will be payable by the State Government in respect of such courses'. The last statement in this quotation is very serious. If private colleges choose to continue the English medium, they will be penalized by being deprived of State Government grants hitherto given. I understand that the State Government now gives grant towards the salaries of lecturers and professors to the extent of two-thirds of the cost plus half the dearness allowance. This is very high proportion of the total expenditure on salaries. To make up this amount, college fees for the B.A. Degree course may have to be doubled. One result of this may be that students will flock to the Mathematics, and Science groups, because the fees for these groups will be lower. Another result may be that some colleges may have to close down certain sections. This will cause great hardship to the linguistic minorities. I am sure the State Government will provide colleges for the non-Tamil speaking students just as they provide colleges for the Tamil-speaking students.

On behalf of the Anglo-Indians who are a linguistic minority recognized in the Constitution, I wish to make a special representation. The mother-tongue of the Anglo-Indian community is English. This is the *de facto* position which has also received the sanction of the highest court in the country. In the Bombay Education Society case decided in 1954, Mr. Chagla, the Chief Justice of the Bombay High Court laid down the dictum that the 'Anglo-Indian community being a racial minority recognized by the Constitution, also possesses a distinct language, which is the English language and possessing a distinct language it has the right to conserve that language'. When this case went to the Supreme Court, the Supreme Court affirmed this dictum in the following terms : 'A minority like the Anglo-Indian community which is based *inter alia* on religion and language has the fundamental right to conserve its language script and culture under article 29 (1) and has the right to establish and administer educational institutions of their choice under article 30 (1)'.

In the Kerala Education Bill reference decided by the Supreme Court in 1958, the Supreme Court further observed, "The Anglo-Indian community is a well-known minority community in India based on religion as well as language and has been recognized as such by this Court". From these observations, it will be seen that it is recognized both in the Constitution and by the Supreme Court that the Anglo-Indians have the right to conserve their mother-tongue, English. In consideration of this fact, higher education through the medium of English may be provided for the Anglo-Indians without having to pay a higher rate of college fees. If the present ruling is not reconsidered, higher rates of fees in private colleges will be inevitable.

26th April 1960] [Srimathi A. Suares]

Sir, the English medium for higher education will be necessary not only for the linguistic minorities in the State, but also for some of the Tamil-speaking students who have decided not to seek employment within the State. We have the All-India services to which each State should contribute its quota, viz., the I.A.S., I.A.A.S., I.F.S., I.R.S., I.P.S., and the Defence Services. For all these services, a high standard of English will be absolutely necessary and this can be maintained only through the medium of English in colleges.

We have a select number of renowned statesmen, scientists and politicians whose fame goes far beyond the frontiers of our own country to all parts of the World. May I say that their ability is greatly due to the English education they have had in India and abroad. Our Prime Minister, Pandit Nehru and our Defence Minister, Sri V. K. Krishna Menon, to quote only two of them, are world figures and we are really proud of them. Are we preparing the younger generation to take their place some day by providing education through a world language? For this purpose, their education will have to be properly planned.

Sir, the change in the medium of instruction in college education is a momentous one. If it is successful, the people will be happy, but if it is not the whole structure of University education will be shaken. From the Progress Report of the College Tamil Committee, one realizes the stupendous task ahead in carrying out this innovation. The selection of students for the pilot scheme at Coimbatore with a generous offer of incentives to join the Tamil-medium course, the selection of staff who are capable and willing to teach through the medium of Tamil, the preparation of text-books by the translation method to begin with and then by writing original books, the preparation of technical terms, etc. This is a long list and it is not an easy task by any means. It is reported that enthusiasm has been shown by authors and publishers. It would be well to find out if the scheme will be received with equal enthusiasm by parents and students. One method of finding this out in the existing colleges would be by holding a 'Gallup Poll' as is done in foreign countries whenever they wished to know the opinion of the people on a certain subject. When Tamil is made the medium of instruction in colleges, one of the main difficulties will be the selection of lecturers and professors who are capable and willing to teach up to the post-graduate courses in Tamil. The new vocabulary required for subjects like Psychology, Astronomy, Physics, Chemistry, Statistics, Calculus, etc., may be almost equibalent to a new language. When enquiries were made recently to select staff for the pilot scheme in Coimbatore, it was stated that some colleges reported that with the exception of the Tamil lecturer, not a single lecturer felt competent to teach through the medium of Tamil.

It is proposed to take steps to raise the standard of English. In the new scheme, English will be relegated to the place of second language and as second language, English will be allotted only a few periods. In the reorganized scheme, the Public Examination is spread over two years and in the three-year degree courses, only two periods are allotted to the second language in the third year. It will not be possible to raise the standard of English within this short period of teaching.

DEPUTY SPEAKER : The hon. Member's time is up.

[26th April 1960

SRIMATHI A. SUARES : While realizing that provision should be made to give higher education through the medium of Tamil, I request the Government to make suitable provision for the large number of people of the linguistic minorities who are residents of this State so that they may pursue higher education through the medium of English as has been done hitherto.

In the White Paper on the medium of instruction in colleges, the following statement is made in the second last paragraph :—

" Where it is necessary to provide for instruction in the English medium for persons who cannot, in fairness, be called upon to receive that instruction in Tamil, such provision will be made and Government aid for making such provision will be given."

This is re-assuring and the linguistic minorities who cannot study through Tamil need not fear. I thank the Hon. Minister for this reassurance.

SRI V. SUBBIAH : உதவி சபாநாயகர் அவர்களே, இந்தக் கல்வி மானியக் கோரிக்கை மீது கொடுக்கப்பட்டிருக்கும் வெட்டுப்பிரேரணையின் பேரில் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இன்று கலாசாலைகளில், அல்லது பட்டப் படிப்பில், அல்லது தொழில் கல்வியில், இன்றைய தினம் எவ்வளவு திறமைக் குறைவு இருக்கிறது என்பதற்கு இன்று ஆதாரக் கல்வி, கிராமாந்திரங்களிலுள்ள எலிமெண்டரி எடுகேஷன் 1-வதிலிருந்து 5-வது வகுப்பு வரை இருக்கும் படிப்பின் நிலை என்ன என்று பார்த்தால் மிக மிக வருந்தத்தக்க நிலையில் தான் அதன் தரம் குறைந்திருக்கிறது. கிராமப் பகுதிகளில் இன்று கல்வியின் தரம் மிக மிகத் தரக் குறைவாக, மோசமான நிலையில்தான் இருக்கிறது. அது அரசாங்கத்தின் கல்விக் கொள்கையால்தான் ஏற்படுகிறது. ஒரு ஆசிரியர் எவ்வளவு குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்கிறார் என்பதைப் பார்த்தால், அவர்களின் நிலை பரிதாபகரமாகத்தான் இருக்கிறது. திருநெல்வேலி ஜில்லாவில் பல ஆசிரியர்கள் இன்று வேலையின்றி திண்டாடிக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலை எப்படி வந்தது என்று பார்த்தால், இன்று அரசாங்கம் அனுசரிக்கக் கூடிய கொள்கையின் விளைவாகத்தான் அந்நிலை ஏற்பட்டிருக்கிறது என்றுதான் சொல்ல முடியும். நாலு, ஐந்து வகுப்புகளில் உள்ள மாணவர்களின் நிலை பரிதாபகரமாயிருக்கிறது. முன் காலத்தில் திண்ணைப் பள்ளிகளில் அல்லது குருகுலங்களில் சொல்லி கொடுக்கப்பட்டு வந்தது போல், குழந்தைகளுக்கு கொடுக்கப்பட்டு வந்த அறிவைப் போல், கணிதமானாலும் சரி, அல்லது பொது அறிவானாலும் சரி, அன்று இருந்த அறிவு இன்றுள்ள மாணவர்களுக்கு இல்லை. அந்தத் தேர்ச்சி இன்று இல்லை. ஆதாரப் பள்ளிகளில் உள்ள மாணவர்களின் தரம் மிக மிகக் குறைவாகத்தான் இருக்கிறது என்று சொன்னால் அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. என் அனுபவத்தில், நான் கண்டறிந்த உண்மையைச் சொல்லுகிறேன். ஓராசிரியர்கள் பள்ளிகளை ஏற்படுத்தியிருக்கிறீர்கள். அதன் தரமும் மிகக் குறைவாகத்தான் இருக்கிறது. இன்று கிராமப் பகுதிகளில் 300-லிருந்து 500 வரை ஜனத் தொகை உள்ள இடங்களில் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப்படுகிறது என்று பெருமையாகச் சொல்லப்படுகிறது. பின்னர், 7 பள்ளிகளில் இலவச மத்திய உணவு அளிக்கிறோம் என்றும் பெருமையாகச் சொல்லுகிறார்கள். இன்று கிராமங்களில் உள்ள குழந்தைகள் எந்த மனப்பான்மையில் வளர்க்கப்படுகிறார்கள் என்று பார்த்தால் இது வருத்தப்பட வேண்டியதொன்றாகும். மாணவர்களிடம் கல்வித் திறமை இல்லாவிட்டாலும் கூட ஒழுக்கக் குறைவு இருக்கிறதே அதைச் சகித்துக்கொள்ள முடியாது. இன்று ஒன்றிலிருந்து ஐந்து வகுப்பு வரை இருக்கும் ஆதாரப் பள்ளிகளில் ரொம்ப ஒழுக்கக் குறைவு இருக்கிறது என்பதை யாவரும் காண முடியும். இந்த அளவில் நாம் போய்க்கொண்டிருந்தால், சிறிய வயதிலிருந்தே ஒழுக்கமாக இல்லாதிருந்தால், மேலே கலாசாலை அல்லது தொழில் கல்வி போன்றவைகளுக்கு அவர்கள் போகும்போது அவர்களுக்கு அப்பொழுது

எப்படி ஒழுக்கம் ஏற்படும். ஆக, பவுன்டேஷனே பலமற்றதாக இருக்கிறது. இதை முதலில் சீர்திருத்த வேண்டும். கிராமங்களில் உள்ள குழந்தைகள், விவசாயப் பண்பாடு வளரக் கூடிய முறையில், அவர்கள் ஒழுக்கம் உள்ளவர்களாக இருக்கும் முறையில் அவர்களுக்கு கல்வி புகட்டப்பட வேண்டும். மிஷினரிகள் நடத்தும் பள்ளிகள் நல்லபடியாக நடக்கிறது. அங்கு ஒழுக்கம் இருக்கிறது. நன்றாகக் கல்வியும் போதிக்கப்படுகிறது என்று சொன்னால் அது மிகையாகாது. அவர்களை நாம் பாராட்டித்தான் ஆகவேண்டும். அந்த அளவிற்கு ஸ்தல ஸ்தாபன பள்ளிக்கூடங்களோ அல்லது தனிப்பட்ட மானேஜ்மெண்டார் நடத்தும் பள்ளிக்கூடங்களோ இல்லை என்றுதான் கூற வேண்டும். ஆகவே, அரசாங்கம் இதில் கண்காணிப்போடு இருக்க வேண்டும். இந்த நாட்டில் உயர்நிலைக்கு ஆதாரமாக இருக்கக் கூடிய கிராமப் பள்ளிக்கூடங்கள் நல்லநிலையில் இருக்க வேண்டும், நல்ல விதத்தில் குழந்தைகள் ஒழுக்கமாக இருக்கும் விதத்திலும் கல்வி போதிக்கப்பட வேண்டும். பள்ளிக்கூட கட்டிடங்கள் இல்லாமல் இருக்கலாம், அது பெரிதல்ல. பாடசாலைகளுக்கு வேண்டிய உபகரணங்கள் இல்லாமல் இருக்கலாம், அதுவும் பெரிதல்ல, அவைகளைப் பற்றிக் குறை சொல்லவில்லை. பள்ளிக்கூட ஆசிரியர்கள் ஒழுக்கம் உள்ளவர்களாகவும், கிராமத்திற்குத் தகுந்தவர்களாகவும் இருக்க வேண்டும். மாணவர்களைத் திறமையுள்ளவர்களாகவும், ஒழுக்கம் உள்ளவர்களாகவும் ஆக்க வேண்டும். படித்தவர்கள் இந்த நாட்டில் விவசாயம் நடத்த முடியாது. படித்தவன் என்றால் தனிப்பட்டு எங்கேயோ வாழ்கிறான். அவன் சமுதாயத்தில் சம்பந்தப்பட்டவனல்ல, அவன் கிராமத்தில் வாழ்க்கை நடத்த பொருத்தமுடையவன் அல்ல என்றதொரு நிலையை நாட்டில் உண்டுபண்ணியிருப்பது வருத்தப்படவேண்டிய ஒன்றாகும். அந்நிலை, அந்த விதமான மனப்பான்மை வளர்வதால்தான் இன்று கிராமங்களே அழிந்துபோகும் நிலைக்கு வந்துள்ளது. கிராமங்களை விட்டு நகரத்திற்கு வந்துவிடுகிறார்கள் அநேகர். ஆகவே, கிராமங்களில் இருந்து மக்கள் நகரங்களைத் தேடிப் போகும் அளவிற்கு அடித்தளத்தில் உள்ள எலிமென்டரி எஜுகேஷனை, அதன் தரத்தை உயர்த்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். வள்ளுவன் கூறியது போல், "ஒழுக்கம் விழுப்பம் தரவான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" என்பதற்கிணங்க ஒழுக்கத்தை மாணவர்களிடையே வளர்க்கவேண்டும். இந்த நாட்டின் எதிர்கால பிரஜைகளாக வரயிருக்கிற குழந்தைகளுக்கு நல்ல விதத்தில் அவர்கள் ஒழுக்கம் உள்ளவர்களாக விளங்கும் விதத்தில் கல்வித் திட்டத்தை அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri. K. R. VISWANATHAN :** தலைவர் அவர்களே, இந்தக் கல்விமானியக் கோரிக்கையை ஆதரித்து நான் சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். கல்வி மானியத்திற்காக நாம் நமது வருவாயில் நல்லதொரு தொகையை மொத்த வருவாயில் 18·6-ஐ கல்வி மான்யத்திற்காகச் செலவிடுகிறோம். அப்படிச் செலவழிக்கப்படுவதில் ஆரம்பக் கல்விக்காக அதில் பாதிப் பணம் செலவிடப்படுகிறது. ஆரம்பக் கல்வியை நம் நாட்டில் மூலை முடுக்குகளில் எல்லாம் பரவவைக்க வேண்டுமென்பது நமது கல்வி இலாகாவின் நோக்கமாகயிருக்கிறது. அப்படி அதை மூலை முடுக்குகளில் எல்லாம் பரவ வைக்கும்போது நமது அரசியல் அமைப்புச் சட்டத்திலுள்ளபடி கட்டாயக் கல்வியையும் பரவ வைக்கவேண்டுமென்ற நோக்கம் நெடுநாட்களாக இருந்தாலும், 1960-61 ஆண்டில்தான் முதலாவதாக கட்டாயக் கல்வியை அமுலில் கொண்டுவர வேண்டுமென்றுள்ள திட்டத்தைக் கொண்டுவந்திருக்கிறோம். அப்படிக் கொண்டுவந்திருக்கும் திட்டமானது நமது மாநிலத்தில் பஞ்சாயத்துச் சீரமைப்புத் திட்டம், பஞ்சாயத்து யூனியன்கள், ஆங்காங்கு அமைக்கப்பட்டு அவைகள் அமுலுக்கு வருகிறபோது இந்த ஆண்டில் இதையும் சேர்த்து தொடங்கப்படுவது வரவேற்பதற்குரியதாகும்.

மாவட்டங்கள் இருந்த காலத்தில் நல்ல முறையில் பள்ளிகளை எல்லாம் 12-30
ஜில்லா போர்டால் சமாளிக்க முடியாத நிலை இருந்து வந்தது. p.m.
கணக்கற்ற ஆசிரியர்களைப் பராமரிக்க முடியாத நிலை இருந்து வந்தது.

இதன் காரணமாக துவக்கப் பள்ளிகளின் நிலை மிக மோசமாக இருந்து வந்தது. ஆனால், இன்றைக்கு பஞ்சாயத்து யூனியன்கள் கீழ் இந்தத் துவக்கப்பள்ளிகள் வருவதால் இனிமேல் நல்ல முறையில் நடைபெறுவதற்கு வழி ஏற்படும். இந்த நிலையில் பள்ளிகளை கண்காணிக்கின்றவர்களுக்கும் (டெபுடி இன்ஸ்பெக்டர்) அவர்களது எல்லைகளை, வட்டார வளர்ச்சி எல்லைகளோடு ஒன்றாகக் கொடுக்கப்படுமானால், அவர்கள் திறமையாகப் பள்ளிகளை எல்லாம் கண்காணிப்பதற்கு மிகவும் வசதியாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்த நிலையில் சர்க்கார் உத்திரவின் பிரகாரம் சம்பளம் வசூலிக்காத பள்ளிகள், சம்பளம் வசூலிக்கும் பள்ளிகள் என துவக்கப் பள்ளிகளை பிரித்து சர்க்கார் மானியங்களை வழங்கி வருகிறார்கள். அதோடு சம்பளம் வசூலிக்காத பள்ளிகளுக்கு நிர்வாகச் செலவுகளுக்காக (மெயின்டினன்ஸ் கிராண்ட்) என்று 15 சத விகிதம் முன்னால் கொடுக்கப்பட்டிருந்தது, இப்பொழுது இதை 20 சத விகிதம் என்று கொடுக்கலாம் என்று மாற்றி அமைத்திருக்கிறார்கள். ஆனால் இந்தத் தொகை இதுவரை சம்பளம் வசூலித்துக்கொண்டிருக்கும் பள்ளிகளுக்கு மட்டும் என்று தெரிகிறது. அதோடு சம்பளம் வசூலிக்காத பள்ளிகளுக்குக் கொடுக்கப்பட்டுவந்த நிர்வாக செலவானது, எந்த விதமான நிபந்தனைகளுக்கும் உட்படுத்தாமல் கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது அதில் அனுமதிக்கக்கூடிய செலவு என்றும், அனுமதிக்கக் கூடாத செலவு என்றும் செலவு முறைகளைப் பிரித்துக் காட்டப்பட்டிருக்கிறது. எந்தெந்தக் காரியங்களுக்கு எல்லாம் செலவு செய்துகொள்வது அனுமதிக்கக் கூடியது, எந்தெந்தச் செலவுகள் அனுமதிக்கக் கூடாதவை என்றெல்லாம் நிர்வாகச் செலவை குறைத்துக்கொள்ளும்படியான ஒரு முறையைக் கொண்டுவந்திருக்கிறார்கள். அவ்விதம் அனுமதிக்கப்பட்ட தலைப்புகளில் மட்டும் செலவு செய்யவில்லை என்றால், ஒரு பகுதி திருப்பிக் கட்ட வேண்டும். இந்த முறையில் 1959-60-ல் கல்வி இலாகாவினர் ஒரு உத்திரவு கொண்டுவந்திருக்கிறார்கள். இதன் காரணமாக சம்பளம் வசூலிக்காத பள்ளிகளும் சில நிபந்தனைகளுக்கு உட்பட வேண்டியிருக்கிறது. ஆகவே இந்த 15 சத விகித நிர்வாகச் செலவை எந்த விதமான நிபந்தனையும் இல்லாமல் கொடுத்துவர வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, பள்ளி சீரமைப்புத் திட்டத்தைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த நடவடிக்கைகளினால் பள்ளிக்கூடங்களில், மேஜை இல்லாத குறை, நாற்காலிகள் இல்லாத குறை, மைப் புட்டிகள் இல்லாத குறை இவையெல்லாம் ஓரளவு தவிர்க்கப்பட்டிருக்கின்றன. அது மட்டுமல்ல, பல இடங்களில் பள்ளிக்கூடங்கள் கட்டித் தரப்பட்டிருக்கின்றன. சுமார் ஐந்து கோடி ரூபாய் வரி மூலமாக வசூல் செய்தால்தான் இதுவரை செய்திருக்கக்கூடிய சீர்திருத்தங்களை எல்லாம் செய்ய முடியும். இவ்விதம் இல்லையென்றால் இந்த ஐந்து கோடி ரூபாயையும் பொது மக்களிடத்திலிருந்துதான் வரியாக வசூல் செய்ய வேண்டும். அந்த விதமான கட்டாயம் ஒன்றுமில்லாமல், பொது மக்களின் மனமுவந்த நன்கொடையின் மூலம் இந்தக் காரியத்தைச் செய்துவருவதற்காக நாம் கல்வி இலாகாவினரைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

அடுத்தபடியாக, இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால், சர்க்காரில் இருந்து அனாதை இல்லங்களை நடத்துவதைப் பற்றி ஒரு விதி கொண்டுவந்தார்கள். அதாவது அனாதை இல்லங்களை நடத்துவதில் சட்டசபை உறுப்பினர்களோ அல்லது பார்லிமென்ட் உறுப்பினர்களோ, செயலாளராகவோ, அல்லது பொருளாளராகவோ இருக்கக் கூடாது என்று ஒரு விதியைக் கொண்டு வந்தார்கள். இது எவ்வளவு கேடு பயக்கின்றது என்பதை நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அனாதை இல்லம் என்பது லாபத்திற்காக நடத்தப்படுவது இல்லை. ஏழைக் குழந்தைகளைக் காப்பாற்றுவதற்கு ஏற்படுத்தப்பட்டிருப்பது. முன்பு இவைகளில் சில சில சட்டசபை உறுப்பினர்களால் நடத்தப்பட்டு வந்தது. இவற்றின் வளர்ச்சியில் ஈடுபாடுள்ள சிலர் சட்டசபை உறுப்பினர்களாக இருந்துவருகிறார்கள். தமது பதவியைப் பயன்படுத்திக்கொண்டு அதிகாரிகளை அச்சுறுத்தி

26th April 1960] [Sri K. R. Viswanathan]

வேண்டிய காரியங்களைச் சாதித்துக்கொள்வார்கள் சட்டசபை உறுப்பினர்கள் என்று சர்க்கார் கருதுவார்களானால், உண்மையிலேயே சட்டசபை உறுப்பினர்கள் மீது இந்த சர்க்கார் கெட்ட எண்ணத்தை, சந்தேகத்தை வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதைத்தான் நான் வலியுறுத்திக் கூற ஆசைப்படுகிறேன். இதனால் அதிகமான அளவில் அரசாங்க மானியங்கள் வருவதாக இருந்தால் உறுப்பினர்களை ஒரு வேளை ஐயங்கொள்ள காரணம் இருக்கலாம். ஆனால் இப்படிப்பட்ட அனாதை இல்லங்களுக்கு மாதம் ஒன்றுக்கு ஒரு மாணவருக்கு 10 ரூபாய் வீதம் கொடுக்கிறார்கள். மேலும் 15 ரூபாய் இருந்தால்தான் அதிலிருக்கின்ற மாணவர்களுக்கு இலவச உணவு, இலவச உடை, இலவச இருப்பிடம் முதலியவை கொடுக்க முடியும். இந்தப் பதினைந்து ரூபாய்க்குப் பொது மக்களிடத்திலிருந்து பிச்சை எடுத்தோ, அல்லது வேறு ஏதாவது வழிகள் மூலம் வசூல் செய்தோ தான் இந்த அனாதை இல்லங்களை நடத்தவேண்டும். இவைகளை எல்லாம் நாம் கவனித்துப் பார்ப்போமானால், சட்டசபை உறுப்பினர்கள் தங்களுடைய செல்வாக்கைப் பயன்படுத்தி, தங்களுடைய அறிவாற்றலை பயன்படுத்தி, இம்மாதிரியான காரியங்களுக்காகப் பொதுத் தொண்டில் ஈடுபட்டு, வேலை செய்கிறார்கள் என்பதை அரசாங்கத்தார் உணருவார்களானால், இந்தத் தடையை விதித்திருக்க மாட்டார்கள் என்று கருதுகிறேன். உண்மையிலேயே சட்டசபை அங்கத்தினர்கள் இதில் இருந்தால் தான் நல்ல முறையில் இவைகளைப் பார்த்துக்கொள்ள முடியும். அதல்லாமல் வேறு ஏதாவது துர்வினியோகம் நடைபெறுவதாக இருந்தால் அதை அரசாங்கத்தார் கவனித்துக்கொள்வதற்கும் எவ்வளவோ வழிகள் இருக்கின்றன. ஆகவே, அரசாங்கத்தார் இந்தத் தடையை மாற்றி அமைத்துத் தரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஆதாரக் கல்வியைப் பொறுத்தவரை, நமது நாட்டில் மிக விரைவாகவும், விரிவாகவும், இந்த ஆதாரக் கல்வி பரவவேண்டும் என்ற அடிப்படையான கொள்கை சர்க்காரிடத்தில் இருந்து வருகிறது. அதற்காக எடுத்துக்கொண்டிருக்கிற முயற்சிகளைப் பார்த்தால், இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் 1,500 துவக்கப்பள்ளிகளை ஆதாரக் கல்விப் பள்ளிகளாக மாற்றி அமைக்க வேண்டும் என்று திட்டமிடப்பட்டிருந்தது. ஆனால், 2,100 ஆதார பள்ளி அமைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாகவும், அதில் ஏற்கனவே, 1,700 பூர்த்தி அடைந்துவிட்டதாகவும், இன்னும் 400 தான் பாக்கி இருப்பதாகவும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டு (1960-61-ல்) 2,000 ஆசிரியர்களுக்கு ஆதாரக் கல்விப் பயிற்சி மறுமுறை கொடுப்பதாகவும் தெரிகிறது. இத்தனை இருந்தும் கூட, ஆதாரக் கல்வி பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் வேலை செய்வதற்கு போதிய ஆதாரக் கல்வி பள்ளிகள் இல்லாமல் இருக்கின்றன. இதற்கு ஏன் நடவடிக்கை எடுக்கப்படவில்லை என்று தெரியவில்லை. இதில் முக்கியமாக இருக்கின்ற காரணங்கள் என்னவென்றால், ஆதாரப் பயிற்சி பள்ளிக்கூடங்களின் அன்மையில் உள்ள பேசிக் பெல்டிலுள்ள பள்ளிகள் மட்டும்தான் ஆதார பள்ளிகளாக மாற்றப்படவேண்டும் என்ற விதியே. அப்படியின்றி பயிற்சிப் பள்ளிகள் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி எல்லா மாவட்டங்களிலும், எல்லா தாலுக்காக்களிலும் பேஸிக் பெல்ட் ஒன்று இருக்க வேண்டும். இந்த முறையில் ஒவ்வொரு தாலுகாவிலும் சில பள்ளிகளை ஆதாரக் கல்வி பள்ளிகளாக மாற்றவேண்டும் என்று திட்டமிருக்குமானால், ஆதாரக் கல்வி பயிற்சி பெற்றிருக்கும் ஆசிரியர்களை எல்லாம் ஆதாரக் கல்விப் பள்ளிகளில் அமர்த்த முடியும். இல்லை யென்றால் இப்போது இருப்பது போன்ற அவர்கள் ஆதாரக் கல்விப்பயிற்சி பெற்றிருந்தாலும் மற்ற பள்ளிகளில்தான் நியமிக்கப்பட வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஆகவே ஒவ்வொரு தாலுகாவிலும் ஆதாரக் கல்வி எல்லை **(Basic Belt)** ஏற்படுத்தினால், இவர்களை இதற்கு நியமிப்பது வசதியாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு ஏற்கனவே பயிற்சிப் பள்ளிகளாக இருக்கும் பள்ளிகளை ஆதாரப்பயிற்சிப் பள்ளிகளாக மாற்றக் கூடாது என்றும் அரசாங்கம் இந்த ஆண்டு ஒரு திட்டம் வகுத்திருப்பதாகத் தெரிகிறது. இந்தத் திட்டத்தை மாற்றி அமைத்து, மிக விரைவாக ஆதாரக் கல்வியை அதிகமாகப் பரப்ப வழி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

[26th April 1960

* SRI T. T. DANIEL: Mr. Deputy speaker, Sir, while supporting this Demand I would like to point out some facts. So far as the work that is turned out in the Scientific Research Laboratories are concerned, it is generally talked about that the results are not quite satisfactory. This may perhaps be due to the fact that the scale of pay given to the people working there is not very attractive to attract real worthy talents to accept the job and continue the work there. Further, for scientific research equipments are also very necessary. We may say that desired results are produced in foreign countries. But when we say that we must also take into consideration the fact that all facilities are afforded to the students there and for people working in those laboratories, I would also say that instead of having one unit in a particular field on the research side, there may be several units working in a particular field so that the units working in different lines might compare their notes and results. If there is only one unit in a particular direction, I am afraid they will be working only in that particular direction and they may not get the desired results.

THE HON. SRI C. SUBRAMANIAM: That is a Central subject. The hon. Member need only touch it and proceed further.

* SRI T. T. DANIEL: I would also say that we should increase the number of technicians in our State. We should keep this in our mind in drawing up the Third Five-Year Plan. We must increase the number of technical colleges in our State. In order to increase the standard of the technicians, I think it is also desirable to increase the standard of 'Mathematics' especially in the secondary school stage so that when the students go to the college they may have really some proficiency in that subject.

I would like to point out to our Hon. Minister that so far as our State is concerned, we find there are several posts unfilled in the Public Works Department. It is perhaps due to the fact that we do not have sufficient technically qualified people. Perhaps I would say, even here it is not dearth of qualified hands but the scale of pay that we give to our engineers which is not very encouraging. That is why our Engineering students finding they have better avenues in other private enterprises, accept Government job for some time and then resign and go and accept other jobs in private agencies. Unless and until we revise the scale of pay of our engineers, I do not think we will be able to get at any time enough number of technically qualified men for appointment in our State.

Sir, I think we should compile a history of the southern districts with the records that are available with us so that it will really form a very good background for the education of our students.

So far as the medium of instruction is concerned, the Hon. Minister has said that Regional Language will be the medium of instruction and it will be done on an All-India basis. We do not know whether other States have also evolved a similar formula and whether they are also introducing the regional language as the medium of Instruction in Arts Colleges.

I would like also to say that the amount allotted in the Budget for Education is not sufficient. We will have to increase the amount under this head. Then only I think we will be able to eradicate illiteracy in our State. Although it has been stated in our Constitution that there must be free and compulsory education up to the

26th April 1960] [Sri T. T. Daniel]

age of 14, I will state that there should be compulsory education throughout the State at least for children of the age group of 6 to 11. I think it is now the policy of the Government to introduce compulsory free education for about one-third of population of the age group of 6 to 11.

So far as the mid-day meal programme is concerned, we must really congratulate the Education Department as well as the munificent public who are carrying on this noble work. Out of the 23,000 elementary schools in the State, in nearly 22,000 of them we have introduced this noon-meal scheme. We have yet to introduce this programme only in about a thousand elementary schools. It is also gratifying to note that in nearly 500 secondary schools the noon-meal programme has been introduced. I wish this programme is introduced in all the secondary schools also. For that purpose, there must be what I might say a district fund collected with the help of the public and also if necessary the Government should collect about Rs. 2 per pupil studying in secondary schools for this noble cause. I do not think parents will grudge paying this small sum of Rs. 2 however poor they may be. In regard to distribution of milk, I would suggest that the philanthropic institutions which supply milk might be asked to allot some substantial quantity of the milk powder for the mid-day meal programme for secondary schools also.

Sir, in regard to the scale of pay of teachers in the transferred territory, as was said by the hon. Member Sri T. S. Ramaswamy the pay of the graduate trained teacher is only Rs. 55 working in private agencies there, whereas teachers working in other private agencies are getting Rs. 85. This morning the Hon. Minister clearly stated that only Government money was being paid to the teachers whatever might be the agency under which they may be working. I would only submit that we have to approach the problem with sympathetic consideration and feelings of justice and good conscience. This problem has been there for a very long time and any further delay in dealing with it, I am pained to say, would only enhance the resentment in the minds of the teachers in that district. I am quite sure that the Hon. Minister will take note of this. It is almost in a ripe stage, everything has been thrashed out and agreed and Government have only to state its mind and give the final touch to the solution of the problem. Again, so far as the secondary school one-year trained teachers are concerned, they have another difficulty. By the recent orders of the Government they have all been integrated with the third-form trained teachers. This matter also was brought to the notice of the Government and I would request the Government to consider this question and treat them as equivalent to secondary grade teachers. The teachers should get benefits of provident fund, insurance and pension scheme and all benefit of N.G.Os.

In the matter of abolishing the shift system now in force in the transferred territory, the Government said that it is under their active consideration. We wish that the order abolishing the shift system of education in that area should be passed before the schools re-open.

I would also say that the buildings in many primary schools in the transferred territory are in a hopeless condition. For instance, the Government Primary School at Kolachal is in a very dilapidated condition and the headmaster sometimes asks the pupils to go home whenever there is rain because he himself fears that at any time the

walls would collapse and fall on the children. Generally the school buildings are in a very bad condition and therefore the Hon. the Education Minister and the department sholud see that good buidings are erected.

* Sri K. ANBAZHAGAN : மதிப்பிற்குரிய சட்டமன்றத் தலைவர் அவர்களே, கல்வி மானியத்திற்காக ரூபாய் 15 கோடி அளவுக்குத் தொகை ஒதுக்குகின்ற நேரத்தில், அதைக் குறைக்க வேண்டுமென்று வெட்டுத் தீர்மானம் கொடுத்திருப்பது அதிலே குறை இருக்கிறது என்பதை காட்டுவதற்காகவே தவிர, அந்தத் தொகை அளிக்கப் படக்கூடாது என்ற நோக்கத்திற்காக அல்ல. உண்மையிலே ஆரம்பக் கல்வியை ஒட்டியும், நடுத்தரக் கல்வியை ஒட்டியும் பல புதிய முறைகளும் சீர்திருத்தக் கருத்துக்களும் வந்துள்ள சமயத்தில், அடிப்படை கொள்கையிலே இருக்கிற மாறுபாட்டைவிட, அதை நிர்வாகம் செய்கிற முறையில் உள்ள குறைகள், அதனால் ஏற்படும் மாறுபாடுகள் மிகுந்து இருக்கின்றன என்பதை நான் முதற்கண் எடுத்துக் கூற விரும்புகிறேன்.

பகல் உணவு திட்டத்தை நிறைவேற்றக் கூடாது என்றோ அல்லது நிறைவேற்றுவது தவறு என்றோ எந்த எதிர்க்கட்சியும், பண்புள்ள தனி மனிதனும்கூட கூறமாட்டார்கள். அதேபோல பள்ளிச் சீரமைப்பு உதவாது, பள்ளிச் சீரமைப்புத் திட்டத்தை நிறைவேற்றக் கூடாது என்ற கருத்தை யாரும் தெரிவிக்க மாட்டார்கள். சென்ற ஆண்டில் நான் பேசுகின்ற நேரத்தில் இந்தத் திட்டத்தின் நோக்கத்தை வரவேற்றாலும், இந்தத் திட்டம் நிறைவேற்றப்படுகின்ற முறையில் ஏற்படுகின்ற குறைகளை நான் எடுத்துச் சொன்னேன். அப்படி எடுத்துச் சொன்ன நேரத்தில் அமைச்சர் அவர்கள் குறை அவ்வளவாக இல்லை என்று மறுத்துச் சொன்னார்கள். குறையில்லாமல் நிறைவேற்ற முயற்சிப்பேன் என்று சொன்னார்கள். அதற்குப் பின்னர் ஒரு குழுவை நியமித்தார்கள், விசாரித்து, உண்மையை வெளிப்படுத்த. அந்தக் குழுவின் முடிவு இனி தான் கிடைக்கும் என்ற நிலை இருக்கிறது. இந்தக் குழு உண்மையைக் கண்டுபிடித்து தெரிவிக்கும் என்று நான் எதிர்பார்க்கிறேன். ஆனால் இந்தப் பள்ளிச் சீரமைப்புத் திட்டமும், அதே போல் மத்திய உணவுத் திட்டமும் ஆரம்ப ஆசிரியர்களையும், ஆசிரியர்களாக கல்வித் துறையில் இருப்பவர்களையும் அல்லலுக்கு ஆளாக்குகிறது என்பதை நான் வருத்தத்தோடும், கண்டனத்தோடும் மறுபடியும் தெரிவித்துக்கொள்கிறேன். அமைச்சர் அவர்கள் விழாக் கொண்டாடும் நேரத்தில் அங்கே வந்து கூடியிருப்பவர்களின் உற்சாகத்தைப் பார்த்து இவையெல்லாம் செம்மையாக நிறைவேற்றப்படுகிறது என்று கருதிக்கொண்டிருக்கிறார்கள். விழா இல்லாத நேரத்தில் எங்களைப் போன்றவர்கள் சென்று பார்த்தால் விழா கொண்டாடும்பொழுது அமைச்சர் அவர்களோடு கல்யாண வீட்டில் உள்ளவர் போல் இருந்தவர்கள் எங்களைப் பார்க்கிறபொழுது எழவு வீட்டில் உள்ளவர் போல் வருந்தி இருக்கிறார்கள். அந்த வேதனையை அமைச்சர் அவர்கள் உணர முடியாது. நாங்கள்தான் அதை உணர முடியும்.

ஆரம்ப ஆசிரியர்கள் மட்டுமல்ல. ஆசிரியப் பெண்மணிகள் வகுலுக்கு அனுப்பப்படும் நேரத்தில் நல்லவர்கள் வீட்டில் மட்டும் நுழைந்து வெளி வர முடியாது. மற்றவர்கள் வீட்டிலும் நுழைந்து நன்கொடை கேட்க வேண்டியிருக்கிறது. அவர்கள் இந்த நிலை ஏற்படுவதற்கு ஓர் கண்டனம் தெரிவிக்கிறார்கள். எனவே, அமைச்சர் அவர்களை வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன், கல்வி இலாகா தலைவருக்கு இதனால் புகழ் கிடைக்க வழி இருக்கிற காரணத்தினால், சுற்றறிக்கைக்கு மேல் சுற்றறிக்கை அனுப்ப முடியும். அவர்கள் ஆசிரியர்களைக் கண்டித்து இவற்றை நிறைவேற்றும்படிக் கேட்க முடியும். ஆனால், அமைச்சர் அவர்கள் அப்படிப் பட்ட புகழைத் தேட வேண்டியவர்கள் அல்ல. எனவே, பொறுமையோடு சிந்தித்துப் பார்த்து, இன்றையதினம் ஒன்று ஆரம்ப ஆசிரியர்களை இதில் ஈடுபடுத்துவதை நிறுத்தி, மற்றவர்களை ஈடுபடுத்துவதன் மூலம் இந்தக் காரியங்களைச் செய்யப்படட்டும். ஆரம்ப ஆசிரியர்களை ஈடுபடுத்தித்தான் இந்தச் செயலைச் செய்ய வேண்டுமென்று கருதினால், நண்பர் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் எடுத்துச் சொன்னது போன்று ஏற்படுகின்ற

26th April 1960] [Sri K. Anbazhagan]

குறைபாடுகள் ஏற்படாமல் இருக்க வேண்டுமானால், கல்வித் துறை அதிகாரிகள் தயவு செய்து இதில் தலையிடாமல் இருக்கட்டும். ஆரம்ப ஆசிரியர்கள் தங்களால் இயன்ற அளவுக்குச் செய்வார்கள். மாறாக, ஆரம்ப ஆசிரியர்கள் தலைமை ஆசிரியர்கள், டெபுடி இன்ஸ்பெக்டர் ஆப் ஸ்கூல்ஸ், டிவிஷனல் இன்ஸ்பெக்டர், மேலே டி.பி.ஐ., ஆகிய இத்தனை பேர்களுக்கும் இடையிலே இருக்கும் அதிகாரத் தொடர்பு மூலம் இந்தக் காரியங்கள் நடக்க வேண்டுமென்றால், அதிகார வர்க்கம் ஆரம்ப ஆசிரியர்களின் தோளிலே ஏறி உட்காருகிறது. இது மிகமிக வருந்தத்தக்கது. இந்த நிலையை மாற்றுவதற்கு இரண்டிலே ஒரு வழியை அமைச்சர் அவர்கள் மனமார ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஒன்று ஆரம்ப ஆசிரியர்கள் மக்களைச் சந்தித்து இந்தக் காரியங்களை நடத்த வேண்டும் என்றால், அமைச்சர் அவர்கள் சார்ந்திருக்கிற கட்சி எம். எல்.ஏ.-க்களோ அல்லது வேறு கட்சி எம்.எல்.ஏ.-க்களோ, அல்லது பஞ்சாயத்து உறுப்பினர்களோ உடன் இருந்து செய்யட்டும். தயவு செய்து இதை நிறைவேற்றும் பொறுப்பை அதிகாரிகளிடம் ஒப்படைக்க வேண்டாம். கல்வி இலாக்காத் தலைவர் இதில் அக்கறை எடுத்துக்கொண்டதால் பெருமை பெருவதற்காக ஆரம்ப ஆசிரியர்களை வதைக்க வேண்டாம். உண்மையாகவே ஒன்று அதிகாரத்தில் உள்ளவர்கள் இதில் தலையிடக் கூடாது. அல்லது ஆரம்ப ஆசிரியர்களுக்கு இதனால் தொல்லை கொடுக்காமல், அதிகாரத்தில் உள்ளவர்கள் பொதுநலத் தொண்டர்களாக இருப்பவர்களை இணைத்து செயல்படுத்தட்டும் என்று வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

அது மாத்திரமல்ல, 6 புதுக் காசுதான் ஒரு சிறுவனின் ஒரு வேளை உணவுக்காக வழங்கப்படுகிறது. அதைக் கொண்டு உணவு அளிப்பதற்குத் திண்டாடுகிறார்கள். நன்கொடை வசூலிக்கிறார்கள். அது போதுமானதாக இல்லை. நான் இந்தத் திட்டத்தை ஆதரிக்கின்ற காரணத்தினால் தான் சொல்லுகிறேன், ஒவ்வொரு பள்ளிக்கும் ஒரு கிராமத்தில் 3, 4 ஏக்கர் நிலத்தை ஒதுக்கித் தந்து, 3, 4 ஏக்கரில் கிடைக்கும் விளைச்சலை வைத்துக்கொண்டு இந்தப் பகல் உணவு திட்டத்தை நிறைவேற்றுவது நல்லது. உச்ச வரம்பு திட்டம் வருகிறது. மிச்சத்திற்கு வரம்பு கட்ட முடியுமோ என்னவோ, ஆனால் கிடைக்கின்ற நிலத்தில் ஒரு சிறு பகுதியை ஒவ்வொரு பள்ளிக்கும், 3, 4 ஏக்கர் அளவிற்கு ஒதுக்கினால் இந்தத் திட்டம் எளிதாக நிறைவேறும். இல்லையானால் பணக்காரர்கள், மிராசுதார்கள் தயவை எதிர்பார்க்க வேண்டிய நிலை நேரிடுகிறது. "பிச்சை புகினும் கற்கை நன்றே" என்று இளைஞர்களாக இருக்கிற மாணவர்களுக்குச் சொல்லியிருக்கிறார்களே தவிர, பிச்சைப் புகினும் கற்பித்தல் நன்றே என்று ஆசிரியர்களாக இருப்பவர்களுக்கு அது சொல்லப்படவில்லை. அருள் கூர்ந்து இவற்றைச் சிந்தித்து, சற்று மனிதத் தன்மையோடு இவற்றைக் கவனிக்க வேண்டுமென்று நான் வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

அதே போலப் பள்ளிச் சீரமைப்புத் திட்டத்திலுள்ள குறைபாடுகள் உண்மையாகவே ஆராய்ந்து பார்த்தால், நன்கு புலனாகும். அவற்றை விலக்க வேண்டும். குழந்தைகளுக்கு உடுப்பு அளிப்பது எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. அந்த உடுப்பிற்காக அரசாங்கமே வரவு செலவு திட்டத்தில் ஒரு தொகை ஒதுக்கி, அந்த உடுப்பை மாணவர்களுக்கு அளிக்க முயற்சிக்க வேண்டுமே தவிர, மாணவர் உடுப்பிற்காக ஆசிரியர்கள் கையேந்த வேண்டிய நிலையை அருள் கூர்ந்து உண்டாக்க வேண்டாம். அதே போல, இந்த அரசாங்கம் ஏழைப் பிள்ளைகளுக்கு உதவி செய்யக் கடமைப்பட்டிருக்கிறது. எஸ்.எஸ்.எல்.ஸி. வரையில் 10-வது வகுப்பு வரையிலாவது அவர்கள் இலவசமாகப் படிப்பதற்கு வழி செய்வதாகக் கூறிக்கொண்டிருக்கிறது. அதை விரைவில் நிறைவேற்றினால்தான் இந்த நாட்டிலுள்ள ஏழைப் பிள்ளைகள் தக்க பலன் பெறமுடியும் என்பதையும் எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

ஆரம்ப ஆசிரியர்களின் ஊதியத்தை உயர்த்துவதாக அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். நான் மகிழ்ச்சி அடைகிறேன். அவர்களுடைய குறைகள் களையப்படாமல், ஊதியம் மட்டும் உயர்த்தப்படுமானால், அது

போதுமான பலன் அளிக்காது என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். தென் ஆற்காடு மாவட்டத்தில் மட்டும் ஏறத் தாழ 947 ஆசிரியர்கள், 1951-வது ஆண்டிலிருந்து 1958-வது ஆண்டு வரையி லும் நியமிக்கப்பட்டவர்கள், 1957-வது ஆண்டு வரை உறுதி செய்யப் படாமல் இருக்கிருர்கள். 1957-லே ஒரு பகுதியினர் உறுதி செய்யப்பட்டு சிலர் மட்டும் உறுதி செய்யப்படாத காரணத்தினுல் மாறுபாடு ஏற்பட, மறுமுறையாக பின்னிட்ட ஒரு தேதியிலிருந்து அனைவரையும் உறுதி செய்து, அதை நிறைவேற்றும் முறையில் பலருக்கு முதலில் கொடுக்கப் பட்ட ஊதிய உயர்வைத் திருப்பி அளிக்க வேண்டுமென்ற நிலைமையை உண்டாக்கியிருக்கிருர்கள். வருகிற ஊதியம் குறைவு. உறுதி செய்யப் படாத காலம் அதிகம். உறுதி செய்யப்பட்ட ஏற்றுக்கொள்ளப்பட்ட ஊதிய உயர்வைத் திருப்பி அளிக்க வேண்டிய நிலைமை, இப்படி ஆரம்ப ஆசிரி யர்கள் அல்லலுக்கு உள்ளாகியிருக்கிருர்கள். அதே போல இந்த மாவட்ட நிர்வாகத்தில், அதே தென் ஆற்காடு மாவட்டத்தில் பி.ஏ., பி.டி. பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் ஏறத்தாழ 37 பேர்கள் என்று கருது கிறேன், அவர்கள் நியமிக்கப்பட்டு மூன்று ஆண்டு காலமாகிறது. அவர்களெல்லாம் பி.இடி. பயிற்சி பெற்றவர்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM: லோகல் அட்மினிஸ்ட்ரே ஷன் பற்றி விவாதிக்கும்பொழுது இதையெல்லாம் பற்றிப் பேசுவது பொருத்தமாக இருக்கும். இதெல்லாம் டிஸ்ட்ரிக் போர்டு அட்மினிஸ்ட் ரேஷனில் நடக்கக் கூடியது. லோகல் அட்மினிஸ்ட்ரேஷனைப் பற்றிப் பேசும்பொழுது இது பொருத்தமாக இருக்கும். ஏதோ சொன்னுல் நான் பார்க்கிறேன். இருந்தாலும் இந்த விவாதத்தில் இதைப் பற்றிப் பேசு வது பொருத்தமாக இருக்காது.

* SRI K. ANBAZHAGAN: உள்துறை இலாகாவைப் பற்றிப் பேசும்பொழுது இவற்றைத் தெரிவிக்கலாம் என்று அமைச்சர் அவர்கள் கூறுகிருர்கள். இவைகள் சம்பந்தமாகக் கேள்வி எழுந்தபொழுது, பல நேரங்களில் அமைச்சர் அவர்கள் பதில் அளித்திருக்கிருர்கள் கல்வி இலா காவைப் பற்றியது என்ற காரணத்தினுல். இராமனுதபுர மாவட்டத்தி லிருந்து ஆசிரியர்கள் ஏற்கனவே மாற்றப்பட்டிருக்கிருர்கள். ஓராண்டு காலத்திற்கு முன்னுல் திடீரென்று பெரும்பாலோர் மாற்றப்பட்டது குறித்து கேள்வி கேட்டபொழுது கல்வி அமைச்சர் அவர்கள் பதில் அளித்தார்கள். பதில் சொல்லுவதற்கு வாய்ப்பு இருக்கும்பொழுது கல்வி அமைச்சர் அவர்கள் பதில் அளிக்கிருர்கள். பதில் அளிப்பதற்குத் தொல்லையாக இருக்கும்பொழுது பிற அமைச்சரைக் காட்டுவது அவ்வளவு நல்லதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: சபையில் கட்சித் தலைவ ராக இருக்கக் கூடிய காரணத்தினுல் மற்ற மந்திரிகளுக்காகச் சில சமயங் களில் பதில் சொல்லுவதும் உண்டு. அதனுல் அந்த இலாகா பொறுப்பை நானே ஏற்றுக்கொள்ளுவது என்று அர்த்தமல்ல.

SRI K. ANBAZHAGAN: பொறுப்போடு அப்படியெல்லாம் பிறருக்காக பதில் அளிப்பதாகச் சொன்னுர்கள் தலைவர் என்ற முறையில். இதற்குப் பதில் அளிப்பார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன். ஆரம்ப ஆசிரியர் களுக்கும் மற்ற ஆசிரியர்களுக்கும் ஏற்பட்டிருக்கிற இப்படிப்பட்ட தொல்லை களை எப்படி மாற்றப்போகிருர்கள் என்று நான் கேட்கிறேன். ஊதிய உயர்வு ரூபாய் 5 கிடைக்கிறது என்று வைத்துக்கொண்டால் வீண் தொல்லை மட்டும் ரூபாய் 50-க்குத் துன்பமாக ஏற்படுகிறது. என்றுல், இதை எப்படிச் சகித்துக்கொள்வது ?

அதே போல்தான் ஆசிரியப் பெண்மணிகள். அவர்கள் பேறு காலம் அடைகிறபொழுது அவர்களுக்கு 3 மாத ஓய்வு அளிக்கப்படக் கூடிய முறை அரசினரால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆசிரியர்கள் தேர்வுகள் எழுத வேண்டியிருக்கும்பொழுது, பல்கலைக் கழகத்திற்கும், அரசாங்கத் திற்கும் கட்ட வேண்டிய கட்டணத்திலிருந்து அவர்களுக்கு விதி விலக்கு அளிககப்பட வேண்டுமென்று ஏழை ஆசிரியர்கள் கேட்டிருக்கிருர்கள்.

26th April 1960] [Sri K. Anbazhagan]

இதுவரையில் அளிக்கப்படவில்லை. அதே போல, ஆசிரியர்கள் பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்க ஆசிரியர் தொகுதி என்று ஒரு தொகுதி இருக்கிறது. ஆசிரியர்களாகத்தான் பணியாற்றுகிறார்கள் என்றாலும் அப்படிப்பட்ட பணியில் உள்ள ஹையர் கிரேடு ஆசிரியர்களும், ஆரம்பப் பள்ளிகளில் பணியாற்றுகின்ற செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கும் வாக்கு அளிக்கிற உரிமையைக் கூட இந்த அரசாங்கம் கொடுக்கவில்லை. கடைசியாக அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சலுகை 'நேரடியாக உங்களுக்கு சம்பளம் வந்து சேரும்—இடையிலே இருக்கிற நிர்வாகத்தின் மூலம் அல்ல, இனி நேரிடையாகவே கிடைக்கும்' என்று தெரிவித்தார்கள். ஆனால் சம்பளம் நேரிடையாக அனுப்புவதை நிறுத்துவது பற்றி சர்வ கட்சித் தலைவர்களைக் கேட்டதாகச் சொல்லி, இப்பொழுது அதை நிறுத்தியிருக்கிறார்கள். ஒரு சில சலுகைகள் அளிக்கப்பட்டாலும், அவை திடீரென்று நிறுத்தப்படுகிறது. நான் கருதுகிறேன், வேறு வழி முறைகளை அமைச்சர் அவர்கள் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். ரெவின்யூ இலாகா மூலமாகவோ, தாலுகா அலுவலகம் மூலமாகவோ, சம்பளத்தை அவர்களுக்குத் தருவதற்கும், அந்தக் கணக்குகளை ஈடு செய்வதற்கும், ஏன் வழி காணக் கூடாது. மணியார்டர் கமிஷன் அதிகமாக இருக்கிறது என்று சொல்லி, நேரடியாக ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுப்பதை நிறுத்திவிடுவார்களானால், அதனால் ஆசிரியர்கட்கு ஏற்படுகின்ற தொல்லை மிகுதியாக இருக்கும் என்பதை அமைச்சருக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கல்லூரிகளிலே உள்ள தமிழ் ஆசிரியர்களின் நிலையை எடுத்துக்கொண்டால், தமிழ் ஆட்சி மொழியாகப் போகிறது, தமிழிலேயே பாட திட்டங்கள் யாவும் பயிற்றுவிக்கப்படும் என்ற ஆர்வம் இருக்கிறது. ஆனால், அதே நேரத்திலே, தமிழாசிரியர்கள் "பண்டிதர்கள்" என்னும் பெயரில் நியமிக்கப்பட்டு, அவர்கள் எம்.ஏ. பட்டம் பெற்றிருந்தாலும், சிறந்த தகுதி உள்ளவர்களாக இருந்தாலும், இன்றையதினம் குறைந்த ஊதியத்தில் பணியாற்றும்படி பணிக்கப்படுகிறார்கள். அவர்கள் மற்றவர்களைப் போல உண்மையாகவே அந்த அளவுக்குத் தகுதி உள்ளவர்களாக இருந்தபோதிலும், தமிழ் ஆசிரியர்கள் எளிய ஊதியத்திலே கிடைப்பார்கள் என்ற காரணத்தினாலோ, வேலை இல்லாதவர்கள் பலர் இருக்கிறார்கள் என்ற காரணத்தினாலோ, இந்த முறையை இன்னும் கையாள்வது அநீதி என்று தெரிவிக்கிறேன். கல்லூரித் தலைவர்களாக, முதல்வர்களாக, தமிழ் படித்த அறிஞர்கள், தமிழ்ப் பேராசியர்கள் நியமிக்கப்படுவதில்லை. இதுவரை குமரபாளையம் ஆசிரியர்கள் பயிற்சிக் கல்லூரி ஒன்றில் மட்டுமே ஒருவர் நியமிக்கப்பட்டிருக்கிறார். முதல்வராக. தமிழுக்கு ஊக்கம் தர வேண்டும் என்று இருக்கிற இந்த நேரத்திலே, கல்லூரித் தலைவர்களாக ஏன் அவர்கள் ஏற்கப்படாமல், ஒதுக்கப்படவேண்டும்? 1 p.m.

அது மட்டுமல்ல. இந்த இலாகாவைப் பற்றி, சென்ற ஆண்டில் பேசும்போதே அவர்களுடைய குறிப்பு ஏடு, ஆண்டு அறிக்கை, அவ்வப்பொழுது வெளிவருவதில்லை என்று குறிப்பிட்டேன். இப்பொழுது **1956–57-ஆம்** ஆண்டு அறிக்கைதான் வெளிவந்திருக்கிறது. **57-க்குப்** பிறகு, **57–58, 58–59** ஆக இரண்டு ஆண்டு அறிக்கைகள் இன்னும் வெளிவராமல் இருக்கும் நிலையில், இவ்வளவு பெரிய மானியத் தொகையை கோரிப் பெறும்போது, என்ன தெளிவு ஏற்படமுடியும்? இதே நேரத்தில் வேறு சில இலாகாவிலிருந்து சென்ற ஆண்டுக்குக்கூட அறிக்கைகள் வெளி வந்திருக்கின்றன. இந்தக் கல்வி இலாகா மட்டும் வெளியிடாததற்குக் காரணம் என்ன? இன்னும் சொல்லப் போனால், பைனான்ஸ் அக்கௌண்ட்ஸ் என்ற வரவு செலவுக் கணக்கு அறிக்கை, **58–59-க்கு** வந்திருக்கிறது. ஆனால், கல்வி இலாக்காவைப் பொருத்த வரை, அவர்கள் அறிக்கையைக் கொடுக்க வேண்டிய அவசியத்தை உணரவில்லையா? அப்படி ஆண்டு அறிக்கை இல்லையென்றால், எந்த அடிப்படையில் இந்த இலாக்காவைக் குறித்துப் பேசுவது என்று கேட்க விரும்புகிறேன். உண்மையிலே, இதையெல்லாம் கவனித்து நிர்வாகத்தைப் பற்றி அவ்வப்போது விவரங்கள் கொடுப்பதற்குப் பதிலாக, இந்தச் சட்ட சபைக்கு **1956–57** ஆண்டு விவரத்தை இவ்வளவு பெரிய புத்தகமாக ரூ. **6·67** நயா பைசா விலையில் அச்சடித்திருக்க வேண்டாம். இதற்குப் பதிலாக,

அந்தப் பழைய விவரத்தை ஆறு பக்கத்தில் அழுது முடித்து விட்டு. மானியத்திற்கு அனுமதி கோரியிருந்தால், புத்தகம் அச்சியற்றும் செலவு வீணாகியிருக்காது. கல்வித்துறை தலைவர் அவர்களுக்கு இம்மன்றத்தில் தெரிவிக்கிறேன், "நீங்கள் இம்மாதிரி வீணான செலவினை மேற்கொள்வது பலன் தராது; இது அதிகமாகப் பிரசாரத்திற்குக்கூட உபயோகம் ஆகாது என்பதுடன், கல்வித் துறையைச் சீரமைக்கும் பணிக்கு உதவாது" என்று. இதில் வீணாகச் செலவு செய்தேனும், மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு ஆண்டு அறிக்கையை வெளியிடுவது பொருத்தமில்லை. (கனம் ஸ்ரீ வி. சுப்பிரமணியம்: ஒப்பாரி வைக்கலாம்.) கனம் அமைச்சரவர்கள் சொல்வது போல் கல்வி இலாகாத் தலைவர் அவர்கள் அப்படிப்பட்ட வேறு துறையிலும் ஈடுபடலாம். அதற்கு மாறாக, பெரிய செலவிடச் செய்து, பயனற்ற காரியங்களில் ஈடுபடவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து நிர்வாகத்தில் உள்ள குறைகளைச் சொல்ல வேண்டியுள்ளது. பள்ளிக்கூடங்களை தனி நிர்வாகத்தில் நடத்திக் கொண்டிருப்பவர்கள், பிள்ளைகளிடம் ஊதியம் பெறாமல் அல்லது, பிள்ளைகளுக்கு சம்பளம் இல்லாமல், சர்க்கார் தரும் உதவித்தொகைமட்டும் பெற்று நடத்த வேண்டும் என்றும், அப்படி நடத்த முடியாதவர்கள், பள்ளியை உள்ளாட்சி மன்றத்திடம் ஒப்படைக்கலாம் என்று முடிவு செய்தார்கள். அப்படிச் சென்ற ஆண்டு அறிக்கை வெளியிட்டார்கள். அப்படி நிர்வாகம் மாறும்போது எந்த ஆசிரியரும் வேலை இழக்காமல், வேறு பள்ளிக்கூடங்களிலும், வேறு நிர்வாகங்களிலும் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் என்று உறுதி கூறினார்கள். ஆனால், பல இடங்களிலே ஆசிரியர்கள் வேலையில்லாமலும், பிள்ளைகள் பள்ளிக்கூடம் இல்லாமலும் தவிக்கும் நிலையில் தனியார் பள்ளி நிர்வாகம் நடத்துவதைக் கைவிட்ட நேரத்திலே, வேறு சிலர் நிர்வாகத்தை ஏற்று நடத்த முன் வந்திருக்கிறார்கள்; அம்மாதிரி சங்காராபுரம் என்ற பகுதியில், சென்னை நுங்கம்பாக்கத்தில், இளங்கோ துவக்கப் பள்ளியென்ற பெயருடன் இதற்கு முன்னால் காந்தி தொடக்கப் பள்ளி என்று வழங்கி வந்ததை நிர்வாகிகள் கைவிட்ட காரணத்தால், வேறு நிர்வாகக் குழுவினர்கள் ஏற்று நடத்த முன் வந்தார்கள். அப்பொழுது அந்தப் பள்ளிக்கூடத்தை அரசாங்கம் ஏற்று உதவ வேண்டுமென்றால், கார்ப்பொரேஷன் கமிஷனர் அனுமதியைப் பெற்று நடத்த வேண்டும் என்றார்கள். நகராட்சி மன்ற ஆட்சியாளர் அதை அனுமதிப்பதில் தடை இல்லை என்று சொன்னார்கள். மேலும் தக்க காரணம் காட்ட வேண்டும் என்று கல்வி இலாக்காவினர் கேட்டார்கள். அதன் பிறகு கமிஷனருக்கு மனுப்போட்டதற்கு, அங்கே 470 பிள்ளைகள் இருக்கிறார்கள், அவர்களைச் சேர்த்துக்கொள்ள நகராண்மைக் கழகப் பள்ளியில் இடமே இல்லை, எனவே அந்தப் பள்ளியை நடத்த அரசாங்கம் அனுமதிக்கலாம் என்று பதிலளித்தார். அப்படித் தெரிவித்துங்கூட, இந்த அரசாங்கத்தின் கல்வி இலாகா, இது வரையில் அந்தப் பள்ளிக்கூடத்தை நடத்துவதை ஏற்று உத்தரவு போடவில்லை. ஓராண்டு காலம் கழிந்து விட்டது. அந்த ஆரம்ப ஆசிரியர்களுக்கு உரிய ஊதியம் கிடைக்கவில்லை. ஊதியம் இல்லாமல் எப்படிப் பணிபுரிவது? அந்தப் பள்ளிக்கு கூரைக் கொட்டகைபோட ரூ. 2,600-ம் ஆகியுள்ளது. அதற்கு மானியம் இல்லை; உதவித் தொகையில்லை; ரெகக்னிஷனும் இல்லை. கல்வி இலாகாத் தலைவரிடம் முறையிட்டபோது, அவர் "உங்கள் எம்.எல்.ஏ.-கள் தான் சட்ட சபையிலே முழங்குகிறார்களே, அவர்கள் இடத்தில் போய்ச் சொல்லுங்கள்" என்று சொன்னாராம். எம்.எல்.ஏ.-கள் இருக்கிறார்கள் என்ற காரணத்தினால், எங்கள் கட்சியினர் பாவம் செய்தவர்கள் ஆகிவிடவில்லை. பள்ளிக்கூட நிர்வாகத்திலே குறை இருந்தால், நிர்வாகிகளைத் தண்டியுங்கள். நாங்கள் குற்றங்களை ஆதரிக்கவில்லை. இந்தப் பள்ளி துவங்கி ஓராண்டு காலமாகியும் அனுமதி தரப்படவில்லை. காரணத்தை யார்தான் தெரிவிக்க வேண்டும்? கல்வி இலாகா தலைவர்தான் தெரிவிக்க முடியும். காந்தி தொடக்க பள்ளி யென்பதை இளங்கோ தொடக்கப் பள்ளியென்று ஏன் மாற்றினீர்கள் என்று கேட்கிறார்கள், அதே வாயால், வள்ளுவனைப் பாராட்டுகிறவர்கள். ஏன் அப்படிக் கேட்கிறார்கள்? எனக்குத் தெரிந்த வரையில் பள்ளிக்கூட நிர்வாகத்தில் குறை உண்டா? என்றால் இல்லை

26th April 1960] [Sri K. Anbazhagan]

என்பேன். அதே போன்று காஞ்சிநகரத்தில் உள்ள மற்றொரு பள்ளியும் பாதிக்கப்பட்டுள்ளது. அந்த நகரில் உள்ள வன்னியர்சங்க நிர்வாகத்தைச் சேர்ந்த, போதிவிநாயகர் ஹையர் எலிமெண்டரி ஸ்கூல் பி.டி.வி.எஸ். என்று காஞ்சீபுரத்தில் இருக்கிறது. அதற்கு ஒரு மானேஜரை நிர்வாகத்தினர் நியமித்தார்கள். அவர் நியமிக்கப்பட்ட காலம் 1959, பெப்ருவரி மாதம். இன்னும் அந்த நியமனத்தை இந்த அரசாங்கம் ஏற்றுக் கொள்ளாமல் இருக்கிறது. ஏற்றுக்கொள்ளாதது மட்டுமல்ல, இந்த மானேஜரை இன்ன காரணத்திற்காக ஏற்றுக் கொள்ள முடியாது என்று காரணம் தெரிவித்ததா ? என்றால் இல்லை. அவர் மீது குற்றங்குறை எதுவும் சொல்ல வழியில்லை. வேண்டுமானால், அவர் திராவிட முன்னேற்றக் கழகத்தில் இருப்பவர் என்று சொல்லலாம். அப்படி அரசியல் காரணம் வேண்டுமானால் காட்டலாம். பள்ளிச் சீரமைப்பு மாநாட்டில் காங்கிரஸ் கட்சித் தலைவர் திரு ஒ. வி. அழகேசன் தலைமை தாங்கி நடத்தலாம் ; அது அரசியல் அல்ல. அது கட்சிப் பிரசாரம் அல்ல. ஆனால், எதிர்க் கட்சியில் இருக்கும் உறுப்பினர் ஒருவர் பள்ளிக்கூடத்தை எடுத்து நடத்தினால், அந்த நிர்வாகத்தை, நியமனத்தை ஏற்றுக் கொள்ள இந்த அரசாங்கம் மறுக்குமானால், அதற்கு என்ன காரணத்தைக் குற்றச் சாட்டைத் தரமுடியும், எந்த நிர்வாகமாக இருந்தாலும், ஒருவரை நிர்வாகியாக ஏற்றுக்கொள்ள மறுப்பதானால், அதற்குக் காரணம் காட்ட வேண்டும். அது மட்டுமல்ல. இப்படிச் சில பள்ளிக்கூடங்கள் நடப்பதைத் தடுத்து என்ன பலனை அரசாங்கம் பெற்றுவிட முடியும் ?

சில தினங்களுக்குமுன் நண்பர் சின்னதுரை அவர்கள் ஒரு கேள்வி கேட்டார்கள் : தனியார் நிர்வாகத்தில் இருந்த எல்லாப் பள்ளிக் கூடங்களுக்கும் அனுமதி கொடுத்திருக்கிறீர்களா, ஊதியம் வாங்கக்கூடிய பள்ளிக்கூடங்களில் உள்ள பிள்ளைகள் எல்லாம் சம்பளம் வாங்காத பள்ளிக்கூடங்களில் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறார்களா என்று கேட்டார்கள். அதற்குக் கல்வி அமைச்சர் பெருமையாகச் சொன்னார் "எல்லாப் பள்ளிக் கூடங்களையும் அரசாங்க உதவிக்கு உரியதாக ஏற்றுக் கொண்டு இருக்கிறோம்" என்று. அதற்கு மாறாக, நானே இரண்டு பள்ளிக் கூடங்களைப் பற்றிச் சொன்னேன். இன்னும் எத்தனை பள்ளிகள் இந்தப் பட்டியலில் வர இருக்கிறதோ ? இவ்வளவு வற்புறுத்திச் சொல்லியும் கூட, நிதி அமைச்சரவர்கள், இந்த இலாக்காவில் அதிக நம்பிக்கை வைத்து இந்த இலாகா செம்மையாக நடைபெறுகிறது என்று நினைத்து பைலைப்புரட்டிப் பார்க்காமல் இருக்கிறாரோ என்று எண்ணுகிறேன். ஆகவே, நிதியமைச்சர், அருள் கூர்ந்து இந்த இலாகாவில் கொஞ்சம் அதிகமான கண்காணிப்பு செலுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நிதியமைச்சர் என்ற காரணத்தால், இந்தத்துறை வேலையையும் பார்க்க முடியவில்லையென்றால் டெல்லிக்குப் போய் வருவதற்கே, விண்ணப்பங்களை அங்கு கொண்டு போவதற்கே நேரம் இல்லை என்று நிதியமைச்சர் சொல்வதாக இருந்தால் நிதியமைச்சருக்கு உறுதுணையாக வேறு ஒரு நல்ல இளைஞரை—காங்கிரஸிலேயே நல்ல இளைஞர்கள் பலர் இருக்கிறார்கள்—கல்வி அமைச்சராக நியமித்து இக் குறைபாடுகளை அவ்வப்பொழுது களைய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் : அண்ணுதுரைதான் தயாராக இருக்கிறார்களே வருவதற்கு.) "அறிஞர் அண்ணுதுரை தயாராக உள்ளார்" என்று கல்வி அமைச்சரவர்கள் தெரிவிக்கிறார்கள். அண்ணுதுரை எப்படிப்பட்ட நிலையில், எப்பொழுது இதற்குத் தயார் ? என்று சொன்னார் என்பதைக் கவனிக்க வேண்டும். இந்தக் கல்வி நிர்வாகத்தை என்னால் நடத்த முடியாது என்று நிதியமைச்சர் அவர்கள் கடலூர் மாநாட்டில் கூறியபோது ; ஆரம்ப ஆசியர்களுக்கு என்னால் கொடுக்க முடிந்த அளவு ஊதியம் கொடுத்து விட்டேன், இனியும் உடனே உயர்த்த வேண்டும் என்று நீங்கள் கேட்பதானல் நான் ராஜீனுமாதான் செய்வேன் என்று அமைச்சர் அச்சுறுத்திய போது ஆசிரியர்களுக்கு உள்ள குறைகளைத் தீர்க்க நடவடிக்கை எடுக்காமல், மாறாகக் கல்வி அமைச்சர் ராஜினுமாச் செய்வதாகக் கூறுவது அவரது செயலற்ற தன்மையையே காட்டும் என்பதை விளக்க அண்ணு கூறினார். "ஆசியர்களின் குறைகளை நீக்க தானே கூடச் சம்பளமில்லாமலே கல்வி

அமைச்சராகப் பணியாற்றத் தயார் என்று " அந்தப் பதிலில் அடங்கியுள்ள கருத்தை அமைச்சர் எண்ணிப்பார்க்க வேண்டும்.

நான் சென்ற ஆண்டிலேயே கல்வி இலாகா தரத்தைப் பற்றிச் சொன்னேன். இன்றும் சொல்கிறேன். அந்த இலாகாவின் நிர்வாகத்தில் பழைய தரம் குறைந்து விட்டது. அரசாங்கக் கல்லூரிகளில், பிற கல்லூரிகளை விட படிப்பின் தரம் குறைந்திருக்கிறது. இதை அருள் கூர்ந்து கவனிக்க வேண்டும். கல்வி இலாகா தலைவரிடம் எந்த விண்ணப்பம் சென்றாலும், ஏறக்குறைய ஓரிரண்டு ஆண்டு காலம் வரை அவர்களுடைய பீரோவிலோ, மேசையிலோ அடைக்கப்படுகிறது. முக்கியமானவர்கள் சென்று கேட்டாலும், காலந்தாழ்த்தியே பதில் கிடைக்கிறது. உடனடியாக கவனிக்கப்படுவதில்லை. அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் கல்வி இலாக்கா திறமையாக நடக்கிறது என்று பெருமையாகச் சொல்லிக்கொள்வதற்கொப்ப காங்கிரஸ் கட்சி பிரசார இயந்திரமாக அது நன்கு பயன்படுகிறது என்பதற்காக பாராட்டுகிறேன். கல்வி இலாகா தலைவர் காங்கிரசு பிரசார இலாகா தலைவராக செம்மையாக வேலை செய்கிறார்கள். அவர்களை வாழ்த்துகிறேன். காங்கிரஸ் கட்சி ஆளும் கட்சியாக இருப்பதால், கல்வி இலாகாத் தலைவர் இதுதான் தன் கடமை என்று நினைப்பதானால், அந்தப் போக்கு வளருமானால், கல்வி இலாகா தலைவரின் கண்ணியம் குறைவது மட்டுமல்ல, கல்வி இலாகா சீர்கெட்டு, எதிர் காலத்தில், எந்தப் பலனை எதிர்பார்க்க வேண்டுமோ அதற்கு மாறான பலனையே உண்டாக்கும் என்று வருத்தத்தோடு தெரிவிக்கிறேன். கல்லூரி முதல்வராக இருப்பவர்களிலே பலர், கல்வி இலாகா தலைவர் அவர்களைப் பாராட்டுவதற்கும், வரவேற்பதற்கும்தான் நேரம் சரியாக இருக்கிறது என்று வருத்தப்படும் நிலை இன்று வளருகிறது. அந்த நிலை வெள்ளைக்காரன் கல்வி இலாகா தலைவராக இருந்த போதுகூட ஏற்படவில்லை என்று நான் கூறுவேன். ப்ரமோஷன் பதவி உயர்வு கொடுப்பதில் இன்னும் எவ்வளவோ குற்றங்குறைகள். எக்சாமினர்கள், தேர்வாளர்கள் பொருக்குவதிலும் குறைகள். இதற்கெல்லாம் யார் பொறுப்பாக இருந்தாலும், அமைச்சர் இவைகளைக் கண்காணிக்க வேண்டும்; இந்த நிலையை மாற்றி அமைச்சர் நியாயத்திற்கு வழி செய்வார்கள் என்று எதிர் பார்க்கிறேன்.

வெள்ளை அறிக்கையை பொருத்தவரை, இரண்டொரு வார்த்தைகள் சொல்லி முடிக்க விரும்புகிறேன்.

தமிழிலேயே கல்லூரிக் கல்வித் திட்டம் அமைய வேண்டும் என்பது குறித்து திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கை உடன்பாடே ஆகும். ஆகவே, இந்தக் கொள்கைக்கு சென்னை பல்கலைக் கழகத் துணை வேந்தர் மாறுபட்டால் அப்போது அவரிடம் மாறுபடுவதற்குத் திராவிட முன்னேற்றக் கழகம் சிறிது அளவும் தயங்காது. ஏனென்றால் நான் கல்லூரியில் படித்த நாட்களிலேயே தமிழில் படிக்க வேண்டும் என்ற ஆர்வம் கொண்டிருந்தேன். அக்காலத்திலேயே அண்ணாமலை பல்கலைக் கழகம் அதைச் செய்யும் என்று எதிர்பார்த்தேன். அப்படிச் செய்யவேண்டியவர்கள் ஏனோ இடையே கைவிட்டு விட்டார்கள். எனவே கல்லூரிகளில் பயிற்றுமொழியாகத் தமிழ் வரவேண்டும் என்ற கருத்தில் மாறுபாடு இல்லை. ஆனால் தமிழில் கொண்டு வரும்போது, கருத்து மாறுபாடு கொண்டவர்கள் கல்வித்துறையில் அனுபவம் பெற்றவர்களாகவும் இருந்தால் அவர்களுடைய சம்மதத்தை முறைப்படி பெறமுயற்சிக்கவேண்டும் அப்படிப் பெற்றிருந்தால் அவர்களிடமிருந்து தடை ஏற்படுவதற்கு பதில் ஒத்துழைப்பு கிடைக்கும். நிலைமை உண்டாகும். கல்வி அமைச்சர் அவர்கள் அப்படிப்பட்ட முறையில் திட்டத்தைக் கொண்டு வந்தால் அதிக பலன் அளிக்கும் என்பதுதான் திராவிட முன்னேற்றக் கழகத்தின் கருத்து.

"நம்நாடு" இதழில் வந்த தலையங்கத்தைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் இங்கேயும் குறிப்பிட்டார், வெளியே ஒரு சிற்றூரில் பேசும் போதும் குறிப்பிட்டுள்ளார். முன்னேற்றக் கழகம் சட்டமன்றத்திற்கு

உள்ளே ஆதரிக்கிறது என்றும் ஆனால் வெளியே கண்டிக்கிறார்கள் என்றும் அவ்வாறு நம்நாட்டில் எழுதி இருக்கிறார்கள் என்றால் உண்மையிலே கண்டிக்கத்தக்கதுதான். ஆனால் தமிழில் வரும் கல்லூரிப் பாடத் திட்டத்தைப்பற்றி எழுதும்போது, சென்னைப் பல்கலைக்கழகத்தின் உரிமையில் கல்வி அமைச்சர் அவர்கள் தலையிடுகிறார்கள் என்ற கருத்தில் தான் இதைக் கண்டித்திருக்கிறார்கள். தமிழுக்காக, கனம் கல்வி அமைச்சர் அவர்கள் தலையிடும் நேரத்தில் இந்தக் கண்டனத் தலையங்கம் வரலாமா என்று அமைச்சர் கேட்டால் அப்படிப்பட்ட தலையங்கத்திற்குக்கூட வருத்தம் தெரிவிக்கிறேன். ஆனால் பல்கலைக் கழகத்தின் உரிமையில் இன்றைய தினம் கல்வி அமைச்சராக உள்ளவர்கள் தலையிடுவாரானால் நாளையதினம் வரக்கூடியவர்கள் இதர காரணத்திற்காகவும் தலையிடத் தொடங்கி பல்கலைக் கழகத்தின் தனி உரிமை பாதிக்கப்படுமானால் பல்கலைக் கழகத்தின் தனிச் சிறப்புக்கே கேடு ஏற்படுமே என்று கருதியே இதைக் கண்டிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : தமிழ்ப் பாடத்தை கல்லூரிகளில் புகுத்துவதற்காகத்தான் அவர்களுடைய அதிகாரத்தில் தலையிட்டிருக்கிறார்கள் என்று கனம் அங்கத்தினர் நினைக்கிறாரா அல்லது இந்த ஒன்றில் தான் தலையிட்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறாரா ?

* SRI K. ANBAZHAGAN : கனம் அமைச்சர் அவர்கள் கேட்ட காரணத்தால் அதைப்பற்றி விளக்குவதற்கும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது என்று நினைக்கிறேன். ஏனென்றால் சென்னைப் பல்கலைக் கழகத்தின் உரிமை என்னும்போது கல்லூரிகளின் கல்வி நிர்வாகத்தை மேற்பார்வை செய்யும் உரிமையுடன் நடைபெறுகிறது. கல்வி அமைச்சர் இப்போது தெரிவித்துள்ளார், ஆங்கிலத்தில் பாடங்கள் நடந்தால் நாங்கள் உதவித் தொகை தரமாட்டோம் ; 1963–64-லிருந்து ஆங்கிலத்தில் பாடங்கள் நடந்தால் மானியம் தரமாட்டோம் என்று சொல்லி இருக்கிறார். இந்த முறைக்குப் பல்கலைக் கழகத்தின் உடன்பாடு பெற்று அப்படி அறிவித்திருந்தால் அது தலையிடும் செயலாகாது. மானியம் அளிக்கும் வாய்ப்பு அரசாங்கத்திற்கு இருக்கிறது. அரசாங்கத்தினிடம் பணம் இருப்பது மட்டும் அல்ல, கல்விக்கு உதவும் பொறுப்பும் இருக்கிறது. தமிழில் அவர்கள் பாடத்தை நடத்தாவிட்டால் உடனே மானியத்தை நிறுத்தி விடுவோம் என்று தெரிவிக்கும் நேரத்தில் அதையே பல்கலைக் கழகத்தின் மூலமாகத் தெரிவிக்கும்படிச் செய்திருந்தால் அல்லது அதற்காக இரண்டு ஆண்டுகள் காலம் தருவோம், எல்லாக் கல்லூரிகளிலும் 1963-ல் தொடங்குகிறோம், 1965-க்குள்ளே, 1966-க்குள்ளே எந்தக் கல்லூரி தொடங்காவிட்டாலும் இந்த உதவித் தொகையை நிறுத்தி விடுவோம் என்ற முறையைக் கையாண்டு இருந்தால் ஒருவேளை பல்கலைக்கழகப் பொறுப்பிலுள்ளவர்களுக்கு வேதனை தராமல் இருந்திருக்கும். கல்லூரிக் கல்வியும் பாடங்களும் தமிழில்தான் வரவேண்டும் என்று முன்னேற்றக் கழகம் கருதுகிறது. இதன் தலைவர் அறிஞர் அண்ணா அவர்களும் முழு மனதுடன் அதனை வரவேற்கிறார். சென்னை பல்கலைக் கழகத்தைப் பொறுத்த வரையில் அதனுடைய இன்றைய தலைவரைப்பற்றி அல்ல நான் கவலைப்படுவது. பல ஆண்டுகாலமாக செம்மையான முறையில் பணியாற்றி வருகிறது என்ற பெருமைக்கே ஊறு நேரக்கூடாது. நாளைக்கு ஒரு சமயம் நமது கல்வி அமைச்சர் அவர்களே அதன் தலைவராக துணைவேந்தராகக்கூடிய காலம் வரக்கூடும். அப்படிப்பட்ட பல்கலைக் கழகத்தின் உரிமை மிக சிறந்த முறையில் நிலைநிறுத்தப்படவேண்டும். அந்த உரிமை பாதுகாக்கப் படவேண்டும். மத்திய அரசின் ஆதிக்கத்திலிருந்து மாநில அரசாங்கத்தின் உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்று சொல்லுகிற எம்மைப் போன்றவர்கள் பல்கலைக் கழகத்தின் அரிய உரிமைகளும் பாதுகாக்கப்பட வேண்டும் என்றே விரும்புவோம். அந்த உரிமையில் தலையிடும் கட்டம் வரக் கூடாது என்று விரும்புவதே இயற்கை. ஒரு வேளை அமைச்சர் அவர்களுடைய தமிழ்ப்பற்றைப்பற்றி 'நம்நாடு' தலையங்க கருத்து சந்தேகப்படுவதாகத் தோன்றி இருக்குமானால் அதற்காக வருத்தம் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அமைச்சர் அவர்களுடைய தமிழ்ப்பற்றை, ஆர்வத்தைப் பாராட்டுகிறேன். இருந்தாலும்கூட இந்தத் தமிழ்ப் பற்றை தயவு செய்து எந்த

இடத்திலும் அரசியல் கண்ணேட்டத்திலிருந்து காட்டிவிடவேண்டாம் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த அரசியல் நோக்கம் சில வேளை களில் அமைச்சருக்கு ஏற்பட்டிருக்கிறது. தமிழில் கொள்ளும் பற்று, ஹிந்தியைக் கண்டிக்கிற முறையில் வளரலாகாது என்று எண்ணி சில சமயங்களில் மைல் கற்களில் எழுதும் ஹிந்தி எழுத்துக்கள் குருடன் கை விளக்கு என்று பேசியிருக்கிருர். குருடன் கைவிளக்கு என்று பேசிய போதிலும் மற்றும் சில நேரத்தில் ஹிந்தி இதற்குக் கூடாது, அதற்குக் கூடாது என்று பேசும் நிலைமை இருப்பதால் தமிழ்ப்பற்று அரசியல் கண்ணேட்டத்துடன் செயல்பட காரணம் ஆகக் கூடாது என்று விரும்பு கிறேன். அப்படி இருந்தால் அது சென்னை பல்கலைக் கழகத்தின் கீழ் உள்ள எல்லாக் கல்லூரி ஆசிரியர்களிடத்திலும் எப்படிப்பட்ட நிலைமையை அரசாங்கம் ஏற்படுத்தி இருக்கிறது என்று அரசாங்கம் எண்ணிப் பார்த்திருக்க வேண்டும். அவர்களுக்கு மத்திய சர்க்காரில் இருந்து பல்கலைக் கழக மானியம் குழு உதவித் தொகை அளிக்க முன்வந்தும் அவர்கள் அளிக்கும் தொகையுடன் சென்னை மாகாண அரசாங்கமும் அதற்கு ஈடான தொகையை அளிக்க இசைந்திருப்பார்களானல் கல்லூரி ஆசிரியர்களுடைய சம்பளம் தகுந்த அளவுக்கு உயர்ந்து திருப்தியான நிலைமை ஏற்பட்டிருக்கும். நம்முடைய சர்க்காருக்கு ஒரு நான்கு ஐந்து லட்சம் ரூபாய் அளிக்க மனம் இல்லாததால் மத்திய அரசாங்கம் அளிக்கும் ஐந்து லட்சம் ரூபாயை இழக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதுபோல் தனிப்பட்ட நிர்வாகக் கல்லூரிகளில் உள்ள ஆசிரியர்களுக்கு தரக்கூடிய ஊதிய உயர்வில் நம்முடைய அரசாங்கம் 25 சத விகிதம் தந்தால் 25 சத விகிதம் கல்லூரி நிர்வாகமும் 50 சத விகிதம் பல்கலைக் கழக மானியக் குழுவும் அளிக்கும் வாய்ப்பு எல்லோருக்கும் கிடைத்திருக்கும். அந்த பல்கலைக் கழக மானியக்குழுவின் உதவியைப் பெறமுடியாமல் செய்து பல்கலைக் கழகத்தின்மீது இருக்கும் கோபத்தில் இந்த ஆசிரியர்களைப் பட்டினிபோட வேண்டாம் என்று வேண்டுகிறேன். கல்லூரி ஆசிரியர்களின் ஊதியத்தை குறைக்க வேண்டாம். ஆகையால் இந்த ஆசிரியர்களுடைய பிரச்னையையும் கவனித்து பல்கலைக் கழக மானியக் குழு உதவி அவர்கட்கு கிடைக்கும் வகையில் நமது அரசாங்கம் துணைசெய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

தொழில் கல்வி துறையைப் பொருத்த வரையில் தொழில் கல்வி நல்ல முறையில் வளருகிறது. என்றாலும் இன்னும் அது அதிகமாக வளர வேண்டும். இண்டஸ்ட்ரியல் டிரெயினிங்—தொழிற் பயிற்சியைப் பொருத்தவரைக்கும் தொழில் இலாகாவே சில கல்லூரிகளையும் தொழிற் கூடங்களையும் நடத்துகின்றன. அவை தொழில் இலாகாவின் மேற் பார்வையில் இருப்பதைவிட டெக்னிகல் எடுகேஷன் என்று சொல்லப்படும் தொழிற் கல்வித் துறையில் சேர்ந்து இருந்தால்தான் அது எளிதாகவும் ஒழுங்காகவும் பரிபாலிக்கப்படும். அது மட்டுமல்ல, தொழில் கல்வித்துறையில் உள்ள இவைகளிடையே ஒன்றுக்கு ஒன்று தொடர்பு ஏற்பட்டு பயிற்சி செம்மையாக இருக்க உதவியாக இருக்கும். இன்டஸ்ட்ரீஸ் இலாகா தலைவர் அந்தத் தொழில் துறையில் பயிற்சி பெற்றிருக்கக் கூடியவராக இருக்க முடியாது. டெக்னிகல் எடுகேஷன் என்னும் துறையில் இன்டஸ்ட்ரீஸ் ஸ்கூல்களை சேர்க்கப்பட்டால் அதன் பயன் அதிகமாகும். ஆதலால் அவ் வாறு இணைக்கவேண்டுமென்று கல்வி அமைச்சர் அவர்களை வேண்டிக் கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

* SRIMATHI HEMALATHA DEVI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்களால் சமர்ப்பிக்கப்பட்டுள்ள இந்தக் கல்வி மானிய கோரிக்கையை வரவேற்றும் வெள்ளை அறிக்கையை ஆதரித்தும் ஒரு சில விஷயங்களை எடுத்துக் கூற முற்படு கிறேன். குறிப்பாக சுதந்தரம் அடைந்தபின் இந்நாட்டில் இருக்கும்படியான எல்லா மக்களும் கல்வி கற்று, தொழில் வளம் பெற்று, அதே மாதிரி பொருளாதாரத்திலும் வளம் பெற்று இருக்க வேண்டும் என்று எல்லா விதமான நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. நாட்டு

26th April 1960] [Srimathi Hemalatha Devi]

மக்களுக்கும் கல்வி கற்க வேண்டும் என்ற உத்சாகமும் அதிகமாகிக்கொண்டு வருகிறது. மக்களுக்கு கெட்ட எண்ணங்கள் எல்லாம் வளர்ந்து வருகிறது. அவைகளையெல்லாம் போக்குவதற்கு அவர்களுக்கு கல்வி அவசியமாக இருக்கிறது. முக்கியமாக படிப்பு இல்லாமல் இருந்தால் எந்த விதமான பலனையும் அடைய முடியாது. கல்வி கற்று பக்தியும் இருந்தால் நீதி, நேர்மை, நல்லொழுக்கம் முதலிய நல்ல பண்புடையவர்களாக இருக்க முடியும். நம்முடைய நாட்டில் ஏழை, பணக்காரர்கள் என்ற வித்தியாசம் இல்லாமல் எல்லோரும் படிக்க வேண்டும். ஏழை விவசாயிகள், அவர்களுடைய குழந்தைகள், மற்றும் எல்லோரும் நன்ருக படித்து முன்னேற்றமடைய வேண்டும். குடிக்க கஞ்சி இல்லாதவர்களும் கை அளவு அன்னம் இல்லாதவர்களும், பட்டி தொட்டி முதலிய இடங்களில் உள்ளவர்களும் படிக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அவர்கள் எல்லோரும் படித்து முன்னுக்கு வந்தால் நல்ல பலனை அடையலாம். அதற்காக அவர்களுக்கு எல்லாம் உணவு உடை முதலியவைகளைக் கொடுத்து நமது அரசாங்கம் படிக்க வைக்கிருர்கள். அதன்படி அவர்களுக்கு வேண்டிய உணவு, உடைகொடை வழங்குதல் போன்ற திட்டங்களை ஆரம்பித்து நடத்தி வருகிருர்கள். அதற்கு நம்முடைய அரசாங்கத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது. கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்துள்ள அந்தத் திட்டத்தை யாரும் போற்ருமல் இருக்க முடியாது என்பதை நான் எடுத்துக் கூற விரும்புகிறேன்.

ஒரு சிலர் கூறுகிருர்கள், இப்படிப்பட்ட உணவு, உடைகொடை வழங்கக் கூடிய திட்டமானது ஆசிரியர்களுக்கு பெரிய உபத்ரவத்தைக் கொடுத்திருக்கிறது என்று சொல்லுகிருர்கள். இது ஒரு புதிய கொள்கை அல்ல. பண்டைய காலத்திலேயே இப்படிப்பட்ட கொள்கை இருந்திருக்கிறது. பண்டைய காலத்தில் கோதானம் என்றும், வஸ்தர தானம் என்றும் அன்ன தானம் என்றும் பூமி தானம் என்றும் கொடுத்துக்கொண்டுதான் வந்தார்கள். அவைகளைப்பற்றி நாம் எவ்வளவோ புராணங்களிலும் பாடல்களிலும் படித்திருக்கிறோம். வந்தவர்களுக்கு எல்லாம் அள்ளி அள்ளிக் கொடுத்தான் வள்ளலபூபதி. கொடிபோட்டு சோறு படைத்தான் சிறுதொண்ட பக்தன். சாகும்பொழுதுகூட இல்லை என்று சொல்லாது தன் காதிலிருந்த குண்டலங்களை காது கிழியும்படி பிய்த்துக்கொடுத்தார் கர்ணன். அதனுலேயே சிலர் கர்ண பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லி வருகிறோம். இப்படியிருக்க இந்த நல்ல திட்டங்களை உபத்திரவம் என்று சொல்வது சரியல்ல. இந்த திட்டத்திஞல் அழுது வாட வேண்டியதாக இருக்கிறது என்று சொல்லுகிருர்கள். அதைக் கேட்டால் வருத்தப் படக்கூடிய நிலைதான் ஏற்படுகிறது. இப்படிப்பட்ட உணவு வழங்குதல், உடைகொடை கொடுக்கக்கூடிய திட்டமானது ரொம்பவும் வரவேற்கக் கூடியதுதான். இத்துடன் பல முன்னேற்றமான பல திட்டங்களை நமது அரசாங்கம் வகுத்திருக்கிருர்கள். வருஷம் தோறும் கல்லூரிகளையும் தொழில் கல்லூரிகளையும் அதிகப்படுத்திக்கொண்டே வருகிருர்கள். இதே சமயத்தில் நான் எனது குறைகளையும் சொல்வது முறையாகும் என்று நினைத்து சில குறைகளையும் எடுத்துக் கூற விரும்புகிறேன். அதாவது கல்வி மந்திரி அவர்களுக்கு நன்ருகத் தெரியும், அவரும் அறிவார்கள், நம்முடைய மாகாணத்திலே கல்வியிலே மிகவும் பிற்பட்ட ஒரு ஜில்லா இருக்கிறது என்ருல் அது சேலம் ஜில்லாதான். அதிலும் சேலம் ஜில்லாவில் வட சேலம் அதிக பின்தங்கி இருக்கிறது என்பதை அவர் நன்ருக உணருவார். வட சேலத்தில் ஒரு கல்லூரி அமைய வேண்டும் என்பது என் பேரவா. அப்படி அமைத்தால் அதை கண்டிப்பாக மக்கள் வரவேற்பார்கள் என்று நான் கருதுகிறேன்.

மற்ற எல்லா ஜில்லாக்களிலேயும் இரண்டிற்கு மேற்பட்ட கல்லூரிகள் இருக்கின்றன. ஆனுல் சேலம் ஜில்லாவிலே மட்டும் ஒரே ஒரு கல்லூரிதான் இருக்கிறது. அது முன்பு சேலம் நகரசபையால் நடத்தப்பட்டு இப்போது அரசாங்கத்தாரால் எடுத்துக் கொள்ளப்படவேண்டும் என்று நகரசபையில் கோரி இருக்கிருர்கள் என்று அறிகிறேன். சேலம் கல்வியிலே பின் தங்கி இருக்கிறது. எனவே வட சேலத்திலே ஒரு கல்லூரியை ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதே சேலத்தில் பெண்களுக்கு

உயர்நிலைப் பள்ளிகள் 4 இருக்கின்றன. மற்றும் ஒவ்வொரு தாலுகா தலை நகரங்களிலேயும் ஒவ்வொரு பெண்கள் பள்ளி இருக்கிறது. அதுவு மன்றி, மற்ற பொது உயர்நிலைப் பள்ளிகளில்கூட பெண்கள் படித்துக் கொண்டு இருக்கிறார்கள். ஆனால் அத்தனை பெண்களும், உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு பிறகு சேலத்திலே கல்லூரி இல்லாத காரணத்தால், கல்லூரிக்குப் போவதற்கு வாய்ப்பு இல்லாமல் தவிக்கின் றார்கள். எனவே சேலம் ஜில்லாவிலே, பெண்களுக்கென்று ஒரு தனிக் கல்லூரி அமைக்கவேண்டும் என்று நமது அமைச்சர் அவர்களை மிகவும் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். பொருள்படைத்தோர் குடும்பங்களிலே கூட தங்களுடைய பெண்களை வேறு ஜில்லாக்களுக்கு அனுப்பமுடியாமல் இருக்கிறார்கள். அவர்கள் கதியே அப்படி என்றால் நடுத்தர வகுப்பு குடும் பங்களின் பெண்கள் வேறு ஜில்லாக்களுக்கு சென்று படிக்கமுடியுமா. பொருளாதாரமும் இடமும் கொடுப்பதில்லை. தங்களுடைய பெண்களும் படித்து உத்தியோகம் செய்துதான் தங்கள் குடும்பம் முன்னுக்கு வர வேண்டும் என்கிற நடுத்தர குடும்பங்களுக்கு இடையூராக இருக்கிறது. எனவே தங்களுடைய ஜில்லாவிலே பெண்களுக்கு என்று ஒரு தனிக் கல்லூரி இருந்து விட்டால் அவர்களெல்லாம் படித்து முன்னேற முடியும். ஆகவே அவசியம் சேலம் ஜில்லாவிலே பெண்களுக்கு ஒரு தனிக்கல்லூரியும் வட சேலத்திலே ஒரு கல்லூரியையும் ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும், வெள்ளை அறிக்கையிலே தெரிவித்திருக்கும் குறிப்புகள் யாவும் வரவேற்கத்தக்கவை. குறிப்பாக பி.ஏ. வகுப்புகளிலே தமிழ் போதனை மொழி முறையை கொண்டுவருவதானது மிக மிக வரவேற்கத்தக்கது. ஆங்கிலத்தின்மேல் இருக்கும் விரோதத்தால்தான் இந்த முறையை கொண்டுவருகிறார்கள் என்று சிலர் கருதுவது தவறானது. இந்த முறை யை கொண்டுவரவேண்டுமென்று காங்கிரஸ் கட்சிக்காரர்களும் சொல்ல வில்லை—மாற்றுக் கட்சிக்காரர்களும் சொல்லவில்லை என்பதை தெரிந்து கொள்ளவேண்டும். தமிழை நாங்கள்தான் வளர்க்கின்றோம், தமிழுக் காக நாங்கள் உயிரைக்கூட விடுவோம் என்று சொல்பவர்கள், தமிழ் மொழி போதனை முறையை கல்லூரிகளிலே கொண்டுவருவதைப்பற்றி எதிர்க்கமாட்டார்கள் என்பது தெரிந்தபோதிலும் ஒரு சில கருத்துகளை எடுத்துக்கூற விரும்புகிறேன். தமிழ் மொழியிலே எல்லா பாடங்களையும் படிப்பதால் நன்றாக கருத்துகளை தெரிந்து கொள்ள முடியும். குறிப்பாக எஸ்.எஸ்.எல்.ஸி. வரையில் மாணவ மாணவிகள் எல்லா பாடங்களையும் தமிழிலேயே படிக்கிறார்கள். ஆங்கிலத்திலே அதிகம் தேர்ச்சி பெறாமல் இருக்கிறார்கள். ஆனால் கல்லூரிக்கு Pre-University வகுப்புக்கு சென்றவுடன், எல்லா பாடங்களையும் ஆங்கிலத்தில் படிக்க திக்குமுக்காடு கிறார்கள். தமிழிலே வந்துவிட்டால் சுலபமாக இருக்கும். Pre-University வகுப்பைக்கூட உயர்நிலைப்பள்ளிகளிலே சேர்த்துவிடப்போகும் திட்டம் வர வேற்கத்தக்கது.

ஆங்கில மொழியைப் படிக்க, Pre-University வகுப்புவரையில் அதிக ஊக்கம் கொடுக்கவேண்டும். தாய்மொழி தமிழிலேயே, கல் லூரிகளில் பொருளாதாரம், உலகியல், போன்ற எல்லா பாடங்களையும் நமது மாணவ மாணவிகள் படிப்பார்களானால், தமிழ் மொழியினிடத்திலே உள்ள ஆர்வத்தினால் பாடங்களை ஊக்கத்தோடும், உணர்ச்சியோடும், உற்சா கத்தோடும் படிப்பார்கள். எனவே இந்த தமிழ் போதனை முறை திட்டத்தைக் கொண்டுவந்தது மிக மிக வரவேற்கத்தக்கது என்று மறு முறையும் தெரிவித்துக்கொண்டு, இந்த வெள்ளை அறிக்கையையும், நமது கல்வி மந்திரியின் கோரிக்கையையும் வரவேற்று, என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

1–15 p.m **DEPUTY SPEAKER** : **The House will now rise for lunch and meet again at 3-30 p.m.**

**(The House then rose.)**

26th April 1960]

**(After lunch – 3-30 p.m.)**

**MR. SPEAKER** : The Hon. Minister will begin his reply at 4-45 or 4-30 ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : 4-30, Sir.

**SRI V. SANKARAN** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மானியக்கோரிக்கையை ஆதரித்துப் பேசுகையில் ஒரு சில கருத்துக்களைக் கூறுகிறேன். நம்முடைய ராஜ்யத்தில் பல நல்ல காரியங்கள் கல்வி சம்பந்தமாக நடந்துகொண்டு வந்திருக்கின்றன. முக்கியமாக கல்வியின் தரத்தை உயர்த்துவதற்காகவும், ராஜ்யமெங்கும் கல்வியைப் பரப்புவதற்காகவும், பாமர மக்களின் குழந்தைகளெல்லாம் கட்டாயமாக ஆரம்பக் கல்வி பெறுவதற்காகவும் பலவித நல்ல நடவடிக்கைகளெல்லாம் கையாளப்படுகின்றன. புதிது புதிதாக அதிகமாக உயர்நிலைப் பள்ளிகளும் கல்லூரிகளும் ஆரம்பிக்கப்பட்டு அவைகள் நல்ல வேலை செய்துகொண்டு வருகின்றன. ஆனால், இன்னும் பல நல்ல காரியங்களும் செய்யவேண்டியிருக்கின்றன. ராஜ்யத்தில் திறமையான ஆசிரியர்கள் கிடைப்பதற்காக, ஸர்வீஸ் கண்டிஷன், சூபர்-ஆனுவேஷன் பெனிபிட் போன்ற பல நல்ல காரியங்கள் ஏற்கெனவே செய்துகொடுக்கப்பட்டிருக்கின்றன. இருந்தாலும், இன்னும் செய்யவேண்டிய காரியங்கள் ஒன்றிரண்டு இருப்பதைத் தெரிவிக்கிறேன். போதுமான நிதி வசதி இருந்தால், அதையும் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன். இன்னும் செய்யவேண்டுமென்று சொல்வதால் ஏதோ இதுவரையில் ஒன்றும் அசையவில்லை என்று நான் சொல்வதாக எடுத்துக்கொள்ளக்கூடாது. பல நல்ல காரியங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அதோடுகூட ஒன்றிரண்டு காரியங்களை அதிகமாகச் செய்ய வேண்டிய அவசியம் இருக்கிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

ஹையர் கிரேட் ட்ரெயினிங், செகன்டரி கிரேட் ட்ரேயினிங் பெற்றவர்களுக்கு ஸ்டைபெண்ட் ஓரளவு கொடுக்கப்பட்டு வருகிறது. அது பழைய விலைவாசி அடிப்படையில் நிர்ணயிக்கப்பட்ட ஸ்டைபெண்டு தொகையாகும். பி.டி. பயிற்சி பெறுவர்களுக்கு ஸ்டைபெண்டு கிடையாது. பி.டி. ட்ரெயினிங் காலேஜிலே முழு ஸ்ட்ரெங்த் இருப்பது கிடையாது. வரவர குறைந்து கொண்டிருக்கிறது. அப்படிப்பட்ட நிலைமையில், திறமையான தேர்ச்சி பெற்ற ஆசிரியர்களை உண்டாக்கவேண்டுமென்றால், ஸ்டைபெண்டு தொகையை உயர்த்த வேண்டும். கூடுமானவரையில் பயிற்சி பெறுகிறவர்கள் தாங்களே செலவு செய்துகொள்ளக்கூடிய பொறுப்பு இல்லாத வகையில் ஸ்டைபெண்டு கொடுத்தால் திறமையுள்ள தேர்ச்சி பெற்ற ஆசிரியர்களை உண்டாக்க முடியும். அந்த முறையில்தான் கல்வித் தரத்தை உயர்த்த முடியும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

புது மாறுதலின்படி, மானேஜ்மென்டாரின் மூலமாகக் கொடுக்காமல், சர்க்காரே நேரடியாக ஆசிரியர்களுக்கு சம்பளத் தொகை கொடுக்கவேண்டுமென்ற நல்ல மாறுதல் ஏற்பட்டிருந்தது. ஆனால், இப்பொழுது பழைய முறைக்கே "ரீ-ட்ரேஸ்" செய்துவிட்டார்கள். அதாவது மானேஜ்மென்டார் மூலமாகத்தான் சம்பளம் கொடுக்கவேண்டுமென்று செய்துவிட்டார்கள். ஏதோ நடைமுறையில் ஏற்பட்ட சிக்கல் காரணமாக கைவிடப்பட்டது என்று நினைக்கிறேன். திடீரென்று கைவிடப்பட்டது சரியல்ல. ஏதோ மணி ஆர்டர் கமிஷன் செலவு ஏற்படுவதால் கைவிடப்பட்டாலும், நல்ல உன்னத நோக்கத்திற்காக ஆரம்பிக்கப்பட்ட திட்டம் திரும்பவும் கொண்டுவரப்பட வேண்டும். இரண்டுக்கும் நடுவில், "வயா மீடியா" வாக ஒரு திட்டத்தைக் கொண்டுவந்து, நல்ல நோக்கத்தை நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களுடைய சம்பள விகிதங்கள் மூன்று விதமாக இருக்கிறது. லோகல் போர்டு, கார்பரேஷன், கவர்மெண்ட் ஸ்கேல்கள் வெவ்வேறு விதமாக இருக்கின்றன. லோகல் போர்டு ஸ்கேல் குறைந்த

ஸ்கேலாக இருக்கிறது. மதுரை ஜில்லா போர்டு லோகல் போர்டு,ஸ்கேலைக் கொடுத்துக்கொண்டு வருகிறது. சம்பளக் கமிஷன் அதைப்பற்றி தெரிவித்திருந்தாலும், தெரிவிக்காவிட்டாலும், ஆசிரியர்களைப் பொறுத்தவரையில் ஒரே மாதிரியான, யூனிபார்ம் ஸ்கேல் ஆப் பே இருக்கும்படியாகச் செய்ய வேண்டும். ஒரே மாதிரியான க்வாலிபிகேஷன் இருக்கும்போது ஒரே மாதிரியான சம்பள விகிதம் இருக்கும்படியாகச் செய்யவேண்டும் என்று, கேட்டுக் கொள்கிறேன்.

என். ஜி. ஒ-க்களுக்கு இருக்கும் கன்ஸெஷன்கள் எலிமெண்டரி ஸ்கூல், செகண்டரி ஸ்கூல் ஆசிரியர்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றன. கல்லூரிகளில் இருக்கும் லெக்சரர்களுக்கும், டெமான்ஸ்ட்ரேடர்களுக்கும், அவர்கள் 300 ரூபாய்க்குக் குறைந்த சம்பளம் வாங்குபவர்களாக இருந்தால், அவர்களுக்கும் அந்த கன்ஸெஷன் விஸ்தரிக்கப்படவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்ளுகின்றேன். மெடிகல் பெஸிலிடீஸ், ஹௌஸிங் அலவன்ஸ் இந்த இரண்டு சலுகைகளும் ப்ரைவட் எய்டெட் ஸ்கூல்களில் இருப்பவர்களுக்கும் கொடுக்கப்படவேண்டும்.

பென்ஷன் கொடுப்பதில், முதல் கிரேட் பண்டிட்கள், பிஸிகல் டைரக்டர்கள் இவர்களைத் தவிர மற்றவர்களுக்கு பி.டி.-ப் பயிற்சி பெற்றவர்களுக்கு 25 சத விகிதம் பென்ஷன் கொடுக்கப்படுகிறது. மற்றவர்களுக்கு முப்பது ரூபாய் மட்டும் கொடுப்பது என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அவர்களுக்கும் 25 சத விகிதம் அளவுக்குப் பென்ஷன் கொடுக்க முடியுமா என்று அரசாங்கம் ஆலோசிக்கவேண்டும். அதையும் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

காலேஜ் லெக்சரர்களுக்கு அதிகமாக "பிராஸ்பெக்ட்ஸ்" கிடையாது. ஏதோ ப்ரின்ஸிபலாக வரலாம். ஆகையால், ப்ரைவேட் காலேஜில் உள்ள டெமென்ஸ்ட்ரேடர்கள், லெக்சரர்கள் போன்றவர்களுக்கும் பென்ஷன் சலுகைகள் விஸ்தரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்கு இருக்கும் சலுகையை கல்லூரி லெக்சரர்களுக்கும் பரப்பவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

ஆசிரியர்கள் ரிடையர் ஆகும் வயதை உயர்த்தவேண்டும். அப்படி உயர்த்துவதன் மூலம் ஆசிரியர்களின் தரம் உயரும். என்.ஜி.ஒ.-க்களுக்கு 55 என்று இருக்கும்போது ஆசிரியர்களுக்கு மட்டும் என்60 ஆக்கவேண்டுமென்று கேட்கலாம் ? கிழவர்கள் போனால், வரும் இளைஞர்களுக்கு இடம் கொடுக்கலாமே என்றும் சொல்லலாம். அது சரியல்ல. என்.ஜி.ஒ-க்களுக்கு சர்வீஸ் இருக்கும்போது ஓரளவு ப்ராஸ்பெக்ட்ஸ் இருக்கிறது. லோயர் டிவிஷன் க்ளார்க், அப்பர் டிவிஷன் க்ளார்க் ஆகலாம், அப்பர் டிவிஷன் க்ளார்க் சூபரின்டென்ட் ஆகலாம். அதற்கு மேலேயும் வர ப்ராஸ்பெக்ட்ஸ் இருக்கிறது. ஆனால் ஹைஸ்கூல் உபாத்தியாயர் ஹெட்மாஸ்டர் ஆகலாம். காலேஜில் இருப்பவர் பிரின்சிபாலாக வரலாம். அதிகமாக ப்ராஸ்பெக்ட்ஸ் இல்லை. 55 வயது ரிடையர் ஆகும் வயது என்று இருப்பதை 60 வரைக்கும் உயர்த்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இந்தச் சலுகையை அவர்களுக்குக் கொடுக்கவேண்டும். வயது ஆகும்போது அவர்களுடைய "எபிஷியன்ஸி" இன்னும் அதிகப்படும், என்பதையும் கருத்தில்கொண்டு 60-க்கு ரிடையர்மெண்ட் வயதை உயர்த்தவேண்டும். எய்டெட் ஸ்கூலில் 60-வது வயது வரை போக வசதி இருக்கிறது. 55 வயது என்று இருப்பதை 60 வரையில் மாற்றிவிடலாம் என்று சொல்லிக்கொள்கிறேன்.

மதுரை சம்பந்தமாக சில விஷயங்கள் சொல்லவேண்டியிருக்கிறது. அங்கே ஐந்து கலைக் கல்லூரிகள் இருக்கின்றன. மருத்துவக் கல்லூரி ஒன்றும், பொறியியற் கல்லூரி ஒன்றும் இருக்கிறது. முதலமைச்சர் அங்கு வந்திருந்தபோது, ஒரு விவசாயக் கல்லூரியும், விலக்கு மருத்துவக் கல்லூரியும் அங்கே சீக்கிரம் ஆரம்பிக்கப்படும் என்று உறுதி கூறினார்கள். அது சந்தோஷத்திற்குரிய செய்தி. சட்டக் கல்லூரியும், ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியும் ஆரம்பித்துவிட்டால் மதுரையைப் பொறுத்தவரையில் பூரணமாகப் போய்விடும்.

26th April 1960] [Sri V. Sankaran]

மதுரையைச் சுற்றி நெசவுத் தொழில் நடைபெறுகிறது. நூற்புத் தொழில், மோட்டார் தொழில், இவை மதுரையில் சிறப்பாக விளங்கி வருகின்றன. இந்த இரண்டு தொழில்கள் சம்பந்தமாக நுட்பக் கல்விக்கான டிப்ளமா கோர்ஸ் நடத்துவதற்கு பாலிடெக்னிக்கிலே வகை இருக்க வேண்டுமென்று தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

உபாத்தியாயர்களுக்கும் மானேஜ்மெண்டாருக்கும் உள்ள அக்ரிமெண்ட் அப்போதைக்கப்போது மாற்றியமைக்கப்படவேண்டும். ஏதாவது அரசாங்க உத்தரவு வந்தால், "நாட் பைண்டிங் ஆன் மானேஜ்மெண்ட்" என்று அவர்கள் தள்ளிவிடுகிறார்கள். இதனால் பல வசதிகள் உபாத்தியாயர்களுக்குக் கிடைக்காமல் போகின்றன. அப்பீல் செய்வதற்குள்ள உரிமையெல்லாம் பாதிக்கப்பட்டிருக்கிறது. "பெண்டிங் என்க்வயரி ஆன் அப்பீல்" என்றாலும் அவர்கள் வேலையிலே இருந்துகொண்டு வரவேண்டுமென்று இன்ஸ்ட்ரக்ஷன் வந்திருந்தாலும், அது ப்ரைவேட் மானேஜ்மெண்டைக் கட்டுப்படுத்தாது என்று சொல்லும் நிலைமை இருக்கிறது. அரசாங்க உத்தரவு வரும்போது, அப்போதைக்கப்போது அது அப்ளிக்கபிள் ஆக இருக்க வேண்டும். அவைகளை அக்ரிமெண்டில் இன்கார்ப்பரேட் பண்ண உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும். சாக்குப் போக்குச் சொல்லித் தப்பிக்க இடம் கொடுக்கக்கூடாது. அக்ரிமெண்ட் சம்பந்தமாக எல்லாவற்றையும் அப்போதைக்கப்போது அரசாங்க உத்தரவைப் பார்த்துச் சேர்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

"சேஞ்ஜ் ஓவர்" ஏற்படும்போது பல ஹைஸ்கூல்கள் பஸ்ட் பார்ம்மை எடுக்க வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. அப்பொழுது உபாத்தியாயர்களை என்ன செய்யவேண்டுமென்று யோசிக்கவேண்டும். அதையும் சிந்தித்து சரியான வகையில் முடிவு எடுக்கவேண்டும்.

பல லோகல் போர்டு ஹைஸ்கூலிலே பிராவிடெண்ட் பண்டு காண்ட்ரிபூஷன் இல்லாமல் இருக்கிறது பல வருஷங்களாக. இரண்டு வருஷம் இருந்தாலும் பிராவிடெண்ட் பண்டு சௌகரியம் அவர்களுக்கு அளிக்கப்படவேண்டும். ஒன்று, இரண்டு முதல் ஐந்து வகுப்புகளில் எந்த வகுப்பில் இருந்தாலும் செகன்டரி கிரேட் ஸ்கேல் கொடுக்கவேண்டும். இப்பொழுது இல்லை என்று சொல்லப்படுகிறது. அவர்களுக்கு உரிய பங்கைக் கொடுத்து உபாத்தியாயர்களுடைய நிலையை உயர்த்தவேண்டும். லோகல் போர்டு பள்ளிக்கூடங்களிலும் நல்ல அறிவாளிகளை. பட்டம் பெற்றவர்களாகப் போட்டு நடத்தவேண்டும் என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்ளுகின்றேன்.

**Sri M. S. SELVARAJAN** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தக் கல்வித் துறை மான்யத்தை ஆதரிக்கிறேன். நமது ராஜ்ய அரசாங்கம் திட்ட இலக்கை மீறி ரூ. 1,82,00,000 அதிகமாக செலவு செய்திருக்கிறார்கள் என்பது பாராட்டுதலுக்குரியது. அதுவும் சிறப்பாக ஆரம்பக் கல்விக்காக செலவில் 100-க்கு 50 ரூபாய் செலவு செய்யப்பட்டிருக்கிறது என்பதை பார்க்கிறபொழுது ஏழை எளிய குழந்தைகளின்பால் இந்த அரசாங்கம் எவ்வளவு இரக்கம் காட்டியிருக்கிறது என்பதற்கு ஒரு சிறந்த அத்தாட்சி. சமீப ஐந்து வருஷ காலத்திற்குள் ஏறத்தாழ ஒரு லட்சம் குழந்தைகள் புதியதாக பள்ளிகளுக்கு கொண்டுவரப்பட்டிருக்கிறார்கள் என்றால், அதற்கு அத்தாட்சியாக நாம் எடுத்துக்கொண்ட முயற்சி இந்த ராஜ்யத்தில் மட்டுமல்லாமல் தேசத்தில் எல்லோராலும் பாராட்டப்பட்டு சர்வ தேசங்களும் இந்த ராஜ்யத்திற்கு மகிமை கொடுக்கிறது, இந்த தேசத்திற்கு மகிமை கொடுக்கிறது என்று பாராட்ட விரும்புகிறேன். அத்தகைய நல்ல முயற்சியில் ஒன்று இலவசமாக உணவு அளிப்பது. இரண்டாவதாக உடை அளிப்பது. அது மட்டுமல்லாமல் பாடசாலை அபிவிருத்திக்காக நாம் எடுத்துக் கொண்டிருக்கக்கூடிய முயற்சி ஜனங்களின்மீது நம்பிக்கை வைத்திருக்கக்கூடிய நல்ல திட்டங்களில் ஒன்று. இத்தகைய நல்ல அம்சங்களின் பேரில், பாடசாலை அபிவிருத்தியின் முயற்சியில் ஏறத்தாழ ரூ. 5,26,00,000 பொருள் மதிப்பின் பெயரால் நமக்கு கிடைத்திருக்கிறது. இனமாக கிடைத்த பொருளுக்கு கொடுக்கக்கூடிய மதிப்பைவிட,

[Sri M. S. Selvarajan] [26th April 1960

கோடிகோடி ரூபாய் பெறுமான நல்லெண்ணம் நமக்கு, இந்த தேசத்தின் குழந்தைகளுக்காக உதவியாக கிடைத்திருக்கிறது என்பதை கருத்தில் கொள்ளவேண்டும். அதை அடுத்து இந்த ராஜ்ய சர்க்கார் வரக்கூடிய ஜெனரேஷன், அதாவது சிறு குழந்தைகளின் நலிந்த உள்ளத்தில் நஞ்சாக பாதிக்கக்கூடிய அளவுக்கு, சிறு வயதிலேயே படிக்கும்பொழுது மேல், கீழ் என்ற பாகுபாடு இருக்கவேண்டாம், உணர்ச்சி இருக்க வேண்டாம், என்று கருதி செல்வந்தனுடைய பிள்ளை, ஏழை எளியவனுடைய பிள்ளை என்ற எண்ணம் வேரோடு அறுக்கப்படுவதற்கான ஒரு திட்டத்தை வகுத்து வருகிறது. இந்தத் திட்ட அடிப்படையில்தான் எல்லா குழந்தைகளுக்கும் ஒரேபோல உணவு, உடை அளிப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. இந்த நல்ல திட்டத்தை அரசாங்கம் துரிதமாக நிறைவேற்றி வரும் என்று தெரியும்பொழுது, இந்த ராஜ்யத்திற்கு அதனால் கிடைத்திருக்கக்கூடிய நன் மதிப்பு, நல்ல அத்தாட்சி இதைப் பார்த்து பொறுமைப்படக் கூடியவர்கள் அழுகாது அழுது குறைகளைச் சொன்னாலும் கூட, இந்த ராஜ்ய சர்க்கார் தாங்கள் எடுத்துக் கொண்டிருக்கக்கூடிய நல்ல காரியங்களை துரிதமாக நீடித்து நடத்துவதற்கு முன்னுக்கு நடக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இந்த ராஜ்ய சர்க்கார் சமீப காலத்தில் பின்பற்றக்கூடிய ஒரு திட்டத்தின் பெயரால் ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும், இருக்கக்கூடிய விகிதாசாரத்தில் ஏற்பட்ட மாறுதல் காரணமாக பல ஆசிரியர்கள் கூட வேலை வாய்ப்பை இழக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. வருகிற ஆண்டில் ஐந்தாவது வகுப்பிலிருந்து ஆங்கிலம் போதிக்கப்படுவதற்கு ஒரு திட்டம் வகுத்திருக்கிறார்கள். இதனால் நான் அறிந்தவரையில் திருநெல்வேலி ஜில்லா போர்டில் ஏறத்தாழ 400 ஆசிரியர்கள், ஹயர்-கிரேடு ஆசிரியர்கள் வெளியே போகவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. போன வருஷமே ஜில்லா போர்டார்கள் புத்திசாலித்தனமாக 150 செகண்டரி ஆசிரியர்களை ஹையர் கிரேடு பிளேஸில் நியமித்திருக்கிறார்கள். அதன் காரணமாக 250 ஹையர் கிரேடு ஆசிரியர்கள் வேலை வாய்ப்பு இழக்க நேரிடும். அதுபோலவே தனியார் நடத்தக்கூடிய பாடசாலைகளில் 400, 500 ஹையர் கிரேடு வாத்தியார்கள் வேலை வாய்ப்பு இழக்கக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. இதற்கு மாறாக அரசாங்கம் செய்யக்கூடியது ஒன்றே ஒன்றுதான் உண்டு. பட்ஜெட்டில் இந்த வருஷத்தில் 6 முதல் 7 வயது வரையில் இருக்கக்கூடிய எல்லாக் குழந்தைகளுக்கும் ராஜ்யத்தில் மூன்றில் ஒரு பகுதி இடங்களில் கட்டாயக் கல்வி அளிப்பதற்கு திட்டமிடப்பட்டிருக்கிறது. அதன் மூலம் ஏராளமாக புதிய பாடசாலைகள் திறக்கப்பட்டாலும், இவ்வளவு ஆசிரியர்களுக்கும் அந்த பாடசாலைகளில் வேலை வாய்ப்பு கிடைக்குமா என்று சந்தேகப்படவேண்டியிருக்கிறது. 6-வது வயதிலிருந்து 7-வது வயது வரையில் என்பதற்கு பதிலாக, 7-லிருந்து 8-வது வயது வரையில் உள்ள மாணவர்களுக்கு கட்டாயக் கல்வி அளிக்கக்கூடிய அளவுக்கு துரிதமாக இந்த வருஷத்தில் அந்த திட்டத்தை அமுல் நடத்தக்கூடிய நிலைமை இருக்குமானால், ஒருக்கால் ஆசிரியர்கள் வேலை வாய்ப்பை இழக்கக்கூடிய நிலைமையை தவிர்க்க முடியும் என்று நான் பணிவோடு அபிப்பிராயப்படுகிறேன். அது தவிர, ஹையர் கிரேடு ஆசிரியர்களில் சிறந்த அளவுக்கு பணியாற்றக்கூடிய அனுபவம் வாய்ந்தவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு ஒரு "ரெபரெஷர் கோர்ஸ்" கொடுத்து அனுபவம் உள்ள ஆசிரியர்களாக இருக்கக்கூடியவர்களை ஐந்தாவது வகுப்பில் ஆங்கிலம் போதிப்பதற்கு அமர்த்தலாமா என்பதைப்பற்றி அரசாங்கம் யோசிக்கவேண்டும். ஐந்தாவது வகுப்பிற்கு போதிக்கக்கூடிய ஆசிரியர்கள் 10-வது வகுப்பு வரை நிச்சயமாக பாஸ் செய்திருக்கவேண்டும். செகண்டரி கிரேடு டிரையினிங் ஆசிரியர்களாக இருக்கவேண்டும் என்று இருந்தால், தனியாக ஆங்கிலம் போதிப்பதற்கு என்று சில செகண்டரி கிரேடு ஆசிரியர்களை போடவேண்டுமா என்று யோசிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். லேபர் பாடசாலைகளில், ஹையர் கிரேடு ஆரம்ப பாடசாலைகளாக பெரும்பாலும் இருக்கும், ஹையர் கிரேடு ஆசிரியர்களாக இருப்பவர்கள் அந்த இடத்தில் வேலை வாய்ப்பு இழக்கக்கூடும். அவர்களுக்கு வேறு வேலை வாய்ப்பு ஏற்படுத்துவதற்கு இந்த அரசாங்கம் என்ன

26th April 1960] [Sri M. S. Selvarajan]

திட்டம் வைத்திருக்கிறது என்பதை ஆலோசிக்கவேண்டும். அதுபோலவே, மாடல் ஸ்கூல்களில் 25 பிள்ளைகளுக்கு ஒரு ஆசிரியர் என்று ஸ்பெஷலாக அனுமதி கொடுக்கப்பட்டிருப்பதாக நான் அறிகிறேன். சில இடங்களில் ஸ்பெஷலாக குறிப்பிட்ட காலத்திற்கு ஏறத்தாழ 10 பிள்ளைகள் வித்தியாசம் இருந்தாலும், 35 பிள்ளைகளுக்குப் பதிலாக 25 பிள்ளைகள் இருந்தாலும் கூட ஸ்பெஷலாக அனுமதி கொடுப்பதின் மூலம் இத்தகைய ஆசிரியர்கள் வேலை வாய்ப்பை இழப்பதை தவிர்க்க முடியுமா என்பதை யோசிக்கவேண்டும். சென்ற காலத்தில் 26 பயிற்சி பள்ளிகள் வகுப்புகள் அதிகமாக இருந்ததை இப்பொழுது 50 ஆக அதிகப்படுத்துவதில் என்ன நியாயம் இருக்க முடியும் ? இவ்வளவு ஆசிரியர்களுக்கும் நிச்சயமாக வேலை வாய்ப்பு இருக்கும், யாரும் வேலை இழக்கவேண்டிய கஷ்டம் இருக்காது என்று அரசாங்கம் உறுதி கொடுக்க முடியுமா என்பதை சற்று சிந்தித்து ஜாக்கிரதையாக பார்த்து செய்யவேண்டும்.

கிராமங்களில் 300-க்கு மேற்பட்ட ஜனத்தொகை உள்ள இடங்களில் ஓராசிரியர் பள்ளிகள் பெரும்பாலும் திறக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் ஒரு சில இடங்களில் 300-க்கும் குறைவாக ஜனத்தொகை இருந்தாலும் கூட, 40, 45 பாடசாலை வயது வந்தவர்கள் சேர்ந்து ஒரு இடத்தில் இருந்தால், 300-க்கு குறைவாக ஜனத்தொகை உள்ள இடங்களில் வேண்டிய அளவுக்கு பிள்ளைகள் இருந்தால், அவ்விடங்களில் ஓராசிரியர் பள்ளிகள் திறப்பதன் மூலமாக மற்ற ஆசிரியர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்க முடியுமா என்பது பற்றியும் அரசாங்கம் ஆலோசிக்கவேண்டும். இதுபோலவே சமீப காலத்தில் ஒரு நல்ல உத்தரவு இடப்பட்டிருக்கிறது. 1958 வரையில் செகண்டரி கிரேடு ஆசிரியர்களாக இருந்தவர்கள் எந்த இடத்தில் வேலை பார்த்தாலும் அவர் களுக்கு செகண்டரி கிரேடு ஆசிரியர் சம்பளம் கொடுக்கப்படவேண்டும் என்று உத்தரவு இடப்பட்டிருக்கிறது. சில இடங்களில் இருக்கக் கூடிய ஜில்லா கல்வி அதிகாரிகள், பல இடங்களில் இருக்கக்கூடிய ரேஞ்சு டெப்யூடி இன்ஸ்பெக்டர்கள் அந்த உத்தரவை சரிவர புரிந்துக்கொள்ளாமல் ஆசிரி யர்களாக இருப்பவர்களுக்கு அந்த உத்தரவின் பலனை, அதற்குறிய நன்மையை அளிக்க முடியவில்லை என்பதாக நான் கருதுகிறேன். அது எந்த அளவுக்கு சரி, தப்பு என்று தெளிவுபடுத்தி, அப்பேற்பட்ட குறை பாடுகள் இல்லாமல் பார்த்துக்கொள்ளவேண்டுமென்று நான் அரசாங் கத்தை கேட்டுக்கொள்ளுகின்றேன். இம்மாதிரி " ஸ்லாப் ரேஷியோ " இருக் கக்கூடிய இடத்தில் சில இடங்களில், தஞ்சாவூர் ஜில்லாவிலே நாகப்பட்டிண த்தில் புதுவூர் என்ற இடத்தில் 136 பிள்ளைகள் ஒரே வகுப்பில் பிரிவினை இல்லாமல் இருப்பதினால் கஷ்டமாக இருக்கிறது. " ஸ்லாப் ரேஷியோவினால் " பல இடங்களில் கஷ்டமான நிலை ஏற்படுட்டிருக்கிறது. குறிப்பாக பஞ்சாயத்து பாடசாலைகளில் இம்மாதிரி நிலைமை இருக்கிறது. பஞ்சாயத்து பாடசாலைகளில் இருக்கக்கூடிய செகண்டரி கிரேடு ஆசிரியர் களுக்கு ரூ. 45-85 சம்பளம் தரப்படாத நிலைமை இருக்கிறது. பஞ்சாயத்து வருமான அடிப்படையிலே ரூ. 37-45 என்ற சம்பள விகிதத்தில் தான் அவர்களுக்கு சம்பளம் அளிக்கப்படுகிறது. அம்மாதிரி சம்பளத்தை பஞ்சாயத்துகள் அந்த ஆசிரியர்களுக்கு கொடுக்க வேண்டுமென்று விட்டு விடுவது சரியல்ல. மற்ற பகுதியில் இருக்கக்கூடிய செக்ண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கு கிடைக்கக்கூடிய சம்பளத்தைப் போல் இவர்களுக்கும் கிடைக்கும்படியாக செய்வதற்கு வேண்டிய மான்யம் கொடுத்து, சர்க்கார் இதை அமுல் நடத்த முன்வரவேண்டும். சில ஜில்லா போர்டுகள் 10 ஆசி ரியர்களுக்கு மேல் 11-வது அடிஷனல் ஆசிரியர் போட்டுக்கொள்ளுவ தற்கு வாய்ப்பு இருந்தாலும், வருமானம் காரணமாக அதை அமுல் நடத்துவது இல்லை. ஆசிரியர்கள் ரஜா காலங்களில், அவர்களுக்கு பதிலாக தகுந்த ஆசிரியர்கள் நியமிக்கப்படுவதில்லை. இதுபோன்ற சிரமங்கள பல இடங்களில் ஏற்பட்டிருக்கின்றன. அதையெல்லாம் ஜாக்கிரதையாக பார்த்து அரசாங்கம் அதற்குறிய வழிவகைகள் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

நேரடியாக ஆசிரியர்களுக்கு சம்பளம் கொடுப்பதிலே மணியார்டரில் அனுப்புகிறார்கள். அப்பொழுது க்ஷேம நிதிக்காக ஆசிரியருடைய பங்கை ஜில்லா கல்வி அதிகாரிகள் தங்களுடைய சொந்த கணக்கில் வைத்துக்

[Sri M. S. Selvarajan] [26th April 1960

கொண்டிருக்கிறார்கள். அதை ஆசிரியர்களுடைய கணக்கில் ஏற்றியாகவேண்டும். சிற்சில இடங்களில்—1—11—1956 முதல் என்று நினைக்கிறேன் வேலை பார்த்துக்கொண்டிருந்த செகண்டரி கிரேடு ஆசிரியர்கள் புதியதாக ஹையர் எலிமெண்டரி ஸ்கூலில் வேலை பார்ப்பார்களேயானால், அவர்களுக்கு செகண்டரி கிரேடு ஸ்கேல் கிடைத்துக்கொண்டிருந்தது. புதியதாக ஒன்று முதல் நான்காவது வகுப்பு வரையில் இருக்கக்கூடிய பாடசாலைகளுக்கு மாற்றப்படுவார்களேயானால், ஹையர் கிரேடு ஸ்கேலுக்கு அவர்கள் வரவேண்டியிருப்பதால், அவர்களுக்கு ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. இதை அரசாங்கம் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஹையர் கிரேடு ஆசிரியர்களுக்கு மிகவும் குறைந்த சம்பளம் ரூபாய் 30—33 தான். செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கு ஓரளவுக்கு சம்பளம் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. சமீப காலத்தில் சம்பளக் கமிஷன் அறிக்கை மூலம் வந்திருக்கக்கூடிய சிபார்சுகள் பரிசீலனை செய்யப்பட்டு, ஹையர் கிரேடு ஆசிரியர்களுக்கும், செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கும், இன்னும் ஆசிரியர்கள் துறையில் இருக்கக்கூடியவர்களுக்கும் எந்த வகையில் எவ்வளவு தூரம் கணிசமான உயர்வு கொடுக்க முடியுமோ அவ்வளவு தூரம் கொடுக்கப்படும் என்று அமைச்சர் அவர்கள் வாக்குறுதி அளித்திருக்கிறார்கள். அதுபற்றி மகிழ்ச்சி அடைகிறேன். அந்த வாக்குறிதியை உறுதிப்படுத்தி ஆசிரியர்களுக்கு ஒரு நல்ல வாய்ப்பை அளிப்பார்கள் என்று நினைக்கிறேன். (மணியடிக்கப்பட்டது). **One minute please, Sir.** சில இடங்களிலே, டிவிஷனல் இன்ஸ்பெக்டர்கள் மானேஜ்மெண்டை சட்டபூர்வமாக எடுத்துக் கொள்ளச் சொல்வதில் சிரமங்கள் இருக்கின்றன. மானேஜ்மெண்டை மாற்றி யமைத்து விட்டால், அவர்கள் நிராகரித்துவிட விடலாம்.

தூத்துக்குடியில் வி.ஓ.சி. எஞ்ஜினியரிங் காலேஜ் வைக்க வேண்டும் என்று அந்தப் பகுதியில் இருக்கக் கூடிய ஒரு தனவான் குருசாமி நாடார் (?) சகோதரர், பல ஆயிரக் கணக்கான ரூபாய்களைக் கொடுக்க இருக்கிறார்கள். அந்த எஞ்ஜினியரிங் காலேஜை ஏற்படுத்த அரசாங்கம் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். நம் மாகாணம் எல்லோரும் நம்மைப் பார்த்து பின்பற்றும் நிலையில் வேலை வாய்ப்புகள் குறையாமல் தைரியமாக காரியங்களைச் செய்யவேண்டும். இதுகாறும் பல நல்ல காரியங்களைச் செய்து வந்திருக்கும் இந்தத் துறையினரையும், அரசாங்கத்தையும் பாராட்டி, இந்த மானியத்தை வரவேற்கிறேன்.

Sri P. S. CHINNADURAI : கனம் சபாநாயகர் அவர்களே, கல்வி இலாகாவிற்கு, இவ்வளவு பெரிய மானியத் தொகையை கோரியிருக்கிறார்கள். இது நம் ராஜ்ய வருமானத்தில் கணிசமான தொகை தான். இவ்வளவு பெரிய தொகை செலவழித்த பிறகும், போதிய அளவு தொகை இன்னும் ஆரம்பக் கல்விக்குச் செலவழிக்க இடம் இருக்கிறது. நம் ராஜ்யத்தில் சுமார் 17 லட்சம் பள்ளிப் பருவம் அடைந்த குழந்தைகள், பள்ளி வசதியில்லாமல் தவிக்கிறார்கள் என்பதை நாம் மறக்கக் கூடாது. கல்வி எந்த அளவுக்குப் பெருகி யிருக்கிறதோ அதற்கு நாம் பெருமை கொள்ளலாம். அந்தப் பெருமையிலே, நாம் ஆற்ற வேண்டிய கடமையையும், நாம் இன்னும் செய்ய வேண்டிய பணியையும் நினைத்துப் பார்க்க வேண்டும். மறந்துவிடக் கூடாது. இந்த பள்ளிப் பருவம் அடைந்திருக்கும் பிள்ளைகளை இந்த வரும் ஆண்டில் மூன்றில் ஒரு பங்கு கூடியவரைக்கும் இந்தக் கல்வி முறையில் கொண்டுவர இருப்பதாக சர்க்கார் கூறியிருக்கிறார்கள். இதனைப் பரீட்சார்த்தமாக என்று இல்லாமல் உண்மையாகச் சரிவர வழிவகை செய்தால் இரண்டு மூன்று ஆண்டு காலத்தில், எல்லாப் பிள்ளைகளுக்கும் பள்ளிக்குச் செல்லும் வாய்ப்பு ஏற்படலாம். அந்த வகையில் உண்மையான முயற்சிகள் எடுக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்ளுகிறேன்.

இதிலே 6 வயது, 7 வயது என்பதற்குப் பதிலாக, 6, 7, 8 வயது வரை என்று வைப்பது பொருத்தமாக இருக்கும். கல்வி வளர்ச்சிக்கு மிகவும் பிரதானமாக உள்ளவை, ஆசிரியர்கள், பாட புத்தகங்கள்,

26th April 1960] [Sri P. S. Chinnadurai]

போதனுமொழி, சமூக சூழ்நிலை முதலியவைகள். அப்படிப் பார்க்கும் போது, ஆசிரியர்கள் நிலையை எந்த அளவில் வைத்திருக்கிறோம் என்று அமைச்சரவர்களைக் கேட்க விரும்புகிறேன். ஆசிரியர்கள் நிலையைப் பார்த்து அவர்கள் ஊதியத்தை உயர்த்த வேண்டும் என்று இந்த மன்றத்திலே, இதற்கு முன்னுலும், இப்பொழுதும் கூறியிருக்கிறார்கள். ஏதோ சம்பளக் கமிஷன் சிபாரிசுகள் வந்திருக்கின்றன, பரிசீலனை செய்துக் கொண்டு இருக்கிறோம் என்று சர்க்கார் தரப்பிலே கூறப்படுகிறது. சிபாரிசுகள் எந்த அளவில் இருக்கும் என்று ஊகித்துச் சொல்ல முடியாவிட்டாலும் அதிக பட்சம் ரூபாய் 5, 10 இருக்கலாம். அதைவிட அதிகப்படியான உயர்வு கொடுத்தால்கூட, சரியான பரிகாரம் அளித்ததாக ஆகாது. அவர்கள் அவ்வளவு எளிய, தரித்திர நிலையில் இருக்கிறார்கள். ஆசிரியர்களைத் தரித்திரப் பிண்டங்களாக வைத்துக்கொண்டு இருந்தால், நல்ல கவித்தரம் இருக்காது. தீர்க்கமாக சிந்தித்து, அவர்களுக்குச் சரியான சம்பள வசதியைக் கொடுக்க வேண்டும். அவர்களைப் பெரிய பணக்காரர்களாக ஆக்க வேண்டும் என்று நான் சொல்லவில்லை. வசதியான வாழ்க்கைக்கு வேண்டிய சம்பளம் கொடுங்கள் என்றும் சொல்லவில்லை. அப்படியெல்லாம் செய்ய பல சிக்கல்கள் இருக்கலாம். ஆனால், அவர்களுக்கு வாழ்க்கைச் சம்பளம் கிடைக்க வகை செய்ய வேண்டாமா? ஒரு குடும்பம் நடத்த எவ்வளவு தேவை யென்று நிபுணர்கள் கணக்கிட்டு இருக்கிறார்களோ, ஆசிரியர்களுக்கு அந்த அளவுக்கு உடனடியாக இல்லாவிட்டாலும், இரண்டாவது திட்ட காலத்திற்குள் இல்லாவிட்டாலும், மூன்றாவது திட்ட இறுதி காலத்திற்குள்ளாவது, அவர்களுக்குத் தேவையான சம்பளத்தை, குறிப்பாக ஆரம்ப ஆசிரியர்களுக்கு, கொடுக்க வழிவகை செய்யக்கூடாதா என்று கேட்க விரும்புகிறேன். ஒரு குடும்பத்திற்கு அத்தியாவசியமாக வேண்டியது குறைந்தது ரூபாய் 120 என்று பல் வேறு அம்சங்களைப் பார்த்து, தீர்மானித்திருக்கிறார்கள். அந்தக் கணக்கைப் பார்த்தால், ரூபாய் 120 ஆவது ஆரம்ப ஆசிரியர்களுக்கு, இந்த ஆண்டிலே இல்லாவிட்டாலும், மூன்றாவது திட்ட காலத்திற்குள், படிப்படியாகக், கொடுக்க, அரசாங்கம் ஏற்பாடு செய்ய வேண்டும். ஆசிரியர்கள் இதற்காகக் கூட்டம் போட்டு, கிளர்ச்சிகள் செய்து, தன் காலங்களை வீணுக்குவதைத் தவிர்க்க வேண்டும். கல்வித்தரம் முன்னேற வேண்டுமானுல், ஆசிரியர்கள் விஷயத்திலேயாவது, நல்ல முறைகளைக் கடைபிடிக்க வேண்டும். அவர்களுக்குக் கணிசமான சம்பள உயர்வும், உயர்வுக்கு உத்தரவாதமும் இருக்க வேண்டும். நான் இந்த அரை ரூபாய், ஒரு ரூபாய் வருட இன்க்ரிமெண்டைப்பற்றிக் குறிப்பிடவில்லை. அதல்லாமல், ஒவ்வொரு ஆண்டிலும் சம்பள உயர்வு கொடுக்க வேண்டும். இதை மூன்றாவது திட்ட இறுதிக்குள்ளாவது செய்வதற்கு திட்டவட்டமாக இப்பொழுதே ஒரு முடிவை செய்தால், 90,000-க்கு மேற்பட்ட ஆரம்ப ஆசிரியர்களுக்கு ஆறுதல் அளிக்கும். அவர்கள் தங்கள் முழு மனத்தையும் கல்வி வளர்ச்சியில் ஈடுபடுத்த துணைபுரியும். நகர் புறங்களிலே, மாவட்டத் தலை நகரங்களிலே, கிராமப்புறத்திலேகூட, பள்ளி நேரம் தவிர மற்ற நேரங்களில் கிளர்ச்சி நடத்த ஏற்பாடு செய்வதான மிகவும் வருந்தத் தக்க சூழ்நிலையைத்தான் அனுமதிக்கும் என்று குறிப்பிட விரும்புகிறேன். ஆகவே இந்த விஷயத்தில் ஒரு கொள்கையை வரையறுத்துக்கொள்ள வேண்டும். இதற்காக ஆசிரியர்கள் பேரில் கோபப்படக்கூடாது. கோபப் படுவது நியாயம் இல்லை என்று சொல்ல விரும்புகிறேன்.

சர்க்கார் உத்தரவு தனியார் பள்ளிகளில் இருக்கும் ஆசிரியர்களுக்கும் நேரிடையாகச் சம்பளம் பட்டுவாடா செய்வது என்ற கொள்கையின் பேரில் போடப்பட்டது. அப்படிச் சென்ற ஆண்டில் இந்த அரசாங்கம் ஒரு முடிவை எடுத்துக்கொண்டது. ஆனுல் அந்தக் கொள்கையை சரிவர அமல் நடத்த முடியாமல், மணியார்டர் கமிஷன் கழிவு போன்ற சிக்கல்களால், அந்தக் கொள்கையைக் கைவிட்டு, பழைய முறைக்கு போகிறோம் என்று இப்பொழுது சர்க்கார் கூறுகிறார்கள். மீண்டும் ஆசிரியர்கள் பழைய முறைத் தொல்லைகளுக்கு ஆளாவதோடல்லாமல், அவமானத்திற்கும் ஆளாகிறார்கள். அதைச் சிந்திக்க வேண்டும். முடியுமானுல், தலைமை ஆசிரியர் மூலமாகவாவது பட்டுவாடா செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும்.

அதைப்பற்றி அரசாங்கம் தீவிரமாகச் சிந்திக்க வேண்டும், இதுவரை மணியார்டர் கமிஷன் என்பதற்காக ஆசிரியர்கள் இழந்துவிட்ட பணத்தை திரும்ப அவர்களுக்குக் கொடுத்துவிட வேண்டும். நிதியமைச்சர் பொதுவாக நிதியை செலவழிப்பதில் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள் என்று ஓரளவு பாராட்டினாலும், இவ்வளவு அதிகப்படியான கஞ்சத்தனத்தை அவர்கள் அனுசரிக்க வேண்டாம்; ஆசிரியர்கள் பணத்தை, இப்படி இழந்த சம்பளத்தைப் போட்டுக் கொடுத்துவிட வேண்டும். அவர்கள் கண்ணீர் சிந்திக்கொண்டு இருப்பது நியாயம் இல்லை.

மேலும், சர்க்கார் உத்தரவினால், மாறுதல் காரணமாக, ஒரு சில ஆசிரியர்கள் வேலை இழந்திருக்கிறார்கள். அவர்கள் வேலையில்லாதிருந்த காலத்தில், அவர்களுக்கு உரிய சம்பளத்தை கொடுக்க அரசாங்கம் முன்வர வேண்டும்.

4-00 p.m. பாடப் புத்தக வளர்ச்சியிலே பலகுறைகள் இருக்கின்றன. உதாரணமாக, 1857-ல் நடைபெற்ற சிப்பாய்க் கலகம் என்றுதான் போடுகிறார்கள்; அதையும் அனுமதித்துக்கொண்டுதான் இருக்கிறோம். அதிலெல்லாம் நன்கு கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மௌன வாசிப்பு என்ற பெயரில் பலகுறைகள் காணப்படுகின்றன. அது என் படிக்க வேண்டும்? அதற்குச் சரியான புத்தகங்கள் இல்லை. அதைத் தெளிவுபடுத்த வேண்டும்.

இன்றைய தினம் பார்த்தால் எஸ்.எஸ்.எல்.சி. வரையில் படிக்க எல்லோருக்கும் இலவசக் கல்வி சலுகைக் கொடுக்கப் போவதாகச் சொல்லப்படுகிறது. அது ரொம்பவும் வரவேற்கக்கூடியதுதான். அதைப்போலவே தொழில் கல்வி சம்பந்தப்பட்ட மட்டில் நாட்டில் இஞ்சினியர்களும் டாக்டர்களும் அதிகப்படியாக தேவையாக இருக்கிறது. பற்றாக்குறை இருந்து வருகிறது. அந்தப் பற்றாக்குறையை நீக்குவதற்கு அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்கு வேண்டிய கல்லூரிகளை திறக்க வேண்டும். அப்படி இஞ்சினியர்களுக்கு என்ற கல்லூரியை நகரப்புரங்களில் மட்டும் திறக்காமல் கிராமப் பகுதிகளிலும் அமைக்கும்படியாக ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். (மணி அடிக்கப்பட்டது). கனம் சபாநாயகர் அவர்களே, இன்னும் ஒரு நிமிஷத்தில் முடித்து விடுகிறேன்.

மேலும் பாடப் புத்தகங்களை தமிழ் மொழியில் அமைப்பதையும் போதன மொழி தமிழாக்கப்படுவதையும் கண்டு சில பெரியார்கள் வீணான குழப்பத்தில் போய்க்கொண்டிருக்கிறார்கள். நம்முடைய நாட்டில் பல பெரியார்கள் தங்களிடத்தில் இருக்கக்கூடிய குழப்பத்தில் பலரை இழுக்கப் பார்க்கிறார்கள். அந்தக் குழப்பத்தில் நாட்டு மக்கள் ஈடுபடக் கூடாது என்பதை எச்சரிக்க விரும்புகிறேன். அந்தப் பெரியார்கள் இதன் மூலம் உண்டுபண்ணக்கூடிய கஷ்டத்தை தாங்கிக்கொண்டிருக்க முடியாது. அதில் தங்களுடைய மனதைச் செலுத்தாமல் அதில் தங்களுடைய வாழ்க்கையை பழகிக்கொள்ளாமல் இருக்க வேண்டும் என்று எச்சரிக்க விரும்புகிறேன். நெடுங்கால கோரிக்கையின் பேரில் கல்வித்துறையில் பல்கலைக் கழகங்கள் மூலமாக தமிழ் போதன மொழியாக இருக்க வேண்டும் என்று கொண்டு வந்திருக்கிறார்கள். அதற்கு வேண்டிய திட்டத்தை அரசாங்கம் இப்பொழுது கொண்டுவந்திருக்கிறது.

கல்வியில் ஏகபோக சுதந்திரம் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. எந்த விஷயத்தைச் செய்வதாக இருந்தாலும் அதை துணிச்சலுடன் செய்ய வேண்டும். அப்படி துணிச்சலுடன் செய்ய இறங்கினால்தான் மக்களுடைய ஆதரவு இருக்கும். நிச்சயமாக இருக்கும். விஞ்ஞான விஷயங்களில் வேண்டிய சொற்கள் இருக்கின்றன. அப்படி இல்லை என்று சொல்வதற்கு இல்லை. அப்படி இல்லை என்பதால் தமிழைக் கொண்டு வர வேண்டாம் என்று சொல்வதற்கு இல்லை. எவ்வளவோ பெரியவர்கள அதற்கு வேண்டிய சொற்களை கண்டுபிடித்து வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவைகளை நாம் பயன்படுத்திக்கொள்ளலாம். இது விஷய

26th April 1960] [Sri P. S. Chinnadurai]

மாக இன்னும் அதிகமாக பேச விரும்புகிறேன். ஆனுல் அதற்கு வேண்டிய அவகாசம் இல்லை. இருந்தாலும் யார் என்ன சொன்னுலும் தமிழ் மொழியை புகுத்துவதில் கொஞ்சம்கூட விட்டுக் கொடுக்கக்கூடாது என்பதை கனம் மந்திரி அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன்.

ஆங்கிலம் சம்பந்தமாக பேசும்போது இந் நாட்டில் இன்னும் சிலருக்கு அடிமை மோகம் இருந்துகொண்டிருக்கிறது. நம்முடைய காங்கிரஸ் அக்கிராசனுதிபதிக்குக்கூட ஆங்கில மோகம் இருப்பதாகத் தெரிய வரு கிறது. அதெல்லாம் நம்முடைய மொழிப் பிரச்னையில் குறுக்கிடக்கூடாது, கல்விக்கொள்கையில் அது குறுக்கிடக்கூடாது. ஆகவே கல்வி விஷ யத்தில் நல்ல ஒரு கொள்கையை அனுசரித்து அதைத் கடைபிடிக்க வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு என்னு டைய பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER** : இனிமேல் பேசுகிற ஒவ்வொரு அங்கத்தினரும் ஐந்து நிமிஷங்களுக்கு மேல் பேசக்கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அடுத்தபடியாக கனம் மாதா கௌடர் பேசுவார்.

**Sri J. MATHA GOWDER** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மானிய கோரிக்கையை ஆதரித்து சில வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன். உதகையில் இருக்கக்கூடிய ஒரே ஒரு கல்லூரியில் அதிகப் படியான மாணவர்கள் சேரவில்லை என்ற காரணத்தினுல் அங்கே கல்லூரி தேவையில்லாமல் இருக்கிறது என்ற மனப்பான்மை அரசாங்கத்திற்கு ஏற்பட்டிருக்கிறது என்பதைப்பற்றி நான் சொல்ல விரும்புகிறேன். அதற் குக் காரணம் அங்கே இருக்கக்கூடிய மாணவர்கள் ப்ரீ-யுனிவர்சிட்டி படித்த பிறகு ப்ரி-ப்ரொபெஷனல் போவதற்கு நல்ல வகுப்புகள் இல்லாத காரணத்தால் மாணவர்கள் அங்கே சேர்வருவதில்லை. இது சம்பந்தமாக ஏற்கனவே நான் கல்லூரி கமிட்டிக்கும் சர்க்காருக்கும் எழுதி அனுப்பி இருக்கிறேன். ப்ரி-யுனிவர்சிட்டி படித்த பிறகு அங்குள்ள மாணவர் களுக்கு சரியான சப்ஜெக்ட் எடுத்துக்கொள்வதற்கு வகுப்பு இல்லை. அவர் களுக்கு இஞ்சினியரிங் கோர்ஸ் அல்லது வேறு துறையில் செல்வதற்கு அவர் களுக்கு போதிய வசதி இல்லாத காரணத்தால், அதாவது அவர்கள் பி.எ. கோர்ஸ் எடுத்துக்கொண்டால் ஹிஸ்டரி பி.எ. தான் எடுத்துக்கொள்ள முடியும் வேறு சப்ஜெக்ட் எடுத்துக்கொள்ளக்கூடிய வசதி இல்லாத காரணத்தால் அங்கே மாணவர்கள் அதிகப்படியாக சேரவில்லை என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதை நன்றுக பரிசீலனை செய்து அதிகப்படியான மாணவர்கள் சேரக் கூடிய அளவில் அங்கே கல்லூரியை அமைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அந்த ஜில்லா கல்வியில் ரொம்பவும் பிற்போக்கான ஜில்லா. அப்படி பிற்பட்ட ஜில்லாவாக இருப்பதால் இன்னும் கொஞ்சம் வருஷங்கள் பார்த்து அதிகப்படியான மாணவர்கள் சேருவதற்கு வசதி செய்து கொடுத்து இன்னும் பல வசதிகளையும் செய்து கொடுத்துப் பார்த்து அதன் பிறகு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். இப்படி பல வசதிகளைச் செய்து கொடுத்து மாணவர்கள் அதிகப்படியாக சேருவதற்கு வசதி செய்ய வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

அந்த ஜில்லாவில் கோட்டகிரி இருக்கிறது. அங்கே சர்க்காருடைய உயர்நிலை பாடசாலை இருக்கிறது. அங்கே இருக்கிற மாணவர்களுடைய கல்வித்தரம் குறைந்து கொண்டிருக்கிறது. ஏன் அப்படி குறைகிறது என்று கேட்டால் அங்கே இருக்கக்கூடிய தலைமை ஆசிரியரை வருஷத் திற்கு இரு முறை மாற்றி விடுகிருர்கள். ஆறு மாதத்திற்கு ஒரு தடவை இன்னொரு தலைமை ஆசிரியர் வருகிருர். நீலகிரி ஜில்லாவில் இரண்டு மூன்று சர்க்கார் பள்ளிக்கூடங்கள் இருப்பதால் அடிக்கடி கன்யாகுமரி ஜில்லாவிலிருந்து ஆசிரியர்களை மாற்றிக்கொண்டிருக்கிருர்கள். அப்படி அடிக்கடி மாற்றுவதன் காரணத்தால் தான் அங்கே கல்வித் தரம் குறைந்து வருகிறது. ஆகவே இதை கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவந்து அப்படி அடிக்கடி ஆசிரியர்களை மாற்றக் கூடாது என்று பணிவன்புடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri J. Matha Gowder] [26th April 1960

அடுத்தபடியாக நம்முடைய மாகாணத்திலிருந்து அதிகப்படியான மாணவர்களை வெளிநாடுகளுக்கு படிக்க அனுப்ப வேண்டும். சென்ற வாரம் சர்வ தேச மாணவ சங்கத்தின் மூலமாக ஆஸ்திரேலியாவுக்கு ஏழு மாணவர்களை மேல் படிப்புக்கு அனுப்பி இருக்கிறார்கள். அந்த ஏழு பேரில் நம் மாகாணத்தைச் சேர்ந்தவர்கள் யாரும் போகவில்லை. ஒவ்வொரு மாகாணத்திலிருந்தும் அப்படிப் போய்க்கொண்டிருக்கிறார்கள். டில்லியிலிருந்தும், ஆக்ராவிலிருந்தும், பம்பாயிலிருந்தும் போய்க்கொண்டிருக்கிறார்கள். ஆனால் நம் மாகாணத்திலிருந்து ஒருவரும் போகவில்லை. அப்படி வெளி நாட்டிற்கு நம் மாகாண மாணவர்களை அனுப்பி வைத்து அவர்கள் அங்கு சுற்று பிரயாணம் செய்து அங்குள்ள கல்வி கலாச்சாரம் முதலியவைகளை படித்து வந்தால் நமக்கு அதனால் நல்ல பலன் உண்டு. ஆகவே அப்படி மாணவர்களை அனுப்புவதற்கு கனம் அமைச்சர் அவர்கள் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நீலகிரி ஜில்லாவில் ஆசிரியர்களுக்கு மலை அலவன்சு கொடுக்கிறார்கள். நீலகிரியில் மூன்று தாலூகாக்கள்தான், அதாவது கூடலூர், கூனூர், கோட்டகிரி. இந்த மூன்று தாலூகாக்களும் மலை பிரதேசத்தில் தான் இருக்கின்றன. ஆனால் கூடலூர் தாலூகாவில் வேலை பார்க்கக் கூடிய ஆசிரியர்களுக்கு மலை அலவன்சு கொடுப்பது இல்லை. அதனால் அங்கு மாற்றப்படும் ஆசிரியர்கள் அங்கு போய் வேலை செய்ய முன்வருவது இல்லை. கூடலூரை ஏன் மலை பிரதேசமாகக் கருதவில்லை என்பது தெரியவில்லை. அதனால் ஆசிரியர்களை அங்கு மாற்றினாலும் அப்படி மாற்ற வேண்டாம் என்று சொல்லுகிறார்கள். அப்படி மாற்றாமல் இருக்க வேண்டும் அல்லது அங்கு வேலை செய்யக்கூடிய ஆசிரியர்களுக்கும் மலை அலவன்சு கொடுக்க முன் வரவேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

இன்று காலையில் கேள்வி நேரத்தில் ஒன்று கேட்டேன். நீலகிரியிலுள்ள பெண் ஆசிரியர்களுக்கு அதிகப்படியான வீடுகள் கட்டிக்கொடுக்க வேண்டுமென்று கேட்டேன். மழை காலங்களில் அவர்களால் பள்ளிக் கூடம் வருவதற்கு முடியவில்லை. சாதாரணமாக வீட்டில் இருக்கக் கூடிய பெண்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்க வேண்டும் என்று கேட்கவில்லை. பள்ளிக்கூடங்களுக்கு வருவதற்கு அவர்களால் முடியாமல் இருப்பதால் அவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சாதாரணமாக ப்ளெயின்களில் இருந்தால் மழை காலங்களில் பஸ்ஸில் வந்து விடலாம், சைக்கிளில் வந்து விடலாம். ஆனால் மலைப் பிரதேசங்களில் அப்படி வர முடியவில்லை. அதனால்தான் அவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நான் பேசுவதற்கு இந்த சந்தர்ப்பத்தை அளித்த கனம் சபாநாயகர் அவர்களுக்கு என்னுடைய நன்றியை தெரிவித்துக்கொண்டு இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

* Sri G. ANNAMALAI MUTHURAJA : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்தக் கல்வி மானியத்தை ஆதரித்து சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். என்னுடைய தொகுதியானது கிராம மக்கள் அடங்கிய தொகுதி. கிராமங்களில் அதிகப்படியாக பள்ளிக்கூடங்கள் இல்லாமல் இருக்கின்றன. அநேகம் கிராமங்களில் பள்ளிக்கூடங்களே கட்டப்படவில்லை. அதனால் அங்குள்ள குழந்தைகளுக்கு படிக்க வசதி இல்லாமல் இருக்கின்றன. அந்த நிலைமையில் சிரமப்பட்டுகொண்டிருக்கிறார்கள். இதைப்பற்றி கலெக்டரிடம் சொன்னபோது அப்படி கிராமங்கள்தோறும் பள்ளிக்கூடங்களைக் கட்ட முடியாது, அதற்கு வேண்டிய பணம் இல்லை என்று சொல்லுகிறார்கள். சில இடங்களில் பஞ்சாயத்து இருக்கிறது ; சில இடங்களில் பஞ்சாயத்துக்கள் கிடையாது. அநேகமாக பஞ்சாயத்து இல்லாத இடங்கள்தான் அதிகமாக இருக்கிறது. அங்கேயெல்லாம் பள்ளிக்கூடங்களே இல்லாமல் இருக்கிறது. அப்பேற்பட்ட இடங்களில் குழந்தைகள் படிக்க வசதி இல்லாமல் இருக்கிறது. ஆனால் சர்க்காருடைய திட்டம் என்னவென்றால் எல்லா கிராமங்களிலும் உள்ள குழந்தைகள்

படிக்கவேண்டும் என்ற திட்டம் போட்டிருக்கிறார்கள். அதற்கு வேண்டிய சலுகைகளும் கொடுக்கப்படும் என்று சொல்லுகிறார்கள். அதற்கு வேண்டிய பணமும் ஒதுக்கி வருகிறார்கள். எல்லோரும் படித்து முன்னுக்கு வரவேண்டும் என்ற அடிப்படையில் அதிகப்படியான பணம் ஒதுக்கி வருகிறார்கள். இப்பொழுது கூட இதற்கு என்று 17 கோடி ரூபாய் ஒதுக்கி இருக்கிறார்கள். இந்த நிலைமையில் சில கிராமங்களில் பள்ளிக்கூடங்களே கிடையாது. கேட்டால் கட்டுவதற்கு பணம் இல்லை என்று சொல்லுகிறார்கள். அதைக் கேட்டு வருந்தத்தக்கதாக இருக்கிறது. ஆகையால் கனம் அமைச்சர் அவர்கள் பள்ளிக்கூடங்கள் இல்லாத இடங்களில் பள்ளிக்கூடங்களைக் கட்டிக்கொடுக்க வேண்டும் என்றும் அதற்கு வேண்டிய தொகையை ஒதுக்கும்படியாகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நகரங்களிலேயிருந்துகொண்டு, கிராமங்களிலே உள்ள பள்ளிக்கூடங்களுக்கு உபாத்தியாயர்கள் வந்து பாடம் சொல்லிக்கொடுப்பது சிரமமாக இருக்கிறது. ஆகவே அந்த உபாத்தியாயர்களுக்கு கிராமங்களிலேயே இருக்க வீட்டு வசதி செய்து கொடுக்க வேண்டும். கிராமங்களிலே புறம்போக்கு நிலம் இருக்கிறது. பெரிய மிராசுதார்களும் இருக்கிறார்கள். ஆகவே உபாத்தியாயர்களுக்கு வீடு கட்டிக்கொடுத்து உதவி செய்தால் நலமாக இருக்கும் என்று கருதுகிறேன்.

சில அங்கத்தினர்கள் காலையிலே பேசும்போது சொன்னார்கள். சிலர், சர்க்காருடைய கிராண்ட் வாங்கிக்கொண்டு தங்களுடைய சொந்த மேனேஜ்மெண்டிலே பள்ளிக்கூடம் நடத்துகிறார்கள். அவற்றை சர்க்கார் ஏற்று நடத்தவேண்டும் என்று. நில உச்ச வரம்பு சட்டம் வரப்போகிறது என்று, பள்ளிக்கூடத்துக்கும், தருமத்துக்கும் நிலத்தை எழுதிவைத்துவிட்டு, தாங்களே அனுபவித்து வருவதற்காக, அவர்களே மேனேஜ்மெண்டிலே இருக்கிறார்கள் என்பது அவர்களுடைய அபிப்பிராயம். ஆனால் அது முற்றிலும் உண்மை அல்ல. எங்கள் தொகுதியிலே ஐயம்பெருமாள் கோனார் என்று ஒருவர் இருக்கிறார்.

**MR. SPEAKER** : தயவு செய்து தனிப்பட்ட ஆட்களின் பெயர்களை சொல்லவேண்டாம் ; பொதுவாகச் சொல்லுங்கள்.

**SRI G. ANNAMALAI MUTHURAJA** : அவர் வெகு காலத்திற்கு முன்பே நூறு ஏக்கராவுக்குமேல் நிலங்களையும் வருஷத்திற்கு ஐம்பதினாயிரம் ரூபாய்க்குமேல் வருமானம் வரக்கூடிய ஆலைகள், வீடுகள் போன்ற சொத்துக்களையும், பள்ளிக்கூடத்திற்காக எழுதி வைத்திருக்கிறார். அவருடைய குடும்ப பரம்பரையிலே வரக்கூடியவர்களின் மேற்பார்வையிலே அந்தப் பள்ளிக்கூடங்கள் நடைபெற்று வரவேண்டும் என்று அவர் எழுதி வைத்திருக்கிறார். அப்படிப்பட்ட விஷயங்களில் அவர்கள் குடும்ப பரம்பரையினரே மேற்பார்வை செய்வதற்கு உரிமை இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

எங்கள் தொகுதியிலே இன்னொருவர் இருக்கிறார். அவருக்கு ஒரு லட்ச ரூபாய்க்கு சொத்து இருக்கிறது. அவர் ஒரு ஆரம்ப பள்ளிக்கூடம் நடத்துகிறார். அதனுடைய ஆண்டு விழாவிற்கு நமது கல்வி இலாகா டைரெக்டர்கூட வந்திருந்தார்கள். அவர் 1940-லேயே, ஐம்பதினாயிரம் ரூபாய் சொத்தை அந்தப் பள்ளிக்கூடத்திற்கு எழுதி வைத்து மேற்பார்வை செய்து வருகிறார். அந்த மாதிரியுள்ள பள்ளிக்கூடங்களையும் சர்க்காரே எடுத்துக்கொள்வது என்றால், சர்க்காரிலே எந்தக் காரியத்தைத்தான் செய்வது. இவற்றையெல்லாம் செய்யாவிட்டால் ராஜிநாமா செய்யுங்கள் என்று எதிர்க்கட்சி நண்பர்கள் சொல்கிறார்களே, ராஜிநாமா செய்ய வேண்டிய காரியமாக இருந்தால் செய்யவேண்டியதுதான். ஆனால் இவைகளுக்கெல்லாம் ராஜிநாமா செய்ய முடியாது. இது என்ன பாண்டு பத்திரமா, மேடோவர் செய்து கொடுக்க. எனவே எதிர்க்கட்சிக்காரர்கள் பேசும்பொழுது கொஞ்சம் யோசனை செய்து பேச வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, எனக்கு பேசுவதற்கு இந்த சந்தர்ப்பத்தைக் கொடுத்ததற்காக சட்ட மன்றத் தலைவர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

[26th April 1960

**SRI M. KALYANASUNDARAM** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரேபணையை ஆதரித்து பல அங்கத்தினர்களும், சர்க்காரை ஆதரித்து பல அங்கத்தினர்களும் பேசிவிட்டார்கள். இதில் முக்கியமாக கவனிக்கவேண்டியது ஆசிரியர்கள் செய்திருக்கக்கூடிய ஒரு தியாகம்தான். ஏறத்தாழ ஒரு லட்சம் ஆரம்ப ஆசிரியர்கள், பல கஷ்டங்களுக்கிடையே பணிபுரிந்து, பள்ளிக்கூடங்கள் சிறப்பாக நடப்பதற்கும், கல்வி இலாகா சிறப்பாக இருப்பதற்கும், உதவியை அளித்திருக்கிறார்கள். போட்ட உத்தரவுகளையெல்லாம் அவர்கள் மனதிலே எப்படி இருந்தாலும் கூட நடத்தவேண்டும் என்ற எண்ணத்தோடு நிறைவேற்றி இருக்கிறார்கள் என்பதைத்தான் பள்ளி சீர் அமைப்பு மகாநாட்டு முடிவுகளும், மதிய உணவு வழங்குவதில் ஏற்பட்டிருக்கக்கூடிய முன்னேற்றமும், எடுத்துக் காட்டுகிறது. அந்த இரண்டு பிரச்னைகளிலேயும் கொள்கை அளவில் நான் ஒப்புக்கொள்கிறேன். வசதி படைத்தவர்களிடமிருந்து வசூலித்து, வசதி இல்லாத குழந்தைகளுக்கு உதவி செய்யவேண்டியது மிகவும் அவசியம். அது நியாயமும்கூட. அதில் ஆசிரியர்கள் பங்கெடுத்து சேவை செய்வது பாராட்டவேண்டியதே. அதில் நிர்பந்தம் எங்கேயாவது இருந்தால், நல்ல பெயர் எடுக்க வேண்டும் என்பதற்காக தவறு ஏற்படுமானால், அவற்றை போக்குவதற்கு, அந்த ஆசிரியர்களோடு ஒத்துழைப்பதற்கு, பொதுஜன பிரதிநிதிகள் முன்வரவேண்டியது மிகவும் அவசியம். M.L.A.. க்கள், பஞ்சாயத்து போர்டு தலைவர்கள், போன்றவர்கள் முன்னின்று காரியங்கள் செய்தால் அதிகமாகவும் வசூலாகும். ஆனால் அமைச்சர்கள் சம்பந்தப்பட்டமட்டில், பொருள்களை வழங்கும் வைபவத்திற்கு வருகிறார்களே தவிர, துவங்கி வைக்கிற விழாவிற்கு வருவதில்லை. வசூலிக்கும் இயக்கத்தை ஆரம்பித்து வைப்பதில், பொதுமக்களின் பிரதிநிதிகள், ஆளும் கட்சி, எதிர்க்கட்சி என்கிற வித்தியாசமின்றி, இருக்கவேண்டும். ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களும், இலாகாவினரும் மட்டுமே இருக்கக் கூடாது என்பது என் அபிப்பிராயம். சில சந்தர்ப்பங்களிலேகூட நான் எடுத்துக் காட்டி இருக்கின்றேன். கல்வி சீர் அமைப்பு மகாநாடுகளிலே, ஒன்று அமைச்சர்கள் பேசுவார்கள். அல்லது அமைச்சர்கள் சார்ந்திருக்கிற கட்சியைச் சேர்ந்திருப்பவர்கள் அழைக்கப்படுவார்களே தவிர, எதிர்க்கட்சிக் காரர்கள் அழைக்கப்பட்டிருக்கிற சந்தர்ப்பத்தை நான் கண்டதில்லை. கவுரவம் இருக்கக்கூடிய நிகழ்ச்சிகளை ஆளும் கட்சியினருக்கு கொடுத்து விட்டும். எதிர்கட்சியினரும் ஒத்துழைக்கவேண்டும் என்று இருக்கிற துறையிலே . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM** : காஞ்சிபுரத்திலே நடந்த பள்ளி சீரமைப்பு மகாநாட்டிலே திரு. அண்ணாத்துரை அவர்கள் சிறப்புரை வழங்கினார்கள்.

**SRI M. KALYANASUNDARAM** : அவர் தனக்கு அழைப்பு வரவில்லை என்று குறை சொன்னதாக எனக்கு ஞாபகம்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : அழைப்பிதழிலே அவர் பெயர் போடப்பட்டு அவர் சிறப்புரை வழங்கினார்.

**SRI M. KALYANASUNDARAM** : ஆசிரியர்களை எல்லா கட்சிகளும் சேர்ந்து உற்சாகப்படுத்தவேண்டியது அவசியம். கல்வியை அப்பொழுதுதான் பாதுகாக்க முடியும். அமைச்சர்களுக்கு எதிர்க்கட்சியினர்மீது இருக்கக்கூடிய கோபத்தை, ஆசிரியர்**களி**ன்மீது திருப்பக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்.

கடலூர் மகாநாடு வெகு சிறப்பாக நடந்தது. 10,000 ஆசிரியர்களுக்கு மேல் வந்திருந்தனர். அந்த மகாநாட்டில் முதல் நாள் நண்பர் அன்பழகன் அவர்களும், நானும் பங்கு கொண்டோம். அமைச்சர்கள் பேசக் கூடிய அதே நாளில் பேசியிருக்கலாம். சட்டசபையிலே ஒன்றாகப் பேசுகிறோம். மகாநாடுகளில் ஒன்றாகக்கூடி பேசுவதை ஆட்சேபிக்கவேண்டியதில்லை. எதிர்க்கட்சியினர் வந்ததாலே, வருத்தப்படவேண்டியதில்லை. அரசியல் துவேஷம் ஏதாவது இருந்தால், அதை எங்கள் மீது காட்டுங்கள்.

ஆசிரியர்களிடம் அமைச்சர்கள் நல்ல வார்த்தைகள் தான் சொல்லவேண்டுமே தவிர, அதிகமாக சம்பளம் கேட்பீர்களேயானால் நான் ராஜினமா செய்யவேண்டியதுதான் என்று அமைச்சர்கள் கோபப்படக்கூடாது.

THE HON. SRI C. SUBRAMANIAM : திருப்பித் திருப்பி சொல்வதால் சொல்கிறேன். நான் அன்று சொன்னது, உங்கள் பிரச்னையை சம்பள கமிஷனுக்கு அனுப்பி இருக்கிறோம். சம்பளக் கமிஷன் அறிக்கை வந்த பிறகு, அதைப் பார்த்துத்தான் கொடுக்க முடியும். இப்பொழுதே அதிகமாக கொடுக்கவேண்டுமென்றால், அது என்னாலே முடியாத காரியம் என்றுதான் சொன்னேன்.

SRI M. KALYANASUNDARAM : அங்கு கேட்டவர்களும், சம்பள கமிஷன் எப்படி முடிவு செய்தாலும் இப்பொழுதே கொடுங்கள் என்று சொல்லவில்லை. ஒரு தீர்மானம், சம்பள கமிஷன் முடிவை சீக்கிரமே கொடுக்கவேண்டும் என்று சம்பளக் கமிஷனைக் கேட்டுக்கொண்டது. சம்பளக் கமிஷன் 100 ரூபாய்க்கு குறைவாக சிபாரிசு செய்யக்கூடாது என்பது. சம்பளக் கமிஷன் சிபாரிசுபடிதான் கொடுக்கப்போகிறார்கள். சிபாரிசின் மீது தீர்ப்பு எடுக்கக் கூடியவர் நிதி—கல்வி அமைச்சர். ஒரு கையாலே நிதி அமைச்சர். இன்னொரு கையாலே கல்வி அமைச்சர். எனவே அதை சீக்கிரமாக எழுதி வெளியிடுமாறு கேட்டுக்கொள்கிறேன். இன்னும் மற்ற என்.ஜி.ஓ.க்கள் எல்லோருமே ஆவலோடு முடிவு எப்படி இருக்கும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஏமாற்றம் அடைவதாக இருந்தாலும் சரி, சீக்கிரமாக "உண்டு" "இல்லை" என்று தெரிந்து கொள்ளட்டும். நாம் துரிதமாக வெளியிடும்படி கேட்டுக் கொள்ளும் அதே சமயத்தில் சில பிரச்னைகளைக் குறித்து முக்கியமாக கவனம் செலுத்தவேண்டும் என்றும் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகின்றேன். சம்பள விகிதம் எப்படி இருக்கும் என்பதைப்பற்றி நான் முன்கூட்டி சொல்வதற்கு ஒன்றுமில்லை. கூடியவரையில், எவ்வளவு விலைவாசி உயர்ந்திருக்கிறதோ அந்த ஏற்றத்திற்குத் தகுந்தவாறு, திருப்தி ஏற்படக்கூடிய அளவுக்கு உயர்த்தவேண்டும். ஆசிரியர்களுடைய நிலை மிகவும் கேவலமாக இருக்கிறது என்று பிரதம மந்திரி அவர்கள்கூட பகிரங்கமாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய நிலைமையை உயர்த்தவேண்டும். அதே சமயத்தில் அவர்களுக்கு இன்னும் மற்ற வசதிகள் என்ன என்ன வழங்க முடியும் என்பதைக் கவனிப்பதோடுகூட, பதவியிலிருந்து விலகும் வயதை 58 வரை உயர்த்தலாம் என்று கேட்டுக் கொள்கின்றேன். காலையில் கேள்வியொன்றுக்குப் பதிலளிக்கும்போது, அவர்கள் 58 வயது வரை வேலை செய்யலாம் என்று உயர்த்தி விட்டால், இளைஞர்களுக்கு வேலை கொடுக்க சந்தர்ப்பம் இல்லாமல் போய் விடும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆகையால் தான் அதைக் குறிப்பாக சுட்டிக்காட்ட நேர்ந்தது. 58 வயது வரை ஆசிரியர்கள் வேலை செய்யும் திறமை இருக்கும் காரணத்தால், சர்க்கார் தாங்களாக 58 என்று உயர்த்தாவிட்டாலுங்கூட, 58 வரை அவர்கள் பணி புரிவதற்கு வசதி செய்துகொடுத்தால் கூட, வயதான காலத்தில் அவர்களுக்கு உதவியாக இருக்கும். (The Hon. Sri C. Subramaniam: இப்போதே அப்படி இருக்கிறது.) இப்போதே இருக்கிறதாக சொல்கிறார் கல்வி அமைச்சர். அமைச்சர் அதை எல்லோருக்கும் தாராளமாகக் கிடைக்கும்படி செய்தால் வயதான ஆசிரியர்கள் எல்லோருக்கும் வசதியாக இருக்கும். அதை எல்லோருக்கும் கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

எல்லாவற்றுக்கும் மேலாக அவர்களுக்கு வேலையில் ஒரு உத்தரவாதம் இருக்கவேண்டும். தனியார் நடத்தும் பள்ளிக்கூடங்களில் வேலை செய்யும் ஆசிரியர்களுடைய பிரச்னைதான் இங்கு அடிக்கடி சபை முன்பு வருகிறது. நான் அமைச்சரிடத்தில் பல சந்தர்ப்பங்களில் அவருடைய கவனத்திற்குக் கொண்டுவந்திருக்கிறேன். கல்வி இலாகா டைரக்டருக்கும் பல சந்தர்ப்பங்களில் கடிதம் எழுதியிருக்கிறேன். சட்டத்தில் இருக்கும் கோளாறோ என்னவோ, தனியார் என்ன செய்தாலும் சர்க்காருடைய பணம் பெற்றுக் கொள்ளலாம், ஆசிரியர்களை இஷ்டம்போல் நடத்தலாம் என்று இருக்கிறது.

அவர்கள் இஷ்டம்போல் ஆசிரியர்களை டிஸ்மிஸ் பண்ணுவதால் பல சங்கடங்கள் ஏற்படுகின்றன. "நீ இந்த ஆசிரியரை வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும்" என்று டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன் உத்தரவு போட்டிருந்தாலும்கூட, அந்த உத்தரவுக்குத் தனியார் கீழ்ப்படிவது இல்லை. அதனால் அந்த ஆசிரியர் திண்டாட நேரிடுகிறது. அப்பீல் செய்துகொள்ளலாம் என்ற உரிமை இருந்தும் சட்டத்தின் பலனை அவர்கள் அனுபவிக்க முடியாமல் போகிறது. தனியார் நடத்தும் பள்ளிக்கூடமே இருக்கக்கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம். எவ்வளவு சீக்கிரத்தில் தனியார் நடத்தும் பள்ளிக்கூடங்களையும் சர்க்கார்ப் பொறுப்பிலே ஏற்றுக்கொள்ள முன்வருகிறார்களோ அந்த அளவுக்கு ஆதரவு அவர்களுக்கு கொடுப்பேன் என்று நான் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். படிப்படியாக தனியார் யார் யார் தவறாக நடக்கிறார்களோ அப்பேர்ப்பட்டவர்களுடைய பள்ளிக்கூடங்களின் அங்கீகாரத்தை ரத்து செய்து அந்தப் பள்ளிக்கூடங்களை சர்க்காரே எடுத்துக்கொள்வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

கோடம்பாக்கத்தில் ஒரு ஹைஸ்கூல் பத்து மாதமாக ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுக்கவில்லை. மாடர்ன் ஹைஸ்கூல் என்ற பள்ளிக்கூடம் அது. அங்கிருக்கும் ஜனங்களெல்லாம் மந்திரியையும் கல்வி இலாகா அதிகாரியையும் போய்ப் பார்த்த பிறகு, டி. ஈ. ஓ. பள்ளிக்கூடத்தைத் திறந்து நடத்த உத்தரவு போட்டிருக்கிறார்கள். பத்து மாதமாக பட்டினி இருக்கும் ஆசிரியர்கள் குழந்தைகளுக்குக் கல்வி புகட்ட வேண்டுமே என்ற கடமை உணர்ச்சியுடன் பள்ளிக்கூடம் சென்று படிப்புச் சொல்லிக்கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இன்னும் சம்பளம் பெறவில்லை. இப்பேர்ப்பட்ட மானேஜ்மெண்டாரை ஏன் விட்டுவைக்க வேண்டும் என்பதைப்பற்றி சற்று சிந்திக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகின்றேன். சென்னை கல்வி விதிகளை மாற்ற வேண்டிய அவசியம் இருந்தால் அதற்குத் தகுந்த முறையில் விதிகளை மாற்றி, சர்க்கார் அதிகாரிகள் போடும் நியாயமான உத்தரவை தனியார் கேட்க மறுத்தால் அவர்கள் மீது தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும். அப்பொழுதுதான் ஆசிரியர்களுக்கு ஒரு உத்தரவாதம் இருக்க முடியும் என்று அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகின்றேன்.

ஆசிரியர்களுக்கு இன்னும் சில பிரத்தியேகமான குறைகள் சர்க்கார எடுக்கும் சில நடவடிக்கைகளால் ஏற்பட்டுள்ளன. ஆங்கிலம் போதிப்பதில் அதிக கவனம் செலுத்தவேண்டும் என்பதை நான் ஆட்சேபிக்கவில்லை. கல்லூரியில் இது போதனாமொழியாக இருக்கவேண்டுமா என்ற பிரச்னைக்கு நான் பின்னால் வருகிறேன். இன்னும் கொஞ்ச காலத்திற்கு ஆங்கிலத்தில் பயிற்சி வேண்டும் என்னும் எண்ணத்தோடு ஐந்தாவது வகுப்பிலே ஆங்கிலம் போதிக்கவேண்டும் என்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. இதை நான் வரவேற்கிறேன். அதனால் ஏற்படும் விளைவுகளைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். ஆங்கிலம் போதிக்கும் பள்ளிகளுக்கெல்லாம் செகன்டரி கிரேட் ஆசிரியர்கள் தான் போடவேண்டுமென்று போட்டிருக்கிறோம். இதனால் ஹையர் கிரேட் ஆசிரியர்கள் பலர் வேலை இழப்பார்கள் என்ற நிலைமை ஏற்பட்டுள்ளது. அவர்கள் வேலை இழக்காத முறையில் இந்தச் சீர்திருத்தத்தைக் கொண்டுவர வேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். சிவில் ஸப்ளைஸ் டிபார்ட்மெண்டை மூடியபோது போதிய தகுதியற்றவர்கள் குமாஸ்தாவாக இருந்தும் அவர்களுக்கென்று பிரத்தியேகமான செலக்ஷன் பரீட்சை நடத்தி அவர்களும் மற்ற சர்க்கார்க் காரியாலயங்களில் குமாஸ்தாக்களாக எடுத்துக்கொள்ளப்பட்டார்கள். அமைச்சர் அவர்களுக்கு ஞாபகம் இருக்கும் என்று நினைக்கிறேன். அதுபோன்ற ஹையர் கிரேட் பயிற்சி பெற்ற ஆசிரியர்களைக் கூட போதிய ஆங்கில அறிவோடு படிப்புச் சொல்லிக் கொடுக்கத் தகுதியும் திறமையும் இருந்தவர்களை செகண்டரி கிரேடுக்கு உயர்த்தாவிட்டாலுங் கூட, அவர்களை நியமித்தால் சர்க்காருக்கும் சிக்கனமா இருக்கும். அவர்களுக்கும் வேலை போகாது. அந்த யோசனையை அவர்கள் சங்கமே கொடுத்திருக்கிறது. அதை ஆலோசிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

26th April 1960]

Sri M. JAGANNATHAN : On a point of order, Sir. There is no quorum in the House. I want to know whether the proceedings of the House could be conducted in these circumstances ?

Mr. SPEAKER (After a pause): There is quorum, I think.

Sri M. KALYANASUNDARAM : அதோடு, சம்பளம் விதிக்கக்கூடாது என்று சமீபத்தில் உத்தரவு போட்டதின் காரணமாக சில பள்ளிக்கூடங்கள் மூட நேர்ந்தன. அந்த சமயத்தில் ஆசிரியர்களாக வேலே செய்துகொண்டிருந்தவர்களே வேறு ஸ்தல ஸ்தாபனங்களில் எடுத்துக் கொள்ளும் சமயத்தில் ஹையர் கிரேடில் அமர்த்தப்பட்டிருக்கிருர்கள். அவர்களுக்குத் தகுந்த பரிகாரம் தேடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கின்றேன். அப்பொழுது அமைச்சர் அவர்கள் இதுபற்றி உறுதிமொழி கொடுத்தார்கள், இதனுல் யாருக்கும் குறை இருக்காது என்று. அவர்கள் எடுத்துக்கொள்ளப்படுவார்கள் என்று கூறப்பட்டது. அப்பேர்ப்பட்டவர்களு டைய குறைகள் கவனிக்கப்படவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

சம்பளம் நேரடியாகக் கொடுப்பதினுல் இருக்கும் கஷ்டங்களேப்பற்றி கல்வி ஆலோசனைக் குழு முன்பு அமைச்சர் அவர்கள் கூறினுர்கள். ஒரு லட்சத்து இருபதாயிரம் ரூபாய்க்கு மேல் தபால் செலவு ஏற்படுகிறது, குமஸ்தா போடுவதுபோன்ற பல சங்கடங்கள் ஏற்படுகின்றன. இது அவசியமா என்று ஆலோசிக்கவேண்டும், அதைக் கைவிடவேண்டுமென்ற யோசனையை ஆலோசனைக் குழு முன்பு சொன்னுர்கள். அந்த சமயத்தில் அதை ஆட் சேபித்தவர்களில் நானும் ஒருவன். இருப்பினும் அதைப் புனராலோசனை செய்யவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். ஆசிரியர்களே சந் தித்து நாம் விசாரிக்கும்போது மணி ஆர்டர் கமிஷனே சம்பளத்திலே குறைத்துக்கொண்டால்கூட நேரடியாக அவர்களுக்குச் சம்பளம் கிடைக்க வேண்டியது ரொம்ப அவசியம் என்று அவர்கள் வற்புறுத்திஞர்கள். முதலில் அவர்கள் சொல்லியிருக்கலாம், மணி ஆர்டர் கமிஷனைக் குறைக்க வேண்டாம் என்று. அதற்குப் பிறகு அவர்களுக்கு அதிக கஷ்டமும் தொந்தரவும் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, மணி ஆர்டர் கமிஷனைப் பிடித் துக்கொண்டாலும் பரவாயில்லே, நேரடியாகச் சம்பளம் கிடைக்க ஒரு உத்தரவாதம் வேண்டுமென்று ஆசிரியர்கள் பலர் என்னிடத்தில் சொல்ல நான் கேட்டிருக்கிறேன். ஆகையால், அமைச்சர் அவர்கள் இதில் கவனம் செலுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன். பஞ்சாயத்து யூனி யன் சபைகள் அமைய இருக்கின்றன.

(Deputy Speaker in the Chair.)

அந்த பஞ்சாயத்து யூனியன்கள் இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டுவிட லாம். அப்பொழுது நகர்ப்புறங்களில் இருக்கும் சில பள்ளிக்கூடங்கள் தான் மிஞ்சும். இடைக்காலத்தில் மணி ஆர்டர் கமிஷனைப் பிடித்துக் கொண்டாலும் பரவாயில்லே, நேரடியாகச் சம்பளம் கொடுப்பதுபற்றி ஆலோ சிக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களேக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

லோகல் லேப்ரரி அதாரிடி என்று இருக்கிறது. சமுதாய கல்வி அபி விருத்திக்காக வேண்டி பல படிப்பகங்கள் புத்தங்கள் வாங்குவதில் பல பாரபட்சம் இருக்கிறது என்ற புகார்கள் வருகின்றன. அப்படிப்பட்ட புகார் கள் ஏற்படாமல் பார்க்கவேண்டியது அவசியம். தனியாக லோகல் லேப்ரரி அதாரிடி என்று ஸ்தாபனம் வேண்டுமா என்பதையே ஆலோசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இப்பொழுது டிஸ்ட்ரிக்ட் டெவலப் மெண்ட் கவுன்சில்கள் அமைந்திருக்கின்றன. அவைகள் ஆலோசிக்கவேண் டிய பொறுப்பு கல்வி சம்பந்தப்பட்டதும் ஒன்று. என் அந்த டிஸ்ட்ரிக்ட் டெவலெப்மெண்ட் கவுன்சிலுக்கே இந்தப் பொறுப்பைக் கொடுக்கக்கூடாது என்று கேட்கிறேன். வேண்டுமானுல் அதிலிருந்து உப கமிட்டி நியமித்துக் கொள்ளலாம். சிலவற்றுக்கு தனி கமிட்டி இருக்கிறது. அதுபோல் ஒவ் வொரு பிரிவுக்கும் தனிக் கமிட்டி நியமிப்பதுபோல், கல்வி சம்பந்தமாக புத்தகங்கள் வழங்குவது, இவைகளுக்காக கமிட்டி போட்டு டிஸ்ட்ரிக்ட்

[Sri M. Kalyanasundaram] [26th April 1960

டெவலெப்மென்ட் கவுன்சிலினுடைய பொறுப்பிலே விடுவதற்கு அதை ஆலோசிக்கவேண்டுமென்று நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளு கிறேன்.

4-30 p.m. இதற்கு மேலாக இந்த மானியத்தைப் பற்றி பேசக்கூடிய சமயத்தில் இப்பொழுது இருக்கும் முக்கியமான பிரச்னையைப் பற்றி என்னுடைய அபிப்பிராயத்தை சொல்லாமல் இருக்கமுடியாது. இந்தப் பிரச்னை ஒன்றும் புதிதல்ல. ஏற்கெனவே தமிழ்தான் கல்லூரியிலும் போதனு மொழியாக வேண்டும் என்பது இந்தச் சபையின் அநேகமாக ஏகோபித்த முடிவு என்பது தான் என்னுடைய அபிப்பிராயம். 1954–ம் வருஷத் திலிருந்து சட்ட சபையில் பல முறை தமிழ் மொழி ஆட்சி மொழியாக வேண்டும், தமிழ் கல்லூரியிலும் உள்பட எல்லா மட்டங்களிலும் போதனு மொழியாக வேண்டும் என்று கூறி வந்தவர்களுள் நானும் ஒருவன். அமைச்சர் அவர்கள், நம்முடைய கல்வி அமைச்சர் அவர்கள் இதைச் கொஞ்சம் தூரதிருஷ்டியோடு கவனித்துத் தான் நடவடிக்கை எடுத்திருக் கிறார்கள் என்பது என்னுடைய அபிப்பிராயம். மற்ற விஷயங்களில் மாறு பட்ட கருத்துக்கள் இருக்கலாம். தமிழ் ஆட்சி மொழி ஆக வேண்டும், கல்லூரியில் தமிழ் போதனு மொழியாக வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு கிடையாது. ஒரு வேளை அமைச்சர் அவர்கள் அரசியல் லாபத்தைக் கருதி எதிர்க்கட்சிகளுக்கு விட்டுக் கொடுக்கக்கூடாது என்ற நோக்கத்தோடு செய்திருந்தாலும் சரி, நம்முடைய காலத்திலேயே தமிழ் ஆட்சி மொழி ஆயிற்று என்ற நல்ல பெயரை எடுத்துக்கொள்வதற்காக செய்திருந்தாலும் சரி, அதில் தவறு இல்லை. அவர் அதற்காக எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளை நான் பாராட்டாமல் இருக்க முடியாது. 1956-ல் பழைய சட்ட சபையில் தமிழ் தான் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று நடவடிக்கை எடுத்து, அதற்கான சட்டமும் இயற்றப் பட்டது. அதன் விளைவாக அரசாங்கம் பல நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டிருக்கிறது. தமிழ் ஆட்சி மொழியாகி விட்டது என்றால், அதனு டைய அர்த்தம் தமிழிலே எழுத, படிக்க, பேச, சிந்திக்க எல்லா விஷயங் களிற்கும் திறமை உள்ளவர்கள் அவசியம். எதிர் காலத்தில் நம்முடைய ராஜ்யம் முன்னேற வேண்டுமானால், தமிழ் எந்த அளவுக்கு கல்லூரி களிலும், மற்ற பொது நிர்வாகத்திலும் வழங்கப்படுகிறதோ அதைப் பொறுத்துத் தான் இருக்கிறது. ஒரு சிலர் இந்தியே தேசம் பூராவும் பரவவேண்டுமென்று நினைக்கலாம். அவர்களுடைய எண்ணம் நிறை வேறாது. இந்தியும் வேண்டாம், தமிழும் வேண்டாம், தாங்கள் படித்து பழகிய ஆங்கிலமே இருக்கட்டும் என்று சிலர் நினைக்கலாம். அவர்களுக்கு மூளை சோம்பேறித்தனம் ஏற்பட்டிருக்கிறது என்பது என்னுடைய அபிப் பிராயம். அவர்களுக்கு சிந்திக்க சக்தி இல்லை என்று நினைக்கிறேன். இந்தியும் வர முடியாது. ஆங்கிலம் தொடர்ந்து இருக்கவேண்டுமென்று சொல்லக்கூடிய துணிவும் கிடையாது. இப்படி இருக்கக்கூடிய நிலைமை யில் தமிழ் ஆட்சி மொழியாக வேண்டும் என்று சட்டம் இயற்றி விட்டு, தமிழ் போதனு மொழியாக உயர் நிலை பள்ளிகளில் மட்டும் இருப்பதற்கு ஏற்பாடு செய்துவிட்டு, கல்லூரிகளில் தமிழை போதனு மொழியாக ஆக்கா விட்டால், மாணவர்களுடைய நிலை என்ன ஆகும்? படித்து வரக்கூடிய மாணவர்களுக்கு எந்த விஷயத்தையும் தமிழிலும் சொல்லத் தெரிவ தில்லை. ஆங்கிலத்திலும் சொல்லத் தெரிவதில்லை. இந்த மாதிரி நிலைமை யில் கல்லூரியிலிருந்து வெளி வருபவர்கள் நம்முடைய நிர்வாகத்திற்கு பயன்படுவார்களா என்பதை சிந்தித்துப் பார்த்து, இந்தப் பிரச்னையில் நாம் ஒரு முடிவுக்கு வரவேண்டும். எதிர் காலத்தில் தமிழ் முன்னேற வேண்டுமென்றால், இந்தி வரவிடாமல் தடுக்கவேண்டுமென்றால் தமிழ் நாட்டில் கல்லூரிகளில் போதனு மொழி தமிழ் மொழியாக இருக்க வேண்டும். சில பேர்கள் ஆங்கிலமே போதனு மொழியாக இருக்கவேண்டு மென்று நினைத்தால், அவர்களுக்காக தனி கல்லூரி வைத்துக்கொள்வதில் ஆட்சேபனை இல்லை. அதே மாதிரி இந்தி போதனு மொழியாக இருக்க வேண்டுமென்று நினைப்பவர்களுக்கு தனி கல்லூரி வைத்துக்கொள் வதற்கு சுதந்திரம் இருக்கலாம். அதில் ஆட்சேபனை இல்லை. ஆனால், தமிழ் நாட்டில் கல்லூரிகளில் எல்லாப் பாடங்களும் உட்பட தமிழ்தான் போதனு மொழியாக இருக்க வேண்டும். தமிழ்தான் தமிழ் நாட்டு

26th April 1960] [Sri M. Kalyanasundaram]

நிர்வாக மொழியாக இருக்க வேண்டும், அந்த அந்தஸ்து தமிழ் மொழிக்கு கொடுக்கவேண்டுமென்று கருதி ஆங்கிலத்தை வைத்துக்கொண்டால் தான் அனுகூலம் என்று எண்ணமல் இந்தப் பிரச்னையை அணுகினுல், அதைப் புரிந்துகொள்ளுவது சுலபம். இந்திக்கும், தமிழுக்கும் மோதல் வரக்கூடாது என்று கருதி, முன் கூட்டியே தமிழுக்கு உரிய அந்தஸ்தை கொடுத்து விட வேண்டும். தமிழ் நிர்வாக மொழியாக இருக்க வேண்டு மென்று அதற்குரிய சட்டத்தை இயற்றினேம். அதை ஒட்டி அரசாங்கம் சில நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டிருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் இப்பொழுது இது விஷயமாக ஒரு சர்ச்சை ஏற்படக் கராணம் என்ன ? என்னுடைய குற்றச்சாட்டு சர்க்கார் இன்னும் துரிதமாக நடவடிக்கை எடுக்கவில்லை என்பதுதான். இன்னும் பல பாட புத்தகங்கள் வெளியிடப் படவேண்டியிருக்கிறது. இதை சர்க்கார் ஏற்று நடத்தவேண்டுமென்று வற்புறுத்துகிறேன். அதிலே பல சங்கடங்கள் இருக்கலாம். வேகமாக போகாவிட்டாலும் சரியான பாதையில் அடி எடுத்து வைக்கவேண்டு மென்பது என்னுடைய அபிப்பிராயம். கோவையிலே 1960–61-ம் ஆண்டி லிருந்து ஆரம்ப முயற்சியாக கள்ளூரியில் தமிழ் போதனு மொழியாக இருக்கும். அதுவும் விஞ்ஞானப் பாடங்கள் தமிழில் சொல்லிக் கொடுக்கப் போவதில்லை. அப்படிச் சொல்லிக்கொடுக்கட்டும் என்கிற முயற்சியை எல்லோரும் வரவேற்கவேண்டும். அதில் ஆட்சேபனே ஏன் இருக்க வேண்டும் என்பதை என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. அதற்குப் பிறகு 1963–64-ம் ஆண்டிலிருந்து அதே மாதிரி மற்றக் கல்லூரிகளிலும் தமிழ் போதனு மொழியாக வரவேண்டுமென்று சொல்லுகிருர்கள். அதில் ஒரு நிபந்தனேயும் போட்டிருக்கிருர்கள். அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்காவிட்டால், சர்க்கார் கொடுக்கக்கூடிய மானியத்தை கொடுக்காமல் இருக்கலாம் என்ற ஒரு நிர்ப்பந்தம் இருக்கிறது அதில். நிர்ப்பந்தம் வேண்டுமா என்ருல் வேண்டும். நிர்ப்பந்தம் இல்லா விட்டால் மற்ற கல்லூரிகளை நடத்தக்கூடியவர்களுக்கு என்ன அக்கரை வரும் ?

யூனிவர்ஸிடி கடந்த 10 வருஷ காலமாக நடந்துகொண்டு வந்திருக்கும் விதத்தைப் பார்த்தால் இந்த நிர்ப்பந்தம் அவசியம் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். இந்தப் பிரச்னேயின் மீது அமைச்சர் அவர்கள் எடுக்கக் கூடிய நடவடிக்கையை ஆதரித்தும் சர்வகலாசாலையை குறை கூறியும் நான் பேச வேண்டியிருக்கிறதே என்று எனக்கு வருத்தமாக இருக்கிறது. சர்வகலாசாலேக்கு சுதந்திரம் இருக்கவேண்டும். எதற்காக சுதந்திரம் இருக்க வேண்டும்? அமைச்சர் அவர்கள் கொள்கையை நிறை வேற்றத் தவறினுல், அவர்களேயும் மீறி கொள்கையை நிறைவேற்று வதற்கு சர்வகலாசாலேக்கு சுதந்திரமே தவிர எந்தக் கொள்கையையும் முன்னேற விடாமல் தடுத்து நிறுத்துவதற்கு அவர்களுக்கு சுதந்திரம் கொடுக்கப்பட வில்லை. சர்வகலாசாலே இந்த சுதந்திரத்தை சரிவர பயன் படுத்தாவிட்டால், இம்மாதிரி பயன்படுத்துவார்களேயானுல், யூனிவர்ஸிடி சட்டத்தைப் பற்றி நாம் ஆலோசிக்கவேண்டியிருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

தமிழ் போதனு மொழியாகவேண்டுமென்பது உண்மையிலேயே காங் கிரஸ் கொள்கை அல்ல. காங்கிரஸ் கட்சியினுடைய கொள்கை அல்ல. சொல்லப்போனுல் காங்கிரசிலேயே ஆங்கிலம் இருக்கவேண்டுமென்று விரும்புகிறவர்களும் இருக்கிருர்கள். இன்னும் பலர் இந்தி வரவேண்டு மென்று விரும்புபவர்களும் இருக்கிருர்கள். இது ஒரு கட்சிக் கொள்கை அல்ல. இந்த மகாசபை தமிழே போதனு மொழியாக இருக்கவேண்டு மென்று சொல்லி, எதிர்க்கட்சிகள் உட்பட எல்லாக் கட்சிகளின் ஆதரவு பெற்று தமிழ் போதனு மொழியாக வேண்டும் என்று தீர்ப்பு அளித்திருக் பொழுது, முடிவு செய்திருக்கிறபொழுது, அந்தக் கொள்கையை நிறை வேற்ற வேண்டிய பொறுப்பு கல்வி அமைச்சரைவிட, யூனிவர்ஸிடி அதி காரிகளுக்கு உண்டு என்பதை யூனிவர்ஸிடி அதிகாரிகளுக்கும், வைஸ் சான்ஸலர் அவர்களுக்கும் நான் பணிவோடு தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன். அப்படி இருக்கும்பொழுது அனுவசியமாக ஒரு சர்ச்சையை ஏற் படுத்தி, நாட்டிலே எதற்காக குழப்பத்தை உண்டாக்க வேண்டும் ?

[Sri M. Kalyanasundaram] [26th April 1960

அம்மாதிரி செய்வது தமிழுக்கு செய்யும் சேவையாகாது, யூனிவர்ஸிடிக்கு செய்யும் சேவையாகாது, கல்லூரிகளுக்கு செய்யும் சேவையாகாது. அதற்குப் பதிலாக வைஸ் சான்ஸ்லர் என்ன நடவடிக்கை எடுத்திருக்க வேண்டும் ? தொடர்ந்து 15 வருஷ காலமாக வைஸ் சான்ஸ்லராக இருக்க கூடிய அதிர்ஷ்டம் படைத்தவர் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார் ? காங்கிரஸ் அதிகாரத்திற்கு வருவதற்கு முன்னால், காங்கிரஸ் அல்லாத பல ஸ்தாபனங்கள் அந்தந்தப் பிரதேச மொழிதான் போதனா மொழியாக வேண்டும் என்று திட்டவட்டமாக யோசனைகள் கூறியிருக்கின்றன. நம்முடைய மதராஸ் யுனிவர்ஸிடி சிண்டிகேட் தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறார்கள். அவர்கள் கொடுக்கக்கூடிய யோசனைகளில் ஒன்று :

" Taking immediate steps to prepare the ground for introducing the regional language as the medium of instruction in the University classes."

உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ரீஜனல் மொழி, வட்டார மொழி என்றால், தமிழ் மொழிதானே இங்கு ? தமிழை போதனா மொழியாக்குவதற்கு உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அடுத்து

" Enriching sufficiently and suitably the regional language."

ரீஜனல் மொழியை போதுமான அளவுக்கு வளப்படுத்துவதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று சொல்லுகிறார்கள். இந்த இரண்டு யோசனைகளின் பேரில் நடவடிக்கை எடுத்துவிட்டு, யுனிவர்ஸிடி அதிகாரிகள் இதில் என்ன கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது என்பதை சொல்வார்களே யானால், அவர்களுடைய முயற்சியை பாராட்டியிருக்க முடியும். இந்த யோசனைகளின் பேரில் ஒன்றும் நடவடிக்கை எடுக்காமல், எல்லாவற்றிற்கும் ஆங்கிலம்தான் பயன்படும், ஆங்கிலத்திற்குத்தான் போதனா மொழியாக இருப்பதற்கு தகுதி இருக்கிறது, தமிழ் போதனா மொழியாவதற்கு தகுதி இல்லாதது என்ற ஒரு முடிவில் இந்தப் பிரச்னையை அவர்கள் அணுகு கிறார்கள் என்பது என்னுடைய அபிப்பிராயம். கடந்த பத்து வருஷ காலமாக இந்தத் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. 1950-ல் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. இப்பொழுது 1960-ம் வருஷம் நடக்கிறது. இந்த 10 வருஷ காலத்தில் ஒன்றும் நடவடிக்கை எடுக்காமல் இருந்து விட்டு சர்க்கார் நிர்ப்பந்தம் காரணமாக எடுக்கக்கூடிய நடவடிக்கைகளுக்கு முட்டுக் கட்டை போடுவது நியாயமா என்பதை சிந்தித்துப் பார்க்கவேண்டும். இது தமிழ் நாட்டின் எதிர் காலத்தைப் பாதிக்காதா என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். யுனிவர்ஸிடியின் பெயரால் இப்பொழுது நடைபெறும் சர்ச்சை நியாயமற்றது. அதற்கு எந்த விதமான காரணமும் கிடையாது. யுனி வர்ஸிடி நிர்வாகிகள் தங்களுடைய போக்கை மாற்றிக்கொள்ளாவிட்டால், தமிழகத்திலுள்ள மக்களின் சாபத்திற்கு ஆளாக வேண்டியிருக்கும் என்பதைத்தான் ரொம்பவும் பணிவோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

யுனிவர்ஸிடி சம்பந்தப்பட்ட மட்டில் இன்னொரு விஷயத்தையும் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். 1954-ம் வருஷத்தில் இரண்டு யுனிரவர்ஸிடி சட்டங்களையும் திருத்தி அமைக்க வேண்டுமென்று யோசனையை வற்புறுத்தியிருக்கிறோம். இப்பொழுது . .

DEPUTY SPEAKER : The hon. Member has got one minute more.

SRI M. KALYANASUNDARAM : I will finish soon, Sir.

அண்ணாமலை யுனிவர்ஸிடியைப் பற்றி தனியாக பேசிக்கொள்ளுகிறேன். வெள்ளை அறிக்கையின் மீது விவாதம் நடத்துவதற்கு அமைச்சர் அவர்கள் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். வெள்ளை அறிக்கையில் கண்டிருக்கக்கூடிய கோட்பாடுகளை தனியாக உருவாக்கி இந்தச் சபையில் அது ஒரு தீர்மானமாக நிறைவேற்றப்படவேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம். அமைச்சர் அவர்கள் வெள்ளை அறிக்கையை தழுவிய ஒரு தீர்மானத்தை சபையின்

முன்பு கொண்டு வந்து, அதை இந்த சபை விவாதிக்கவேண்டும். மதராஸ் யுனிவர்ஸிடி சட்டத்தையும், அண்ணாமலை யுனிவர்ஸிடி சட்டத்தையும் திருத்துவதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டும். யுனிவர்ஸிடி சென்னையில் மட்டும் இருப்பதும் பிரயோசனம் இல்லை. தமிழ் நாட்டில் பல பகுதிகள் இருக்கின்றன. பரவலாக வெவ்வேறு இடங்களில் 2, 3 யுனிவர்ஸிடியாக ஆக்கினால் என்ன என்கிற யோசனையையும் அமைச்சர் அவர்கள் கவனிக்க வேண்டும். யுனிவர்ஸிடிகளுக்கு அதிகப் பொறுப்புகள் கொடுக்க வேண்டும் என்றாலும்கூட, அவர்கள் சரியாகப் பணியாற்ற அவர்களை சட்டத்தின் மூலம், கட்டுப்படுத்தவேண்டும் என்று கூற விரும்பவில்லை. அவர்களை ஒழுங்குபடுத்த வேண்டும். சட்டத்தின் முடிவுகளை நிறைவேற்ற வேண்டிய பொறுப்புகளை ஏற்கத்தக்க சூழ்நிலையை ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM:** உதவி சபாநாயகர் அவர்களே, இந்த விவாதத்தில் கலந்துகொண்டு, பல நல்ல கருத்துக்களை எடுத்து உரைத்ததற்காக அங்கத்தினர்கள் எல்லோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

கல்வியைப் பொறுத்த வரைக்கும், முடிவுகள் அன்றாடம் செய்யப் கூடியதில்லை. இன்றைக்கு ஆரம்பக் கல்வியைப் பற்றி முடிவு செய்கிறோம் என்றால், ஆரம்பக் கல்வி அடிப்படையில் செய்யவேண்டும்; இப்பொழுது ஆரம்பக் கல்வி ஆரம்பிக்கும் குழந்தை 10-வது, 11-வது வரும்போது எப்படியிருக்கவேண்டும், அதற்கு மேல் சர்வகலாசாலை போகும்போது எப்படி யிருக்கவேண்டும் என்று தூரதிருஷ்டியுடன் திட்டம் போட்டால் தான், வெற்றி பெற முடியும். இந்த வருஷத்தைப் பொருத்தோ, அல்லது அடுத்த இரண்டு, மூன்று வருஷத்தைப் பார்த்துச் செய்தால் அது சரியாகாது. அதில் வெற்றி காண முடியாது. இன்னொன்றையும் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். அந்த முறையில்தான் நம் ராஜ்யத்தில் திட்டத்தை வகுத்து வருகிறோம். அதைப் பற்றி நாம் எல்லோரும் பெருமைப்பட வேண்டும். கல்வியைப் பொருத்த வரையில் அதை ஒரு கட்சி மனப்பான்மையோடு நோக்கக்கூடாது. எல்லோரும் ஒத்துக்கொள்ளக் கூடிய முறையில், கல்வித் திட்டத்தை வகுக்க வேண்டும். அதற்காக கல்வி சம்பந்தமாக கொள்கைகள் எனக்கோ, காங்கிரசுக்கோ, காங்கிரஸ் சர்க்காருக்கோ இல்லை என்று சொல்லி விடக்கூடாது. அடிப்படையான கல்விக் கொள்கை இருக்கிறது. ஆனால் அந்தக் கொள்கையோடு, எதிர்க் கட்சிகளையும் கலந்தாலோசித்து, சர்ச்சை செய்து அவசியமான மாறுதல்களைச் செய்து, அவர்களையும் ஒப்புக்கொள்ளச் செய்து, திட்டத்தை வகுக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்திருக்கிறோம். அந்த முறையிலே இன்றைக்கு, ஆரம்பக் கல்வி, உயர்நிலைக் கல்வி எப்படி நடக்க வேண்டும் என்று ஏகோபித்த முடிவுக்கு வந்திருக்கிறோம். பள்ளிப் படிப்பு 11 வருடங்கள் இருக்கவேண்டும்; அதிலே 7 வருஷம் ஆரம்பக் கல்விக்கும், 4 வருஷங்கள் உயர்நிலை படிப்புக்கும் இருக்கும். இந்த 7 வருஷத்திற்குள்ளே ஐந்து வகுப்புகள் ஆரம்பக் கல்விப் பள்ளியில் இருந்து வந்திருக்கின்றன. உயர்நிலைப் பள்ளியில் எட்டாவது வரை; இனிமேல், உயர்நிலை–ஆரம்பப்பள்ளிகளில் 5, 2, 4 என்று ஆகிறது. இந்த முறையில் வகுத்து, இன்றைக்கு, அதை அமுலாக்க வேண்டும் என்று முயற்சிக்கிறோம். முதல் எழு வருஷம் பற்றி கவனிக்கும்போது, அந்தப் படிப்பு இப்பொழுது இல்லாவிட்டால், இன்னும் 5 வருஷத்திற்குள் அல்லது 10 வருஷத்திற்குள், எல்லாக் குழந்தைகளுக்கும் கட்டாயமாகவும், இலவசமாகவும், கொடுக்கவேண்டியது என்ற கொள்கை நமது அரசியல் சட்டத்தின் அடிப்படை. அதை உடனடியாகச் செய்ய முடியாது என்று உணர்ந்து, 6 வயது முதல் 11 வயதுவரை உள்ள குழந்தைகளுக்கு 1965-க்கு உள்ளாகவே, பள்ளிக்குப்போகும் வாய்ப்பை அளிக்கும் இலக்கை ஏற்றுக்கொண்டிருக்கிறோம். ஆகவே, இது மூன்றாவது திட்டத்திற்குள் முடிவு அடையும். அதற்கு மேல் பாக்கி இருக்கக்கூடிய, இரண்டு வகுப்புக்கும் இருக்கிறவர்களை அடுத்த இரண்டு, மூன்று ஆண்டுகளில் சேர்க்க வேண்டும். இன்றைக்கு இதை ஒரு 10 வருஷத் திட்டமாக நோக்கினால், 10 வருஷத்திற்குள்ளே, நம் கிராமங்களிலே, நகரங்களிலே இருக்கும் எல்லாக் குழந்தைகளையும்

ஆண் பெண் வித்தியாசமில்லாமல், ஏழாவது வரை படிக்கும் ஏற்பாடு செய்ய வேண்டியது. இப்பொழுது ரூ. 17 லட்சம், 6 முதல் 11 வயது வரைக்கும் இருக்கக்கூடியவர்களுக்கு என்றால், அடுத்த இரண்டு வகுப்புகளுக்கும், எல்லாக் குழந்தைகளுக்கும் இன்னும் ரூ. 10 அல்லது 12 லட்சம் அதிகரிக்கலாம். அந்த வகுப்புகளில் குறைவு இப்பொழுது. ஆகவே, கல்வியை ரொம்பப் பரவலாக, அநேக லட்சம் குழந்தைகளுக்கு கொடுக்கவேண்டும் என்ற அந்தக் கட்டத்திலே, கல்வி சொல்லிக் கொடுக்கக் கடமைப் பட்டிருக்கிறோம். இது ஏன் அளவில் மிகவும் பெரிய பிரச்னை. எண் பரவலாகும்போது, தரத்தில் குறைவு ஏற்படுவதைப் பார்க்கிறோம். கூடிய வரைக்கும், குறைவு ஏற்படாமல் பார்ப்பது அவசியம். அந்தந்த முறையிலே யோசனை செய்ய வேண்டியது அவசியம்; இப்பொழுது மட்டுமல்ல, லட்சக் கணக்கான குழந்தைகள் வரும்போது, என்ன செய்ய வேண்டுமென்று, அதற்கான முறையிலே கல்வித் திட்டத்தை அமைக்க வேண்டியது நம் கடமை. அதைச் சிறிது ஆராய வேண்டியதவசியம் என்பதை இந்தச் சபைக்கு விளக்க விரும்புகிறேன்.

இப்பொழுது 7-வது வகுப்பு வரை வைத்து நடத்தும்போது, ஒவ்வொரு பகுதியில் 5 வகுப்பு வரை வைத்து நடக்கிறது. நம் ஆசிரியர்கள் தரம் என்ன? 8-வது வகுப்பு வரை கல்வி சொல்லிக் கொடுக்க வேண்டிய இன்றைக்கு இருக்கும் நிலையில், எல்லோரும் படிக்க வேண்டும் என்று சொல்லும்போது கல்வியைப் பெற்ற ஆசிரியர்கள் பயிற்சிக்கு இப்பொழுது இருக்கும் 15 கோடியல்ல, இன்னும் 5, 6 கோடி அதிகம் வேண்டும். 8-வது வரை பயிற்சி கொடுத்து உபாத்தியாயர்கள் ஒவ்வொரு பள்ளிக் கூடத்திலும், ஒரு செகண்டரி கிரேட் உபாத்தியாயர் இருந்தால், 4, 5 வகுப்புகளில் தரம் உயரும் என்று நம் பார்க்கிறோம். ஆங்கிலம் போதிக்க மட்டுமல்ல. என்னுடைய கருத்தில், 5-வது வகுப்பு வரை இருக்கும் குழந்தைகளுக்கு, ஒரு செகண்டரி க்ரேட் உபாத்தியாயர் இருக்க வேண்டும் என்று, அந்த அடிப்படையில் நினைத்து வந்தோம். அதைப் பிறகு அமுலுக்கு கொண்டு வரும்போது, 5-வது வகுப்பிலேயே ஆங்கிலம் சொல்லிக்கொடுக்கும் முறையில் வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. அதன் மூலம் சிலர் வேலையில்லாமல் போகிறார்கள். மற்ற பாடங்களின் தரம் உயர உயர்ந்த தகுதியுள்ள ஆசிரியர்கள் ஏற்பட்டால், ஏற்படும் வாய்ப்பு வரவேற்கத்தக்கதுதான். ஆனால், அதன் காரணமாக சில ஆசிரியர்கள் வேலை இல்லாமல் போனால், புதிய புதிய வகுப்புடன் பள்ளிக் கூடங்கள் ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது. இதிலே வேலையிலிருந்து நீங்கியவர்களுக்கு, முதல் சலுகை கொடுத்து, பள்ளிக் கூடத்தில் அமர்த்திக் கொள்வது சௌகர்யமாக இருக்கிறது. என்கருத்து எல்லோருக்கும் படிப்பு சொல்லிக்கொடுக்க வேண்டியது. 5-ம், 2-ம் ஆக இருப்பது கூடிய சீக்கிரத்தில் நடக்கக்கூடியது. அது நான் நினைப்பது.

சின்ன கிராமங்களுக்கு, பீடர் ஸ்கூல் என்று எல்லா கிராமங்களிலும் ஏற்பாடு செய்ய வேண்டும். அதில் செகண்டரி ஆசிரியர்களைப் போட்டால் நல்லது. இல்லாவிட்டாலும் பரவாயில்லை. பிறகு 4, 5 கிராமங்களுக்குப் பொதுவாக ஒரு பெரிய பள்ளிக்கூடம் இருக்க வேண்டும்; அது எல்லா விதமான வசதிகளோடு கூடியதாக இருக்கவேண்டும். அப்படிப்பட்ட ஒவ்வொரு பள்ளிக்கூடத்திற்கும் ஹெட்மாஸ்டர், பி.ஏ. எல்.டி ஆக இருக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்யவேண்டும். முதலில் பீடர் ஸ்கூலாக ஒவ்வொரு கிராமத்திலும் அமைக்க வேண்டும். பிறகு இப்படி பெரிய பள்ளிக்கூடம் 4, 5 கிராமங்களுக்குப் பொதுவாக இருந்தால், குழந்தைகள் அதிக தூரம் நடந்துபோக வேண்டிய அவசியம் இருக்காது. 4, 5 அல்லது 6 கிராமங்களுக்கு, எல்லாவசதிகளும் அமைந்த நல்ல கட்டடம், நல்ல சூழ்நிலை, தோட்டம் பல்வேறு கருவிகள் எல்லாம் அமைந்ததாக இருந்து அதில் ஒரு எல்.டி. தலைமை ஆசிரியராக ஏற்பாடு செய்தால், எல்லாக் குழந்தைகளுக்கும் படிப்புச் சொல்லிக் கொடுக்கும் காலத்தில் தரம் குறையாமல் பார்த்துக் கொள்ளலாம்.

இரண்டாவது மொழி, 5-வது 4-வது ஆண்டில் யோசிக்கலாம். இதை எதற்குச் சொல்கிறேன் என்றால், ஒரு மொழி பயில்வது இளம் வயதில் சுலபம் என்பதை விஞ்ஞான ரூபமாக, தத்துவ ரூபமாக, ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது, நிரூபிக்கப்பட்டுமிருக்கிறது. ஆகவே குழந்தைப் பருவத்தில்

26th April 1960] [Sri C. Subramaniam]

புது மொழியைப் பயிலுவதற்கு சுலபமாக அமைந்து விடுகிறது. அதன் பின்னால் யோசிக்க வேண்டிய விஷயம் பள்ளிக்கூடங்கள் எந்த முறையில் அமைந்தால் இந்தக் காரியங்களை முடிக்கலாம், என்பதைப் பார்க்க வேண்டும். 4, 5, 6 வகுப்புக்களில் அதை ஆரம்பிக்கலாம். அந்த நிலைமையில் இரண்டாவது மொழியை ஆரம்பிப்பதாக திட்டமிடப் பட்டிருக்கிறது.

அடுத்தபடியாக, பல கருத்துக்கள் சொல்லப்பட்டன. ஆசிரியர்களுக்கு எத்தனை மாணவர்கள் இருக்க வேண்டும் என்பதைப் பற்றியெல்லாம் சொல்லப்பட்டது. இதைப் பற்றி சர்வ கட்சி சேர்ந்து ஆலோசித்து ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். சிலர் ஒரு ஆசிரியருக்கு 20 பேர் இருக்கலாம் என்றும், சிலர் 25 பேர்கள் இருக்கலாம் என்றும், சிலர் 30 பேர்கள் இருக் கலாம் என்றும் சொல்லுகிறார்கள். சமீபத்தில் நான் இங்கிலாந்திலுள்ள நிலைமையைப் பார்த்தேன். அதைப் பார்த்து வந்தபோது அது அதிசயிக்கத் தக்கதாக இருந்தது. அவர்கள் இன்றைக்குச் சொல்லக்கூடிய அளவைப்பார்த்தால் முதலில் '**It will be better to put all the available educational money and manpower into first reducing over-sized classes to the prescribed maxima of 40 childr n in primary and 30 children in secondary schools**'. அவர்கள் சட்டப் பிரகாரம் வைத்து இருப்பது 40 பேர்கள். இது ஆரம்பப் பள்ளிகளில். உயர்நிலைப் பள்ளிகளில் 30 பேர்கள் என்று சொல்லி இருக் கிறார்கள். முதலில் அதிகமான பிள்ளை எடுத்துக் கொள்வதாகத் திட்ட மிட்டார்கள். கடைசியில் 40, 30 என்று முடிவு செய்திருக்கிறார்கள். ஆரம்பக் கல்விக்கு 700 மிலியன் பவுண்ட் செலவு செய்யக்கூடிய இடத்தில் இப்படி அமைத்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட நிலைமை அங்கு இருக்கிறது. ஆகையால், இன்றைக்கு நம் தேசத்தில் மட்டுமல்ல, இங்கிலாந்திலும் இந்த முறைதான் இருக்கிறது என்பதைப் பார்க்கும்போது முதல் இடத் தில் 60 பிள்ளைகளுக்குப் படிப்புச்சொல்லிக்கொடுத்து வந்தார்கள். இன்றைக்கு நாம் எல்லா குழந்தைகளுக்கும் படிப்புச் சொல்லிக்கொடுக்க வேண்டிய தாக இருக்கிறது. அதனால் அந்த முறையை ஒப்புக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. எவ்வளவுக்கு எவ்வளவு குழந்தைகள் குறைவாக இருக்கிறதோ அந்த அளவு கல்வித் தரமும் உயர்ந்திருக்க முடியும். கல்வித் தரம் உயர்வதோடல்லாமல் எல்லோருக்கும் பரவலாகச் சொல்லிக் கொடுக்கவேண்டியதாகவும் இருக்கிறது. அதன் காரணமாகத்தான் இப்படி ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இந்த அடிப்படையில் 1970-ம் வருஷத் திற்குள் எல்லா குழந்தைகளையும் பள்ளிக்கூடத்திற்குக் கொண்டு வந்து விடலாம். அப்படிக் கொண்டு வரும்போது ஏழாவது வகுப்பு வரைக்கும் ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் எல். டி. ஆசிரியர் இருக்க வேண்டியதாக ஆகிறது. அதற்கு வேண்டிய பயிற்சியும் எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. கல்வித் தரம் உயர்வதற்கு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. குழந்தைகளுக்கு செலவு செய்யக்கூடிய கோடிக்கணக்கான ரூபாய் நல்ல பலன் கிடைக்கும்படியாகச் செய்ய வேண்டும். அப்படி பலன் கிடைக்க வேண்டும் என்ற அடிப்படையில் நாம் திட்டத்தை அமைத்துக்கொள்ள வேண்டும்.

அதற்கு அடுத்தபடியாக 8, 9, 10, 11 வகுப்புகளில் நான்கு வருஷங்கள் சொல்லிக்கொடுக்க வேண்டும் என்று வைத்திருக்கிறோம். அந்த அடிப்படையில் 1970-க்குள் எல்லோருக்கும் சொல்லிக் கொடுத்தாகி விடும். ஆகவே ப்ரி யூனிவர்ஸிடி போவதற்குள் எல்லோருக்கும் சொல்லிக்கொடுத் தாகி விடும் என்ற அடிப்படையில் திட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இப்படி மாற்றி அமைக்கப்பட்ட திட்டத்தின்படி படிப்பு சொல்லிக் கொடுக்க ஏற்பாடு ஆகி இருக்கிறது. அதற்கு வேண்டி பாடத் திட்டத்தையும் பல வகுப்புகளுக்கு மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது. உயர் நிலைப் பள்ளிப் படிப்புக்குமேல் வெறும் புத்தகப் படிப்பு மட்டும் போதாது என்று அதற்கு மேல் தொழில் படிப்பு படிக்க வேண்டும் என்பதற்காக பல்வேறு தொழில் படிப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதாவது இன்ஜினியரிங், விவசாயம், செக்ரெடேரியல் இதைப் போன்ற படிப்பு களுக்கு வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. அப்பொழுது டெக்னிகல் ஸ்கூல் என்று தொழில் கற்றுக்கொள்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்

கிறது. அதற்கு என்று நான்கு வருஷங்கள் பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதற்கும் முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறோம். அதுவும் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு முக்கியமான திட்டம்.

இன்னொரு முக்கியமான விஷயம். அதாவது மொழி. இது ஒரு பெரிய பிரச்னையாக இருக்கிறது. இதைப்பற்றியும் ஒரு முடிவு எடுத்திருக்கிறோம். அதன்படி மூன்று மொழிகள் படிக்க வேண்டியதாக இருக்கிறது. ஒன்று தாய் மொழி, இரண்டாவது பிரதேச மொழி, மூன்றாவது ஆங்கிலம் அல்லது வேறு ஏதாவது ஒரு ஐரோப்பிய மொழி. அது ஆங்கிலமாகத்தான் இருக்கும். பிரதேச மொழி என்று சொல்லும்போது அது இந்தியாகத் தான் இருக்க வேண்டும் என்று வைத்திருக்கிறோம். பெரும்பாலும் ஹிந்தியாகத்தான் அது இருக்கும். ஆகவே இப்படி மூன்று மொழிகள் படிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆங்கிலம் என்று சொல்லும் போது வேறு ஐரோப்பிய மொழியாகிய ரஷ்ய மொழியாகவோ அல்லது வேறு எந்த மொழியாகவும் இருக்க முடியாது. அது ஆங்கிலமாகத்தான் இருக்க முடியும். ஆகவே அதை ஐந்தாவது வகுப்பிலிருந்து சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே ஆங்கிலத்தை புறக் கணிப்பது என்பது அல்ல. சில இடங்களில் பிரசாரம் செய்து வரு வதைப் பார்த்தால் ஆங்கிலத்தை நாங்கள் ஏதோ புறக்கணிக்க ஏற்பாடு செய்யப்படுவதாகச் சொல்லப்படுகிறது. அப்படி இல்லை என்பதை வலி யுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆங்கிலம் வேண்டாம் என்று சிலர் சொல்லுகிறார்கள். கனம் லட்சுமணசாமி முதலியார் அவர்களே தாங்கள் செகண்டரி எடுகேஷன் கமிஷன் தலைவராக இருக்கும்போது அவர் கொடுத்த ரிபோர்ட்டிலேயே அவர் குறிப்பிட்டிருக்கிறார். ஆங்கிலம் அவசியம் இல்லை என்பதைப்பற்றி அவரே குறிப்பிட்டிருக்கிறார். அவரே என்ன சிபாரிசு செய்திருக்கிறார் என்றால் ஆங்கிலம் கட்டாயமாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை, அவசியமானால் வேறு எதையாவது படிக்க லாம், ஹிந்தி வேண்டுமானாலும் படிக்கலாம். பள்ளிக்கூடங்களில் ஆங்கிலம் கட்டாய மொழியாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்று சிபாரிசு செய்திருக்கிறார். அவர் குறிப்பிட்டிருப்பதாவது :

"It may be provided that English is not to be treated as a compulsory subject of study if the pupil or guardian does not wish it to be studied. In the case of those pupils who do not desire to study English, an alternative arrangement should be made for the study of another language in schools which provide for the study of English on an optional basis. There should also be alternative arrangements for an advanced course in the mother-tongue for those who do not take the optional course in English . . ."

ஆகவே ஆங்கிலப் பாடம் வைக்கவேண்டியது அவசியம் கிடையாது என்று வெளியிட்டிருக்கிறார். இப்பொழுதுள்ள பாட திட்டத்தின்படி வேறு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டிய அவசியம் இல்லை, ஆங்கிலத்தை உயர்நிலை பள்ளியிலேயே கற்றுக்கொள்வதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஆகவே அதற்கு மேல் சர்வகலாசாலையில் போய்ச் சேரக்கூடிய மாணவர்களுக்கு ஆங்கிலப் படிப்பு இருக்கும். ஆங்கிலம் இல்லை என்று சொன்னால் அவர்களால் சர்வகலாசாலைகளில் போய் சேர முடியாது. அப்படிப்பட்ட மாணவர்களும் இருக்கமாட்டார்கள். தனியாகத்தான் ஏற்பாடு செய்துகொள்வதாக இருக்கும். ஆகவே, மேல் படிப்புக்கு இது அவசியம் என்ற காரணத்தால்தான் மூன்று மொழிகளையும் கற்றுக் கொள்வதற்கு வசதி செய்யப்படுகிறது. முன்கூட்டியே அதற்காகத்தான் ஆங்கிலத்தை கட்டாயப் பாடமாக செய்யப்பட்டிருக்கிறது. ஆங்கிலத்திற்கு நாங்கள் விரோதமாக இருக்கிறோம் என்று சொல்ல முடியாது. நன்றாகப் படித்து முன்னேறுவதற்கு இது அவசியம் என்று கருதிதான் இந்த அடிப்படையில் செய்ய முன்வந்திருக்கிறோம்.

5-00 p.m. அடுத்தாற்போல் இன்னொரு முக்கியமான விஷயம் இருக்கின்றது. சர்வகலாசாலைகளிலே எப்படிப் பட்டப்படிப்பு இருக்கவேண்டும் என்பதைப் பற்றிக்கூட நாம் யோசிக்க வேண்டியது அவசியம். அதைக் கடைசியிலே முடிவு செய்யவேண்டியவர்கள் யூனிவர்சிட்டிதான். இருந்தாலும் நாமும்

26th April 1960] [Sri C. Subramaniam]

ஆலோசனை சொல்லலாம். இன்றைக்கு முக்கியமாக கவனிக்கவேண்டியது, இப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையிலே, 15 வருடம் படித்த பிறகுதான் பட்டம் கிடைக்கிறது. பள்ளிக்கூடத்திலே 11 வருடம், முன்பு 2 வருடம் **Intermediate,** 2 வருடம் **Degree Course.** இப்பொழுது ஒரு வருடம் **Pre-University Course,** 3 வருடம் **Degree Course.** இப்பொழுது நாம் ஏற்பாடு செய்துகொண்டுள்ளபடி, **Pre-University Course**-ஐ 11 வருடங்களிலேயே முடித்து விடுகின்றோம். பிறகு 3 வருடங்களிலேயே **Degree Course**-ஐ முடித்துவிடுகின்றோம். ஆக 14 வருடங்களிலே பட்டம் கிடைக்கின்ற மாதிரி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. தமிழ் மொழியிலேயே எல்லா பாடங்களையும் படித்தால், சுலபமாகப் படிக்கலாம். ஆகவே **B.A.** படிப்பைப் பொறுத்த வரையிலும் 14 வருடங்களாக இருப்பதால் படிப்பின் தரம் குறைந்து விடாது. ஆனால் விஞ்ஞானப் படிப்பை, ஆங்கிலத்திலே படிக்க வேண்டும் என்று சொல்கிற காலத்திலேயும், அதை நன்றாக படிக்க வேண்டும் என் பதற்காக என்னுடைய தாழ்மையான அபிப்பிராயத்தைச் சொல்கிறேன். **Pre-University** படித்த பிறகு, மேலும் ஒரு வருடம் **Pre-University** மாதிரி வைத்தால், விஞ்ஞானப் படிப்பின் தரம் உயரும். இப்பொழுது இருப்பதைப் போலவே 15 வருடப் பட்டப்படிப்பாகவும் இருக்கும். இதை இப்பொழுது ஒப்புக்கொள்ளாவிட்டாலும், பிறகு ஏற்படக்கூடிய சங்கடங்களை பார்த்த பிறகு ஒப்புக்கொள்வார்கள் என்பது என்னுடைய நம்பிக்கை. ஆங்கிலம் போதன மொழியாக இருந்தாலும், தமிழ் போதன மொழியாக இருந்தாலும், விஞ்ஞானப் படிப்புக்கு ஒரு வருடம் படிப்பது, விஞ்ஞானப் பயிற்சிக்கு வாய்ப்பாக இருக்கும் என்று நான் கருதுகிறேன்.

இப்பொழுது ஆனர்ஸ் படிப்புக்கு, **Pre-University**-க்கு ஒரு வருடம், **B.A.** அல்லது **B.Sc.**-க்கு 3 வருடம், அதன் பிறகு இரண்டு வருடம் படிக்க வேண்டும் **M.A., M.Sc.** போன்ற படிப்புக்கு. முன்பு **Intermediate** படித்த பிறகு 3 வருடம் ஆனர்ஸ் கோர்ஸ் என்று வைத்திருந்தார்கள். அதில் மிகவும் கெட்டிக்காரப் பையன்கள் எல்லாம் சேருவதற்கு வாய்ப்பு இருந்தது. இப்பொழுது பிரியூனிவர்சிடி வகுப்பு படித்த பிறகு, ஒரு பையன் முதல் தரத்திலே இருந்தாலும், இரண்டாவது தரத்திலும், மூன் ருவது தரத்திலே இருந்தாலும், எல்லோருமே **B. A., B. Sc.**-ல் தான் சேர்ந்தாகவேண்டும். எனவே எல்லோரும் பொதுவாக நினைக்கிறார்கள், முதல் வகுப்பிலே தேறினாலும், மூன்றாவது வகுப்பிலே தேறினாலும், **B. A., B.Sc.** ஒன்றாகத்தானே படிக்கவேண்டும். எனவே, இன்ஜினியரிங் கல்லூரிக்கு, மெடிகல் கல்லூரிக்கு போகப் பிரியப்படுகிறார்கள். அது அவ சியம்தான். ஆனால், **B.A., B.Sc.** வகுப்புகளில் நல்ல மாணவர்கள் இருந்தால்தான் நல்ல ஆசிரியர்கள் கிடைக்க முடியும். கணிதம், சரித்தி ரம் போன்ற துறைகளிலும் தரம் உயர முடியும். ஆகவே ஆனர்ஸ் கோர்ஸ் என்று வைப்பது நல்லது. இப்பொழுது ஆந்திரா யூனிவர்சிட்டி யிலே 3 வருடப் பட்டப்படிப்புடன், **B. Sc. (Hons.), B.A.(Hons.)** படிப்பை யும் வைத்திருக்கிறார்கள். பிரியூனிவர்சிட்டி வகுப்புக்குப் பிறகு 4 வருடப் படிப்பாக ஆனர்ஸ் வகுப்பு வைத்தால், முதல்தரமான மாணவர்கள் படிப்பதற்கு சவுகரியமாக இருக்கும் என்று வலியுறுத்திக் கூறிக்கொள் கிறேன். இதையெல்லாம் சொல்வதால், யூனிவர்சிட்டி விஷயங்களிலே கல்வி மந்திரி, அரசியல் வாதி புகுந்து பேசுகிறார் என்று நினைக்கக்கூடாது. இது என்னுடைய கருத்து. இதிலே நாம் சிந்தனை செய்து ஒப்புக்கொள்ளக் கூடிய கருத்துக்கள் இருக்கின்றனவா என்பதை யூனிவர்சிட்டி மாளிகை யிலே இருப்பவர்கள் யோசனைசெய்து பார்க்கவேண்டும் என்று என்னு டைய தாழ்மையான கருத்துக்களை அவர்களுக்கு சமர்ப்பிக்கின்றேன். இதை அரசியல்வாதி சொல்கிறான் என்று ஒதுக்கிவிடாமல், இதிலே உண்மை இருக்கிறதா என்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள் கிறேன்.

வெறும் பட்டப்படிப்போ, விஞ்ஞானப் படிப்போ மட்டும் அவசியமில்லை. தொழில்படிப்பும் அவசியம் என்ற காரணத்தாலே 11-வது படிப்புக்குப் பிறகு, பாலி டெக்னிக்கிலே படிப்பதற்கு, பாலிடெக்னிக்குகளை பெருக்கிக் கொண்டு வருகிறோம்.

[Sri C. Subramaniam] [26th April 1960

அவற்றிலே இன்றைக்கு ஆயிரக்கணக்கான மாணவர்கள் திருப்பப் படுகிறார்கள். அது மிகவும் சிறந்தது என்பது என்னுடைய தாழ்மையான கருத்து.

அதேபோல பல இன்ஜினீயரிங், விவசாயம், வெட்டரிநெரி கல்லூரிகள் இருக்கின்றன. அவற்றுக்கு மாணவர்கள் போகிறார்கள் என்றால் போக வேண்டியது அவசியம். வெறும் பட்டப்படிப்பை படித்துவிட்டு, அதிலே வேலை வாய்ப்பு இல்லை என்றால் அதன் மூலம் இன்னும் கஷ்டம்தான் ஏற்படும் என்பதை மனதிலே வைத்துக்கொள்ளவேண்டும். எனவே பாலி டெக்னிக்குகள், இன்ஜினீயரிங் கல்லூரி, மெடிகல் கல்லூரி, விவசாயக் கல்லூரி, வெட்டரிநெரி கல்லூரி போன்றவை மேலும் மேலும் அதிகமாகிக் கொண்டேதான் இருக்கும். ஆகவே, அதிலே படிக்கின்றவர்கள் அதிகமாக அதிகமாக, வெறும் பட்டப்படிப்புக்கு மட்டும் என்று இல்லாமல், எல்லா தொழில்களுக்கும் போவதற்கு அவர்களுக்கு பல்வேறு துறைகளிலே வேலை கிடைக்கும். வேலை இல்லை என்ற நிலைமையை ஏற்படுத்தாமல் செய்வதற்கு அதுதான் தகுந்த திட்டம் என்பதை மனதிலே வைத்துக் கொள்ளவேண்டும்.

எல்லோருக்கும் படிப்பு சொல்லிக் கொடுத்தவுடனே நம்முடைய பிரச்சினை தீர்ந்துவிடும் என்று சில பேர் நினைக்கிறார்கள். அப்படி பிரச்சினை தீருவதாக இருந்தால், இன்றைக்கு கோளத்திலே உடனடியாக தீர்ந் திருக்கும். ஏனெனில் அங்கே இருக்கக்கூடிய படிப்பின் அளவு வேறு எங்கேயும் இல்லை. ஆனால் அங்கேதான் பிரச்சினைகள் அதிகமாக இருக் கின்றன. படிக்காதவர் வேலை இல்லாமல் இருந்தால், ஏதோ நம்முடைய தலைவிதி, வேறு வேலை ஏதாவது செய்யலாம் என்று இருப்பர். ஆனால் படித்தும், வேலை வாய்ப்பு இல்லை என்றால் அதனால் பெரும் பிரச்சினைகள் ஏற்படுகின்றன என்பதைப் பார்க்கின்றோம். ஆகையினாலே, கல்வியை நாம் பரவலாக பரப்பிக்கொண்டு வரும்பொழுதே, மற்ற துறைகளிலும் அபிவிருத்தி ஏற்படுத்திக்கொண்டு போனால்தான், வேலை வாய்ப்புகளை ஏற்படுத்தி, தொழில்களை அமைத்தால்தான் படிப்பினால் நல்ல பலன் ஏற்படுமே தவிர, அப்படிச் செய்யாவிட்டால் நல்ல பலன் ஏற்படாது. படிப்பைமட்டும் பரப்பினால் நன்மையில்லை. மனிதனுக்கு மூளைமட்டும் பெரிதாக இருந்து, உடல் சிறுத்து இருந்தால் நல்லதா. உடல் பெருத்து இருந்து மூளை சிறியதாக இருந்தாலும் பிரயோசனம் இல்லை. உடல் பெருத்து இருதயம் இல்லாமல் இருந்தாலும் பிரயோஜனம் இல்லை. இந்த மூன்றும் சமமாக பெருக்கக்கூடிய அளவிலேதான் மனிதனின் வாழ்க்கை சிறப்பாக அமையும். அறிவு, திறமை, பண்பு, இந்த மூன்றும் சேர்ந்து வளர்ந்தால், அதன்மூலம் கல்வியின் தரம் உயரும். அதன் மூலம் சமுதாயத்துக்கு நல்ல பலன் விளையும்.

எல்லாப் பள்ளிக்கூடங்களையும் சர்க்காரே எடுத்துக்கொண்டு, அதிலும் ஒவ்வொரு கிராமத்திலேயும் பள்ளிக்கூடம் ஏற்பாடு செய்யவேண்டும் என்று சொல்லும்போது, அதிலே வெற்றி காண்பது மிகவும் கஷ்டமான காரியம்.

இன்றைக்கு அநேக பள்ளிக்கூடங்களை பல தனிப்பட்டவர்கள் நடத்திக் கொண்டு வருகிறார்கள். தனிப்பட்டவர்களிடத்தில் இருந்த பள்ளிக்கூடங் களை விடக்கூடாது, நாமே எடுத்து நடத்தவேண்டும் என்பது திரு. கல்யாண சுந்தரம் அவர்களின் கருத்து. அவருடைய கட்சிக் கொள்கையும் அது தான். ஆனால் நாம் நினைப்பது, அவர்களை அப்படி விலக்கவேண்டியது அவசியமில்லை. அவர்களில் பலபேர் நல்ல பள்ளிக்கூடங்களை நடத்திக் கொண்டு வருகிறார்கள். முன்பு எல்லாம் சொல்லுவார்கள், ஜில்லா போர்டு பள்ளிக்கூடங்கள் மிகவும் மோசம் என்று. ஆனால் இன்றைக்கு பல ஜில்லா போர்டு பள்ளிக்கூடங்களிலே முதல் தரமாகத் தேறக்கூடிய வர்கள், அதிகமாகத் தேறக்கூடியவர்கள் இருப்பதைப் பார்க்கிறேன். கிராமப்புரங்களிலே உள்ளவர்கள் இப்படிச் செய்திருக்கிறார்கள். யாரோ ஒரு கேள்விகூட கேட்டிருக்கிறார்கள், 60 சத விகிதத்திற்கு மேல் மாண வர்கள் எந்தப் பள்ளிக்கூடங்களில் தேறியிருக்கிறார்கள் என்று. அதற்கு சீக்கிரத்திலே விடை வரப்போகிறது. கிராமங்களிலேயுள்ள பள்ளிக்கூடங்கள் இன்றைக்கு நல்ல முறையிலே முன்னுக்கு வந்திருக்கின்றன. ஆகையி

26th April 1960] [Sri C. Subramaniam]

ணுலே நாம் தனிப்பட்டவர்கள் பள்ளிக்கூடங்களை ஒன்றுமே செய்யக்கூடாது என்பது என் கருத்து அல்ல. அதை ஒரு தொழிலாக, வியாபாரமாக வைத்துக்கொண்டு, அதன் மூலம் பொருள் சம்பாதிக்க வந்தால், அதை தடுக்கவேண்டும். கல்வியிலே வியாபாரம் கூடாது. இன்றைக்கு தனிப் பட்ட ஸ்தாபனங்கள் முன்வந்து நல்ல பள்ளிக்கூடங்களை நடத்துகிருர்கள். பல கிறிஸ்துவ மிஷனரிகள் பள்ளிக்கூடங்களை உண்மையிலேயே பாராட்டக் கூடிய வகையிலே, உயர்ந்த தரமுள்ள படிப்பை சொல்லிக்கொடுப்பதைப் பார்க்கிரேம். கம்யூனிஸ்ட் கொள்கைப்படி மதமே கூடாது என்று சொல்ல லாம். ஆனல் ஒழுக்கமுள்ள கல்வி, கட்டுப்பாடு உள்ள கல்வி, அவர்களால் போதிக்கப்படுவதை மறுக்க முடியாது. அதேபோல ராமகிருஷ்ண மிஷன் பள்ளிக்கூடங்கள் நடத்துகிருர்கள். எல்லோரும் போற்றக்கூடிய வகை யிலே, எந்த மாதிரி கல்வி இருக்கவேண்டும் என்று விரும்புகிரேமோ அதே மாதிரி கல்வியை ராமகிருஷ்ண மிஷன் நடத்துகிருர்கள். தனிப்பட்ட வர்களாக இருப்பினும் இதுதான் எங்களுடைய வாழ்க்கை லட்சியம் என்ற முறையிலே நடத்துகிருர்கள். ஆகையால், தனிப்பட்டவர்களுடைய பள்ளிக் கூடமே கூடாது என்று சொல்வதை நான் ஏற்றுக்கொள்வதற்குத் தயாரா யில்லே. ஆனல், பள்ளிக்கூடத்தை வைத்தே தொழில் நடத்தவேண்டு மென்று முன்வருவார்களானல், அவர்களைத் தடுக்க வேண்டியது மிகவும் அவசியம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

Sri M. KALYANASUNDARAM : அந்த அளவுக்கு இருந்தாலும் சரி.

The Hon. Sri C. SUBRAMANIAM : எந்த அளவுக்கு ஏகோபித்த கருத்து இருக்கிறது, எந்த அளவுக்கு கருத்து ஒற்றுமை இருக்கிறது என்று பார்த்துச் செய்ய வேண்டியது அவசியம். தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிக்கூடங்களிலுள்ள ஆசிரியர்களும் நன்ருக வேலே செய்ய வேண்டும். மானேஜ்மென்டார்களும் அவர்களை நன்ருக நடத்த வேண்டும். அந்த உறவு இருந்தால்தான் பள்ளிக்கூடம் நன்ருக நடக்கும். மானேஜ்மென்ட் செய்வது யாராயிருந்தாலும், லோகல் பாடிகளாக இருந் தாலும் சரி, தனிப்பட்டவர்களாக இருந்தாலும் சரி, கவர்ன்மென்ட் நடத்து கிறதாக இருந்தாலும் சரி, மானேஜ்மென்டுக்கும் ஆசிரியர்களுக்கும் நல்ல உறவு இருக்க வேண்டும். அதை வளர்க்க நல்ல ஏற்பாடு செய்யவேண்டு மென்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். மானேஜ்மென்டார்கள் ஊழல் களோடு நடத்துகிறவர்களாக இருந்தால், அப்படிப்பட்ட ஊழல்களைக் களைந்து எறிவோமானல் தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிக்கூடங்களில் இருக்கும் ஆசிரியர்களுக்கும், மானேஜ்மென்டுக்கும் இருக்கும் பல நெருக்கடியான நிலைமைகளைத் தடுத்துவிட முடியும் என்பது என்னுடைய கருத்து. அதைப் பற்றி நாம் யோசித்து அந்த முறையில் ஒரு முடிவு எடுக்கவேண்டும்.

அம்மாதிரி ஒரு முடிவு எடுக்கும்போது, ஆசிரியர்களும் நன்ருக வேலே செய்யும்படியாகப் பார்க்கவேண்டும். இன்றைக்கு ஆசிரியர்களுக்குப் பல சௌகரியங்கள் செய்து கொடுக்கவேண்டுமென்று சொல்கிரேம். அவர்கள் தான் பள்ளிக்கூடத்தை நடத்தி, குழந்தைகளுக்கு நல்ல படிப்புச் சொல் லிக் கொடுக்கக்கூடியவர்கள் என்றாலும், அவர்கள் சரியாகப் பாடம் சொல் லிக் கொடுக்கிருர்களா என்று பார்க்க வேண்டியது அவசியம். அவர்க ளுக்குப் பூரா சுதந்திரம் கொடுத்து, எல்லா விதமான சலுகைகளும் கொடுத்து, அவர்கள் பிள்ளைகளுக்குச் சரியாகப் பாடம் சொல்லிக்கொடுக்க வில்லேயென்ருல், அதனல் பலன் இல்லாமல் போய்விடுகிறது. அவர் களுக்குச் சுதந்திரம் கொடுக்கவேண்டும், அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயரவேண்டும் என்ருல், அவர்கள் ஆசிரியத் தொழிலே இப்பொழுது செய் வதைவிட இன்னும் நன்ருக, இன்னும் திறமையாகச் செய்யவேண்டும் என் பதற்காக இதையெல்லாம் செய்யவேண்டுமென்று நினைக்கிரேம். ஆகையால், அந்த முறையில் அவர்களுக்கு எல்லாவிதமான ஊக்கத்தையும் கொடுக்கும் போது, அதே சமயத்தில் அவர்களும் தங்களுடைய கடமைகளை நன்ருக ஆற்றவேண்டும் என்பதை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். சுமார் 90 ஆயிரம் முதல் ஒரு லட்சம் ஆரம்ப ஆசிரியர்கள் வேலே செய்கிருர்கள். இந்த ஒரு லட்சம் பேர்களும் ஒரு லட்சிய அடிப்படையில் வேலே

[Sri C. Subramaniam] [26th April 1960

செய்கிறார்கள் என்று சொல்வதற்கு நான் தயாராயில்லை. ஆசிரியர்களுக்கு மானேஜ்மெண்டாரால் ஏற்படும் குறைகளைத் தெரிவித்தார்கள். அவைகளை நாம் களைந்தெரிய நடவடிக்கை எடுப்பது அவசியம்தான். ஆனால், ஆசிரியர்கள் பேரில் குறை இருந்து, நடவடிக்கை எடுக்கும்போது, வீணாக நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள் என்று சொல்லும் நிலைமை வந்துவிடுகிறது. நல்ல வேலை செய்கிற ஆசிரியர்களை வெளியே அனுப்புவதும் இருக்கிறது. இதெல்லாம் பார்த்து, கூடியவரையில், நன்றாக, சுமுகமாக நடக்கும் ஏற்பாட்டைச் செய்வதன் மூலமாகத்தான் இதைச் சமாளிக்க முடியும் என்பது என்னுடைய கருத்து.

நாம் பள்ளிக்கூடங்கள், அதிலும் முக்கியமாக, ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் பரவலாக இருந்து அவைகளை கண்காணித்து நடத்துவதைவிட, குறுகிய அளவு இருந்து கண்காணிப்பு இருக்குமாறு ஒரு நல்ல முடிவை எடுத்திருக்கிறோம். பஞ்சாயத்து யூனியன் மூலமாக சிறிய வட்டாரங்களிலே நடத்திவிடலாம் என்று முடிவு எடுத்திருக்கிறோம். இது புதிய பரீட்சை. அந்தப் பரீட்சை எப்படி நடக்கிறது என்று பார்க்கவேண்டும். மக்கள் பிரதிநிதிகள் இருந்து நடத்தும் காரணத்தால், அது நன்றாக நடைபெறும் என்ற நம்பிக்கை இருக்கிறது. கல்வி முன்னேற்றத்தில் அதிக அக்கறை கொண்டிருப்பதால், மக்களுடைய பிரதிநிதிகள் இதை நன்றாகக் கண்காணித்து நன்றாக நடத்துவார்கள். அந்த அடிப்படையிலே வரும்போது நாம் செய்யும் பல்வேறு மாறுதல்களை அந்த நேரத்தில் செய்ய முடியும். தனிப்பட்டவர்கள் நன்றாக நடத்துகிறார்களா இல்லையா என்று எப்படிப் பார்ப்பது, சம்பளம் எப்படிக் கொடுப்பது என்பதெல்லாம் அந்தக் காலத்தில் நன்றாக முடிவு செய்ய முடியும் என்று நம்புகிறேன். இரண்டு, மூன்று வருஷங்கள் சில சிக்கல்கள் இருந்தாலும்கூட, பஞ்சாயத்து யூனியன் அமைந்து, ஆரம்பக் கல்வியை அவர்கள் எடுத்து நடத்தும்போது, பல சிக்கல்கள் நீங்கி, ஒரு நல்ல அடிப்படையிலே கல்வித் திட்டத்தை அமைக்க முடியும் என்று நான் நம்புகிறேன். அதிலே ஏதாவது குற்றம் குறை இருந்தால், அதைத் திருத்துவதற்கும் நாம் முயற்சிக்கவேண்டும்.

கடைசியிலே, இந்த அமைப்புகளெல்லாம் ஒரு புறமிருக்க, மக்கள் எந்த அளவு கல்வியிலே ஆர்வம் கொண்டிருக்கிறார்களோ அந்த அளவுக்குத்தான் கல்வி வளம்பெற முடியும் என்பதைப் பார்க்கிறோம். அந்தப் புதிய உணர்ச்சியைத்தான் மக்கள் மத்தியிலே நாம் பார்க்கிறோம் என்பதையும் இந்தச் சமயத்தில் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

அதிலும் முக்கியமாக, இன்றைக்கு எல்லாக் குழந்தைகளும் பள்ளிக்கூடத்திற்கு வரவேண்டும் என்று நாம் ஒரு முக்கியமான முடிவு எடுத்துக்கொள்ளும்போது, பள்ளிக்கூடத்திற்கு வரவேண்டுமென்றால் மத்தியான சாப்பாடு போட்டுத்தான் ஆகவேண்டும் என்ற முடிவுக்கு வந்து, அது பரீட்சைப் பண்ணிப் பார்த்து, சரி என்பதையும் நாம் முடிவு செய்திருக்கிறோம். அதோடு மட்டுமல்ல. பையனாக இருந்தால், அவன் எப்படியாகிலும் கோவணம் கட்டிக்கொண்டு வந்தாலும் பரவாயில்லை; ஆனால், பெண் குழந்தைகள் பள்ளிக்கூடம் வரும்போது ஒரு சிறிதளவாவது உடம்பை மறைக்க உடை அவசியம். ஆகையால், மிகவும் ஏழையாக இருக்கும் குடும்பத்திலேயிருந்து பெண் குழந்தைகள் பள்ளிக்கூடத்திற்கு வந்து சேரவேண்டுமென்றால், உடை தானம் ஏற்பாடு செய்துதான் ஆகவேண்டும். அதற்கு ஏற்பாடு செய்கிற முறையில் இப்பொழுது ஆரம்பம் செய்யப்பட்டிருக்கிறது. அத்துடன், வெறும் பள்ளிக்கூடம் மட்டுமல்ல; பள்ளிக்கூடத்திற்கு எல்லாவிதமான சௌகரியங்களும் வேண்டுமென்ற முறையிலே அதையும் மக்கள் செய்து வந்திருக்கிறார்கள். இந்த மூன்றும் மக்களே ஏற்றுக்கொண்டு செய்யவேண்டிய நிலைமையைப் பார்க்கிறோம்.

அதிலே முக்கியமாக, இன்றைக்குக் கொடுத்திருக்கும் வெட்டுப் பிரேரணை, மதிய உணவைப்பற்றியதும், பள்ளிச் சீரமைப்பு இயக்கத்தைப் பற்றியதும் ஆகும். இது வெற்றிகரமாக நடக்கவேண்டுமென்றால், இதிலே ஆசிரியர்கள் பொறுப்பு எடுத்துக்கொள்வதிலே ஏதாவது தவறு இருக்கிறதா என்பதைக் கொஞ்சம் யோசித்துப் பார்க்கவேண்டும். அதிலே கனம் அங்கத்தினர்கள் திரு எம். பி. சுப்பிரமணியம் அவர்களும், திரு அன்பழகன்

அவர்களும் பேசும்போது சொன்னார்கள்—பள்ளிக்கூடங்களை மூடிவிட்டு இந்தக் காரியத்திற்காக ஆசிரியர்கள் போகிறார்கள் என்று. அது எவ்வளவு தூரம் உண்மை என்று சொல்ல முடியாது. அப்படியே மூடிவிட்டு போனாலுங்கூட, இது நல்ல காரியம் என்பது என்னுடைய கருத்து. ஏனென்று சொன்னால், தேவையான சாமான்கள், சௌகரியங்கள் எல்லாவற்றையும் தேடி வைத்துக்கொள்ள ஒரு வாரத்திற்கு பள்ளிக்கூடத்தை மூடினாலுங் கூட, பின்னால் சரிசெய்துகொள்ள முடியும். சௌகரியம் ஏதும் செய்து கொள்ளாமல், குழந்தைகளை பட்டினி போட்டு, அங்கு எந்தவிதமான உபகரணமும் இல்லாமல், துணைக் கருவிகள் இல்லாமல், ஒரு வருஷம் சொல்லிக் கொடுப்பதைவிட ஒரு வாரம் பள்ளிக்கூடத்தை மூடிவிட்டு, அதற்குள் இதற்கெல்லாம் ஏற்பாடு செய்யும்போது, ஒரு வாரம் குறைவாகப் பள்ளிக்கூடம் நடந்தாலும் நல்லது என்பது என்னுடைய கருத்து. ஆனால், இன்னொன்றும் பார்க்கிறோம், ஆசிரியர்கள் இதிலே ஈடுபடும் காரணத்தால் முன்னால் பல கட்சிகளின் கொடிகளைத் தூக்கிக்கொண்டு சென்றதையும் பார்த்திருக்கிறோம்—அரசியலில் ஈடுபடுவதும் ஆசிரியர்களிடையே குறைந்திருக்கிறது என்பதையும் பார்க்கிறோம்.

**Sri M. KALYANASUNDARAM** : *அதற்காகத்தான் இதை நடத்துகிறீர்களா ?*

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அதற்காக நடத்துவது என்பது இல்லை. அதற்காக நடத்தாவிட்டாலும், இந்தத் திட்டத்தினால் இரண்டு மூன்று விதமான நன்மைகள் வருவதைப் பார்க்கிறோம். அரசியல் கட்சி வேலைகளில் ஈடுபடுவதும் ஆசிரியர்களைப் பொறுத்தவரையில் குறைந்திருக்கிறது. அதிலேதான் சில பேருக்கு ஆத்திரம் கூட வருகிறது. தம் பின்னால் திரிந்துகொண்டிருந்தவர்கள் வேறு எங்கோ போகிறார்கள் என்றால் அவர்களுக்கு ஆத்திரம் வந்துவிடுகிறது. இந்தத் தீர்மானத்தையும் கல்வி இலாகா டைரக்டரையும், கல்வி இலாகாவில் நடக்கும் பல்வேறு விஷயங்களையும் கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்கள் எதற்காக இவ்வளவு தாக்குகிறார்கள் என்று நான் யோசித்தேன். என்னைத் தாக்குவது மட்டுமல்ல ; இங்கே தாக்குவது மட்டுமல்ல ; பத்திரிகையிலும் தாக்கியிருக்கிறார்கள் ; பேச்சிலும் தாக்கியிருக்கிறார்கள். இது ஏன் என்று இதுவரை எனக்குப் புரியாமல் இருந்தது. ஆனால், இன்றைக்கு அவர் வெட்ட வெளிச்சமாகச் சொல்லிவிட்டார்கள். அவருடைய மனதிலே இதெல்லாம் காங்கிரஸ் பிரசாரமாகக் காட்சியளிக்கிறது. அந்தக் கண்ணோடு பார்க்கும்போது ஒவ்வொன்றும் அம்மாதிரி படுகிறது. மத்தியான சாப்பாடு போடுவதற்கு ஏற்பாடு செய்கிறோம் என்றால், அது எந்த அரசாங்கத்திலே நடக்கிறது ? காங்கிரஸ் கட்சி நடத்துகிற அரசாங்கத்திலே நடக்கிறது ; காங்கிரஸ் கட்சி நடத்துகிற அரசாங்கத்திலே இம்மாதிரி நல்லது நடந்தால் காங்கிரஸ் கட்சி இன்னும் பலமாகப் போய்விடுமே ; ஆகையால், இது ஒரு காங்கிரஸ் திட்டம் என்ற முடிவுக்கு வந்துவிடுகிறார்கள். இரண்டாவது, பள்ளிச் சீரமைப்பு இயக்கம். இதிலும் மக்களைக் கூட்டி வைத்து, பள்ளிக்கூடங்களை நன்றாக நடத்துவதற்கு இவ்வளவு பெரிய திட்டமாக இருக்கிறதே என்று யோசிக்கிறார்கள். இதையும் காங்கிரஸ் கட்சி நடத்துகிற அரசாங்கம் செய்வதால், இதையும் காங்கிரஸ் கட்சியின் திட்டம் என்று கருதுகிறார்கள். இப்படியே விட்டுக்கொண்டு போனால், காங்கிரஸ் கட்சி மேலும் மேலும் பலமாகிவிடுமே, அப்பொழுது தங்களுடைய கட்சி என்ன ஆவது என்று அந்தக் கண்ணோட்டத்தில் பார்க்கிறார்கள். புதிதாக, உடைதானம் என்றும் வந்துவிட்டதே, இதனால் யாருக்குப் பெயர் வருகிறது என்று பார்க்கிறார்கள் அவர்கள். காங்கிரஸ் கட்சி நடத்தும் அரசாங்கமாக இருப்பதால், காங்கிரஸ் கட்சிக்கு இன்னும் பலம் வந்துவிடுகிறதே என்று அவர்கள் நினைக்கிறார்கள். மேலும், எலெக்ஷனுக்கு இரண்டு வருஷம் தான் இருக்கிறது. அப்பொழுது தம் கட்சி என்ன ஆவது என்ற பிரமை பிடித்துவிடுகிறது அவர்களுக்கு. இந்தப் பிரமையை வைத்துக்கொண்டு அவர்கள் பார்க்கும்போது, எல்லாம் பூதமாகக் காட்சியளிக்கிறது. தன்னை அழிக்க வருகிற, தன் கட்சியை அழிக்க வரும் பூதமாகக் காட்சி அளிக்கிறது. அந்தச் சமயத்தில் நினைத்தபடியெல்லாம் பேசுகிறார்கள் என்றால், பயங்கரமான கனவு காணும்போது உளருகிறோம் அல்லவா, அது போல. . . .

[26th April 1960

SRI M. P. SUBRAMANIAM : பாயிண்ட் ஆப் ஆர்டர், ஸார், அமைச்சர் அவர்கள், "கண்டபடி உளருவது" என்று சொல்வது சட்ட சபையிலே பொருத்தமா என்று அறிய விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : கனம் அங்கத்தினர்களைப்பற்றி அமைச்சர் அவர்கள் சொல்லவில்லை.

SRI M. P. SUBRAMANIAM : கனவு கண்டுவிட்டு உளறுகிறார்கள் என்று இங்கே குறிப்பிட்டார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கல்வி இலாகா டைரெக்டரைக் குறித்து பேசும்போது, அவர் காங்கிரஸ் பிரசாரகர் ஆய் விட்டாரா என்று கேட்கிறார் என்றால், அவரைப் பார்த்தாலும் பூதமாகக் காட்சியளிக்கிறது அவருக்கு. ஒவ்வொரு திட்டமும் அவருடைய கட்சிக்கு எதிரான திட்டமாக அவருக்குக் காட்சியளிக்கிறது. இன்னொரு கட்சியி லுள்ளவர் சொல்லுகிறார்கள் என்பதற்குப் பயந்து, இப்படிப்பட்ட நல்ல திட்டங்களைப் போடாமல் நாங்கள் இருந்துவிட முடியாது. நல்ல திட்டங் களைப் போடுவதால், பிற கட்சிகளுக்கு வோட்டு வராமல் போய்விடும் என்று சொல்கிறார்கள் என்பதற்காக நாங்கள் அவைகளைப் போட்டு நடத்தாமல் இருக்க முடியாது. மக்களுடைய நன்மைக்காக எது செய்யவேண்டுமோ அதைச் செய்துகொண்டு தான் இருப்போம் என்று தெரிவித்துக் கொள்ளு கின்றேன்.

SRI K. ANBAZHAGAN : அமைச்சர் அவர்கள் பேசும் போது, ஏற்கனவே ஆரம்ப ஆசிரியர்களெல்லாம் சில கட்சிக்காக கொடி தூக்கிக்கொண்டு போனார்கள் என்று தெரிவித்தார்கள். அமைச்சர் அவர் கள் கல்வி அமைச்சராகவும் இருப்பதால், அவருக்கு அதிகப் பொறுப்பு இருக்கிறது. ஆரம்ப ஆசிரியர்கள் ஒரு கட்சியின் பின்னால் சென்று கொண்டிருந்தவர்கள், இப்பொழுது அரசாங்கத்திலுள்ள காங்கிரஸ் கட்சி யின் பின்னால் போய்க்கொண்டிருப்பதாகச் சொல்கிறார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதுவரையில் காங்கிரஸ் கட்சியானது அப்படிச் செய்தது கிடையாது. நான் ஒவ்வொரு இடத்திலும் முதலில் சொல்லி வருவது—ஆசிரியர்கள் எந்த அரசியல் கட்சியிலும் சேரக்கூடாது என்று தான். காங்கிரஸ் கட்சியாக இருந்தாலும், அதிலே கூட சேரக்கூடாது என்றுதான் வலியுறுத்திச் சொல்கிறேன். ஆகையால் காங்கிரஸ் கட்சி வேறு, கம்யூனிஸ்டுக் கட்சி வேறு, சோஷலிஸ்டுக் கட்சி வேறு, திராவிட முன்னேற்றக் கழகம் வேறு என்று நான் சொல்வதே கிடையாது.

அது ஒருபுறமிருக்க, இந்தக் கண்ணோட்டத்துடன் அரசாங்கம் போடும் திட்டத்தைப் பார்க்கும் காரணத்தால், இதிலே இத்தனை குறைகள் இருப்ப தாகத் தெரிகிறது. எதிர்க் கட்சியாக இருப்பவர்கள் என்ன குற்றத்தைக் கண்டு பிடிக்கலாம் என்று பார்த்து அந்த முறையில் சொல்லிக்கொண்டு வருகிறார்கள்.

கனம் அங்கத்தினர் திரு. எம். பி. சுப்பிரமண்யம் அவர்கள் பேசும் போது பள்ளிச் சீரமைப்பு மாநாடு பற்றிச் சொன்னார்கள். சாமான்களைச் கொண்டுவந்து வைத்துவிட்டு, பிறகு எடுத்துக்கொண்டு போய்விடுகிறார்கள் என்று சொன்னார்கள். ஆத்தூர் மாநாட்டில் அவர் வரவேற்புக் கமிட்டித் தலைவராக இருந்தார். ஒருவேளை அவர் அப்படித்தான் செய்தாரா என் பது எனக்குத் தெரியாது. அவர் மட்டுமல்ல. சில பேர்கள் முதலில் இதைப் பார்த்து நம்பவே இல்லை. நம் மக்களுக்கு இவ்வளவு தாராள மனப்பான்மை இருக்குமா, இந்தச் சாமான்கள் எவ்வளவோ பணம் பெறுமே, அவைகளைக் கொடுத்துவிடும் உணர்வு தமிழ் மக்களிடத்தில் இருக்குமா என்ற அவநம்பிக்கை பலருக்கு ஏற்பட்டது முதலில். ஆனால், இந்தத் திட்டம் மேலும் மேலும் வெற்றிகரமாக நடப்பதையெல்லாம் பார்த்துவிட்டு, சினிமாவில் வருவது போல் இருக்கிறதே, இது ஏதோ

